உ
சிவசண்முகன்றுணை.

# புள்ளிருக்குவேளூர்ப்புராணம்
என்னும்
# வயித்தீசுரன்கோயிற்புராணம்.



காத்தியாயனரிருப்பு
**வடுகநாததேசிகர்**
அருளிச்செய்தது.

இஃது,
திருக்கைலாசபரம்பரைப்
பொம்மையபாளையம்
ஸ்ரீசிவஞானபாலையதேசிகராதீனத்துச்
சிதம்பரம்
**இராமலிங்கசுவாமிகளால்**
பரிசோதிக்கப்பட்டு,
ஷ சுவாமிகள்மாணாக்கர்களிலொருவரும்
சிதம்பர சைவப்பிரகாச வித்தியா சாலை
உபாத்தியாயருமாகிய
சு - சொக்கலிங்கமுதலியாரால்

சென்னை:
ஜீவரக்ஷாமிர்த அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1886.

உ

சிவசண்முகன்றுணை.

# சிறப்புப்பாயிரம்.



திகழ்சிவ ஞான தேசிக னருளாற் றெளிந்துளஞ் சகல சாத் திரமும், புகழ்பெற வுணர்ந்தோ னட்சய லிங்கப் புண் ணிய முனிவரன் புகல, வகழ்கட லுலகில் வடமொழி வே ளூர்ப் புராணந்தென் மொழியினி லருளி, மகிழ்பெற வரங் கேற் றினனெழில் வடுக நாதன்வாழ் வள்ளிநா யகன்முன்.



உ

சிவசண்முகன்றுணை.



# சருக்கவகராதி.


| பக்கம். | சருக்கம். | பாடற்றொகை. |
|---|---|---|
| ௧௩௪ | அங்கசந்தானச்சருக்கம். | ௧௩ |
| ௧௮௫ | அங்காரகனருச்சனைசெய்சருக்கம். | ௨௯ |
| ௧௬௦ | அசரீரிவாக்களித்தசருக்கம். | ௧௯ |
| ௧௧௬ | ஆதிகாவிரிச்சருக்கம். | ௭ |
| ௧௭௯ | ஆதித்தனருச்சனைசெய்சருக்கம். | ௨௦ |
| ௧௩௧ | இந்திரன்சாபநீங்குசருக்கம். | ௯ |
| ௭௨ | இரணியவன்மச்சருக்கம். | ௧௨ |
| ௧௦௯ | இராமதீர்த்தச்சருக்கம். | ௧௮ |
| ௫௫ | இருடியர்முறைமைகூறியசருக்கம். | ௧௧ |
| ௨௨௪ | உதங்கச்சருக்கம். | ௧௧ |
| ௧௨௯ | எண்டிசைமகிமைகூறியசருக்கம். | ௧௦ |
| ௫௮ | கங்கைபாவந்தீர்ந்தசருக்கம். | ௯ |
| ௧ | கடவுள்வணக்கம். | ௧௮ |
| ௧௧௮ | கந்தருவர்சாபநீங்குசருக்கம். | ௧௨ |
| ௧௦௫ | கபிலதீர்த்தச்சருக்கம். | ௫ |
| ௨௦௩ | காலவச்சருக்கம். | ௨௮ |
| ௧௭௭ | குமரநாயகனருச்சனைசெய்சருக்கம். | ௧௨ |
| ௧௦௪ | கௌதமதீர்த்தச்சருக்கம். | ௫ |
| ௧௯௨ | சடாயுவருச்சனைசெய்சருக்கம். | ௫௦ |
| ௭௪ | சதானந்தச்சருக்கம். | ௧௨ |
| ௮௫ | சத்தியசன்மச்சருக்கம். | ௨௨ |
| ௧௯௦ | சந்திரனருச்சனைசெய்சருக்கம். | ௧௦ |
| ௧௨௨ | சனார்த்தனச்சருக்கம். | ௧௮ |

# சருக்கவகராதி.


| பக்கம். | சருக்கம். | பாடற்றொகை. |
|---|---|---|
| ௫௨ | சித்தாமுததீர்த்தச்சருக்கம். | ௧௬ |
| ௨௰௮ | சித்திரகேதுச்சருக்கம். | ௧௩ |
| ௧௩௭ | சிவதன்மன்பிரமரட்சசுநீங்குசருக்கம். | ௧௪ |
| ௨௧௬ | சீலவிருத்தச்சருக்கம். | ௧௭ |
| ௯௯ | சுதரிசனன்சாபநீங்குசருக்கம். | ௧௨ |
| ௨௧௯ | சுவாசினிச்சருக்கம். | ௧௩ |
| ௯௫ | சூரியதீர்த்தச்சருக்கம். | ௮ |
| ௧௨௬ | சூலதீர்த்தச்சருக்கம். | ௫ |
| ௧௨௭ | சேடதீர்த்தச்சருக்கம். | ௧௰ |
| ௧௰௬ | சோமதீர்த்தச்சருக்கம். | ௬ |
| ௯௬ | தக்கதீர்த்தச்சருக்கம். | ௭ |
| ௬௬ | தக்கனருள்பெறுசருக்கம். | ௩௬ |
| ௧௫௬ | தாரகாசுரசங்காரச்சருக்கம். | ௨௧ |
| ௬௪ | தருப்பணபலன்கூறியசருக்கம். | ௯ |
| ௩௰ | தலச்சருக்கம். | ௧௰௪ |
| ௧௪௯ | தலமகிமைகாட்டியசருக்கம். | ௧௭ |
| ௧௪௰ | திருச்சாந்துண்டைசெய்முறைமைகூறியசருக்கம். | ௭ |
| ௧௬ | திருநகரச்சிறப்பு. | ௧௪ |
| ௧௰ | திருநாட்டுச்சிறப்பு. | ௩௨ |
| ௧௪௧ | திருவவதாரச்சருக்கம். | ௨௫ |
| ௧௭௰ | திருவிழாச்சருக்கம். | ௩௧ |
| ௧௧௨ | துசீலச்சருக்கம். | ௨௨ |
| ௨௨௧ | துச்சீலச்சருக்கம். | ௫ |
| ௧௩௩ | துருவாசர்பிராந்திதீர்ந்தசருக்கம். | ௧௰ |
| ௧௬௪ | தேவராருச்சனைசெய்சருக்கம். | ௧௰ |
| ௧௮ | நைமிசாரணியச்சருக்கம். | ௬௭ |
| ௧௰௮ | பராசரதீர்த்தச்சருக்கம். | ௬ |
| ௬ | பாயிரம். | ௧௬ |

## சருக்கவகராதி.


| பக்கம். | சருக்கம். | பாடற்றொகை |
|---|---|---|
| ௮௧ | பாரியைக்கொன்றபாவந்தீர்ந்தசருக்கம். | ௨௪ |
| ௯௩ | பிரமதீர்த்தச்சருக்கம். | ௧௧ |
| ௭௭ | புருடனைக்கொன்றபாவந்தீர்ந்தசருக்கம். | ௨௩ |
| ௧௫௨ | போர்புரிசருக்கம். | ௧௮ |
| ௬0 | மாதபலன்கூறியசருக்கம். | ௨0 |
| ௧௨0 | மிருதசஞ்சீவனச்சருக்கம். | ௧௧ |
| ௮௯ | முனிவர்தீர்த்தச்சருக்கம். | ௮ |
| ௧௪௬ | வரம்பெறுசருக்கம். | ௧௬ |
| ௧௬௫ | வாலாம்பிகையருச்சனைசெய்சருக்கம். | ௨௨ |
| ௯௭ | வித்தியாதரதீர்த்தச்சருக்கம். | ௯ |
| ௧0௨ | வில்வதீர்த்தச்சருக்கம். | ௧௨ |
| ௯௧ | வீரகத்திதீர்ந்தசருக்கம். | ௯ |
| ௨௧௧ | வீரசேனச்சருக்கம். | ௨௬ |
| ௧௮௩ | வேதமருச்சனைசெய்சருக்கம். | ௯ |




உ

# பரிசோதனபத்திரம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௬ | ௧ | ௪ | துரைக்கும் | துரைத்த |
| ௭ | ௭ | ௧ | பாரயி | பாயிர |
| ௧௩ | ௨௨ | ௧ | வெள்ளி | வெள்ள |
| ,, | ,, | ௨ | மருதனன் | மருதாஅன் |
| ௧௪ | ௨௪ | ௪ | கையற் | கயற் |
| ௧௬ | ௨ | ௪ | சாரள | சாளர |
| ௩௩ | ௧௬ | ௨ | பாடன்றிநீ | பாட்டினினீ |
| ,, | ௧௯ | ௨ | னற் | நற் |
| ௩௪ | ௨௫ | ௨ | விரையுமி | வரையும் |
| ௩௮ | ௪௨ | ௩ | வுளரன் | வுளர்க்கன் |
| ௪௦ | ௫௨ | ௧ | நற் | னற் |
| ௪௪ | ௭௧ | ௧ | நற் | னற் |
| ௪௫ | ௭௨ | ௪ | தந்ததை | தரவதை |
| ,, | ௭௬ | ௪ | ஞுந்தினீர் | ஞுந்திநீர் |
| ௪௮ | ௮௩ | ௧ | நற் | னற் |
| ௫௦ | ௯௬ | ௫ | செய்வூர் | செயூர் |
| ௫௨ | ௨ | ௨ | கண்னி | கண்ணி |
| ,, | ,, | ௪ | கூறி | கூற |
| ௫௫ | ௧ | ௫ | ரென்றே | ரென்ரூர் |
| ௬௦ | ௩ | ௩ | செங்கான் | செங்கோன் |

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௬௧ | ௪ | ௨ | முதற் | முதச் |
| ௬௨ | ௧௨ | ௩ | மிகபர | மிகம்பர |
| ௬௩ | ௧௬ | ௧ | தினையும் | திணையும் |
| ௭௦ | ௨௯ | ௧ | டொழிந்த | டொழிய |
| ௭௩ | ௫ | ௩ | நிறையும | நிறையவ |
| ௭௫ | ௨ | ௧ | முதனீர் | முதநீர் |
| ௭௮ | ௧௦ | ௩ | விரவி | விரகி |
| ௮௦ | ௨௦ | ௪ | நாயுட | ஞயுட |
| ௮௬ | ௮ | ௪ | பங்கை | பங்க |
| ௮௭ | ௧௨ | ௧ | துடன் | துட |
| ௮௮ | ௧௮ | ௧ | னறு | நறு |
| ௯௨ | ௭ | ௪ | பிரம | வீர |
| ௯௪ | ௭ | ௨ | னற் | நற் |
| ௯௭ | ௫ | ௩ | புனற் | புனல் |
| ௯௯ | ௯ | ௨ | புகழுங் | புகழும் |
| ௧௦௫ | ௧ | ௨ | புயன் | பயன் |
| ௧௧௨ | ௧௯ | ௪ | செய் | செங் |
| ௧௨௦ | ௪ | ௨ | பம்வித்தரும | பமொத்துருவ |
| ௧௨௩ | ௬ | ௨ | சுலந்திடு | சுலர்ந்திடு |
| ௧௨௮ | ௮ | ௧ | கள் | கண் |
| ௧௩௪ | ௧ | ௨ | மென்னு | னென்னு |
| ௧௩௫ | ௮ | ௨ | வும்வாய் | வுமாய் |
| ௧௪௩ | ௮ | ௩ | கின | கிடு |
| ௧௪௪ | ௧௨ | ௪ | முலைப் | முலை |
| ௧௪௭ | ௩ | ௩ | யெனையு | யெனை |
| ௧௫௩ | ௫ | ௨ | ருந்தும் | ருதுப் |

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| கருச | அ | ங | கயி | கையி |
| கருரு | கச | உ | ஞுருஞ் | ஞுரிஞ் |
| கருஎ | சா | உ | ரோர் | னோர் |
| கருஅ | கஉ | ங | சிர | சர |
| கருகூ | கஅ | ச | டியிர் | டியர் |
| கசாஉ | கரு | ச | பெரு | பெறு |
| கசாஎ | சா | ங | வமா | வம்வா |
| கசாகூ | கசா | உ | தென | தன |
| கஎரு | உரு | உ | லுமிழ்ப் | லுமிழ் |
| கஎசா | ஙo | உ | விழாய் | விழா |
| கஅo | ரு | ங | ளென்னு | ளேனு |
| ,, | சா | ங | றவள் | றனள் |
| கஅரு | ங | உ | கொதி | கொழி |
| ககூo | உசா | ச | பன்னுள் | மன்னே |
| ககூச | கஉ | உ | பெரு | தரு |
| ககூரு | கங | க | தவர் | யவர் |
| ககூஎ | உங | ச | புகுவன் | புகான் |
| ,, | உகூ | ங | முறை | முமை |
| உoங | க | ச | வரற் | வரர்க் |
| ,, | ச | க | நற் | னற் |
| உoச | ரு | ச | நீங்கு | நீங்கி |
| உகங | கக | ச | தியபைப் | தியைப் |
| உகச | கஅ | க | குான் | குமங் |
| உககூ | க | ங | பனே | பணே |
| ,, | உ | ச | னனே | னணே |
| ,, | ங | உ | டனேய | டணேயண் |

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# புள்ளிருக்கு வேளூர்ப் புராணம்

என்னும்

# வயித்தீசுரன்கோயிற் புராணம்.

## காப்பு.

திங்களுட னெழில்கொழிக்குங் கொன்றையந்தார் தரித்திலகு சிவனெங் கோமான், மங்களசின் மயமான வைத்யலிங்கம் விளங்கு தல மகிமை யோங்கிப், பொங்குசிறப் பிணைமதுரம் பொழிந்திடுசெந் தமிழினூற் புகல வாய்ந்த, கங்கையணி மதஞ்சொரியுங் கற்பகக்குஞ் சரத்திருதாள் கருத்துள் வைப்பாம்.

## கடவுள்வணக்கம்.

### வைத்திய நாதர்.

திருமாலும் பதுமம்வள ரயன்முதலாங் கடவுளருந் திகழு மேன்மை, தருமாலி னிழலுறையுஞ் சனகாதி யரும்வேளூர் தன்னிற் போற்றக், கருமாலின் றொடர்பகற்றிப் பதவிபெற மருந்தளித்துக் கருணை செய்யும், வருமாலை யிளம்பிறைசேர் வைத்தியலிங்கம் பொன்னடியை வணக்கஞ் செய்வாம். (க)

## தையல் நாயகி.

பன்னரிய மகிமைநிறை யானந்தப் பெருகொளியே படிவ மாகி யுன்னருமங் களநிறைந்து விளங்கியிருந் தெழில்கொழிப்ப வுலகுக் கெல்லா, மன்னையா யைந்தொழிற்கும் வித்தாகிப் புவனங்க ளனை த்து முய்ய, மன்னுபெருங் கருணைபொழி தையனா யகிமலர்த்தாள் வணக்கஞ் செய்வாம். (உ)

கரும்புருவச் சிலையும்வரிக் கயல்விழியும் வள்ளைவார் காது முல் லை, யரும்புமிள நகையுஞ்செங் கனிவாயும் பிறைநுதலு மமுத வாக் கும், பொருந்தியமங் கலநாணு மலர்க்குழலும் விளங்கவெழிற் புள் ளூர் மேவுந், திருந்துமணங் கமழ்சாந்து கழுத்துமைவா லாம்பிகை தாள் சிரமேற் கொள்வாம். (௩)

## விநாயகக் கடவுள்.

ஏரரும் பிறைமருப்புஞ் சிந்தூரச்சுந் தரமுகமு மிலகச் செம் பொன், வாராருங் களபமுலை மாதுதைய லுமையளித்த மைந்த னாகிக், காராரும் பொழில்புடைசூழ் புள்ளூரிற் கருணைமதஞ் சொ ரிந்தெந் நாளுந், தீராத கொடும்பாச வினைதீர்த்த பிள்ளைபதஞ் சிர மேற் கொள்வாம். (௪)

முத்திவிநா யகன்மகிழு மன்பனுக்கிவ் வுலகினிருண் முழுது நீக்கு, மத்திவிநா யகனெனவே யகத்திருளை நீக்குவர மளித்து மன்னு, மெத்திவிநா யகன்மேலாஞ் சிவஞானச் செல்வனிவ னெனவே செய் யுஞ், சித்திவிநா யகன்வேளூர்க் குடவறைவி நாயகன்முள் சிரமேற் கொள்வாம். (௫)

## சுப்பிர மணியக் கடவுள்.

தாங்குபெரும் புவனமெலாம் பணியுமிரு திருவடித்தா மரையு நீங்காத், தேங்குபெருங் கருணைவழிந் தொழுகுதிரு முகங்களோ ரா றுந் தெய்வத், தேங்கமழுங் கடம்பணியும் பன்னிரண்டு தடம்புய மூந் திகழ மன்னுங், * காங்கெயனைப் பரிதிபுரி வளர்குமர குருபர னைக் கருத்துள் வைப்பாம். (சு)

அளிதருசிந் தையரான வமரர்பெருஞ் சிறைமீள வகிலம் வா ழப், பிளிறுமயி ராவதமும் பொன்னுலகும் விண்ணவர்கோன் பெற மே வண்ட, வெளிமுகடு மதிரவெதிர் வருசூர னுளங்கலங்க விளங்கு செங்கை, யொளிதிகழ்வே லெடுத்தமுத்துக் குமரநா யகன்மலர்த் தா ளுளத்துள் வைப்பாம். (எ)

## திருநந்தி தேவர்.

பொடியணியு மேனியுமுப் புரிநூல்சூழ் மணிமார்பும் புனையு மின்னற், கொடிதிகழுஞ் செஞ்சடையும் விழிமூன்றுங் கரநான்குங் குலவு மானும், வடிமழுவுஞ் சுடர்வாளு மணிப்பிரம்பும் விளங்கவெ ள்ளி வரைகாத் தையன், முடிவரிய திருவாய்மை செலுத்துநந்தி நா யகன்றாள் முடிமேற் கொள்வாம். (அ)

## திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்.

பூழியன்வெஞ் சுரநீங்கக் கூனிமிரச் சமணொழியப் புனித வெ ண்ணீ, றேழுலகுந் தொழுதேத்த வெடுத்தளித்துச் சிவசமய மில கச் செய்தே, யூழிகடற் கொண்டிடினு மூரினுள்வந் தணுகாதென் றுரைக்குஞ் செல்வக், காழிநகர் விளங்கவளர் கவுணியர்தங் குல மணியைக் கருத்துள் வைப்பாம். (க)

---

* காங்கெயன் என்பது குறுக்கல் விகாரம்.

## திருநாவுக் கரசு நாயனார்.

அருகரமைத் திடுநீற்றி னறைமுதலாந் தீங்கடியார்க் கணுகா தென்னும், பெருமையெடுத் துலகறியக் காட்டிமக ரஞ்சுழலும் பெருநீர் மல்குங், கருநிறத்தெண் டிரைக்கடலிற் கன்மிதப்ப வருநாவுக் கரசின் செம்பொற், திருவடித்தா மரைமலரைப் பவக்கடலின் கரையேறச் சிந்தை செய்வாம். (கo)

## சுந்தர மூர்த்தி நாயனார்.

அரவையார் மணியல்குற் றடமிலக வளருமிள வன்னம் போலும், பரவையார் திருமனைக்கெம் பெருமான்ற னிரண்டுதிருப் பாதநோவ, விரவையார் நடுயாமத் தேவலா ளாய்த்தூதுக் கேவு நல்லொப், புரவையார் தோழனெனுஞ் சுந்தரன்பொன் னடிபணிந்து போற்று வோமே. (கக)

## மாணிக்க வாசக சுவாமிகள்.

வழுதிமனு நெறிசெலுத்து மந்திரியாய்ப் புரவிகொள்ள வந்த செம்பொன், முழுதும்வளர் திருப்பணிசெய் திலகுதிரு வாசகமு மொழிந்து பாரோர், தொழுதுசிர மேற்கொண்டு துதிப்பநிறை கோவையார்த் துறைகள் யாவும், பழுதுபடா தெடுத்துரைத்த வாதவூரன்பர்பதம் பணிதல் செய்வாம். (கஉ)

## சண்டேசுர நாயனார்.

மண்டுபுனல் பரந்துவரு மண்ணிநதி வெண்மணலின் மாருக் காதல், கொண்டிறைவன் முடிமீது குடத்துநிறை பால்சொரிந்து கோலாலங்கு, மிண்டுசெயுந் தாதைதா டடிந்துமே தினியின்மிகு மேன்மைபெற்ற, சண்டியிரு தாள்வணங்கிச் சிவனடியார் மலர்ப்பாதந் தலைமேற் கொள்வாம். (கங)

## திருத்தொண்டர்.

வெள்ளெருக்கின் வனப்பாங்கர் விளரியளி யினமுரல விண்ணளாவிக், கள்ளிருக்கு மலர்ச்சோலை கவினவகுத் தெண்ணரிய கற்ப காலந், தெள்ளிருக்கு முதனான்கு வேதநித மருச்சனைசெய் திருச்கு மேலாம், புள்ளிருக்கு வேளூரை நினைக்குமன்பர் தாள் பணிந்து போற்று வாமே. (கச)

## வாழ்த்து. வேறு.

வான்வளஞ் சுரந்து பெய்க மன்னவன் செங்கோல் வாழ்க
நான்மறை யவர்கள் வேள்வி நன்னெறி வழாது செய்க
நூன்முறை யுணர்ந்த கல்வி நுண்ணறி வுடையோர் சூழ்க
மேன்மையாஞ் சைவ மோங்கி விளங்குக வுலக மெல்லாம். (கரு)

## பயன். வேறு.

திருவிளங் கியமா நிலந்தனிற் புகழ்சேர் செழித்திடு வயித்திய நாத, னருமையாந் தலநன் மகிமையைக் கேட்போ ரளப்பருஞ் செல்வரா குவர்மேல், வருபெரும் பகையை வெல்குவர் கல்வி மகப்பெறு குவர்பிணி யெய்தார், நிருமல ஞான சிவன்மலர்ப் பாத நிலைமை பெற் றினிதுவாழ்ந் திருப்பார். (கசு)

## அவை யடக்கம். வேறு.

எண்ணி ரண்டு கலைகளு மெய்திய
தண்ம திக்குமுன் முரகை தானெளிர்
வண்மை யாமவை யோர்முன் வகுத்தியற்
பண்ண மைத்தெழு மென்றமிழ்ப் பாடலே. (கஎ)

வளங்கொண் மால்விடை யண்ணன் மகிமைதான்
விளங்கு மாதலின் மேவுமென் சொற்குறுங்
களங்க மெண்ணிலர் கைக்கொள்வ ரென்றெனை
துளங்கோ ளாசை துரப்ப வுரைசெய்வென். (கஅ)

கடவுள் வணக்க முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-கக.

---

## பாயிரம்.

---

நதிபொதியுங் கயிலைவரை நாதனந்தி நாயகற்கு நவில வன்னோன், சதுமறையு முணர்ந்திலகு சனற்குமரற் குதவவவன் றலைமை சான்ற, மதிகொள்வியா சனுக்களிக்க வவன்சூத முனிக்கருள மகிழ்ந்து சூதன், பதவிபெற வகுத்துரைக்கும் பதினெட்டுப் புராணவகை பகருங் காலே. (க)

வேறு.

தருபிரமம் பதுமம்விண்டு சைவம்பா கவதந் தயங்குபவி டியமகிமை தருமார்க்கண் டேயங், கருதருநா ரதமாக்கி னேயமே பிரமகைவர்த்த மிலிங்கஞ்சீர் வராகமே காந்தம், வருபெருவா மனங்கூர்ம மச்சங்கா ருடமே மன்னுபிர மாண்டமிவை வளர்பதினெண் புராணங், தெரிகிரந்தத் தொகைபகரிற் சிவகதைமுன் றிலக்கந் திகழ்நெடுமா லயன்பரிதி செங்கனற்கோ ரிலக்கம். (உ)

வேறு.

குவியிளந் திங்கட் கொழுந்தணி முக்கட் குரிசில்வண் புகழ்நிறை புராணங், கவினுறு சைவம் பவிடியம் வளர்மார்க் கண்டேய

லிங்கமே காந்தம், புவிபுகழ் வராகம் வாமன மச்சம் புகலரு மகி மைசேர் கூர்மஞ், செவிநுக ரமுத மாமென விளங்கித் திகழ்பிர மாண்டமீ ரைந்தே. (௩)

வேறு.

கரியமால் புராணம் விண்டு காருட நார தஞ்சொல்
லரியபா கவத மோர்நான் காகும்வா ழயன்பு ராணம்
பிரமமே பதும மாகும் பிரமகை வர்த்தம் வெய்யோற்
குரியதா மாக்கி னேய மொளிர்கனற் புராண மாமே. (௪)

வேறு.

எழில்பெருகு சிவகதையிற் காந்தமிறை கிரந்தமோ ரிலக்க மா குந், தழுவியசங் கிதையாறு வளர்காண்ட மோரைம்ப தாகு மிப் பாற், கெழுமியசங் கிதையாறும் பகர்திடின்முற் சனற்குமரங் கிள ருஞ் சூதம், விழுமியசீர்ச் சங்கரமேல் விண்டுபிர மஞ்சூர மென்ப தாமே. (௫)

எண்ணியிடு புராணமீ ரொன்பதனிற் புள்ளிருக்கு வேறு ரென் னும், புண்ணியநற் றலமகிமை பகிடியமேற் பிரமாண்ட புராணங் காந்தம், வண்மைபெறு சைவபுரா ணத்தின்வகுத் தெடுத்துமுனி வரர்கள் கேட்ப, வுண்மைபெற முழுதுணர்ந்த சூதமா முனிவன்மகி ழ்ந் துரைத்தல் செய்தான். (௬)

திருந்துபுகழ் மிகுகடவுள் வணக்கமுடன் பாரயிஞ்சீர் செல்வ மோங்கிப், பொருந்தியிடு திருநாட்டுச் சிறப்புநவ மணிகொழிக்கும் பொற்பு வாய்ந்தே, யிருந்ததிரு நகர்ச்சிறப்பு நைமிசா ரணியவெ ழிற் சருக்க மென்றுந், தருந்தகுதி மகிமைவளர் தல்ச்சருக்க மேற் றீர்த்தச் சருக்க மாமே. (எ)

கருதுமிரு டியர்முறைமை கங்கைபா வந்தீர்ந்த சருக்க மாத, வருபலன்கூ றியசருக்கந் தருப்பணஞ்செய் பலச்சருக்கம் வந்து தக்க, னருள்பெறுமான் மியமதன்மே லிரணியவன் மச்சருக்க மரி ய தான, தருமநிறை தவம்புரியுஞ் சதானந்தச் சருக்கமினிப் புருடன் றன்னே. (அ)

கொலைபுரியும் பவந்தீர்ந்த சருக்கமுடன் பாரிதனைக் கொன்ற பாவம், தொலையுநெறி பகர்சருக்கஞ் சத்தியசன் மச்சருக்கஞ் சுருதி யாய்ந்த, நிலைமைமுனி வரர்தீர்த்தச் சருக்கம்வரு வீரகத்தி நீங்கும் வண்மை, மலரினுறைந் திடுபிரம தீர்த்தஞ்சூ ரியதீர்த்தச் சருக்கமன் னும். (கூ)

தக்கனியற் றியதீர்த்தச் சருக்கம்வித்தி யாதரதீர்த் தச்சருக்க
மிக்கசுத ரிசனன்சா பத்துரிசு விடுசருக்கம் வில்வ தீர்த்தந்
தொக்ககவு தமன்கபிலன் சோமனெடு பராசரன்சூழ் புகழி ராம
னக்கிரம மகற்றுதசீ லன்சருக்க மாதிகா வேரி யாமால். (கய)

கந்தருவ ருறுசாபந் தவிர்சருக்க மிருதசஞ்சீ வனங்க னிந்த, சிந்தையுள சஞர்த்தனன்றன் சருக்கம்வளர் சூலதீர்த் தத்தின் மேன் மை, வந்திடுநற் சேடதீர்த் தச்சருக்க மெண்டிசையின் மகிமை வா ய்ந்த, விந்திரன்சா பந்தவிர்ந்த சருக்கமேற் றுருவாசச் சருக்க மெ ய்தும். (கக)

அருமைபெறு மங்கசந்தா னச்சருக்கஞ் சிவதன்மச் சருக்க மப் பால், வருதிருச்சாந் துண்டைசெயு முறைமைவகுத் திடுசருக்கம் வள்ளி நாதன், திருவவதா ரச்சருக்கம் வரம்பெறுநற் சருக்கஞ்சே வேறு நாதன், றருமதல மகிமைகாட் டியசருக்கம் போர்புரியுஞ் சரு க்க மாமால். (கஉ)

தாரகா சுரன்றன்வதைச் சருக்கமசு ரீரிவாக் களித்த தன்மை யாருமெழிற் சருக்கமுயர் தேவரருச் சனைசெய்யுஞ் சருக்க மன்பாற் சிருறவா லாம்பிகைவந் தருச்சனைசெய் சருக்கமேற் றிருவிழாச்செய் பேருவகைச் சருக்கமப்பாற் குமரநா யகன்பூசைச் சருக்கம் பின்னர்.

அருள்பெறுமா தித்தனுல் வேதமங்கா ரகன்சருக்கஞ் சந்தி ரன்சேர்த், தெருளுமெழிற் சடாயுமகி ழருச்சனைகா லவச்சருக்கஞ் சித்திரகேது, வெருளகலும் வீரசே னச்சருக்கம் புகழ்சீல விருத்தன் மேன்மை, சுருளளக மிலகுசுவா சினிச்சருக்கந் துச்சிலச் சருக்கந் துன்னும். (கச)

உண்மைபெறு முதங்கனெழிற் சருக்கமுடன் ளுகையறுயத் தோன்றும் வாய்ந்த, வெண்மதியு நதியுமணி வேணிவயித் தியநாதன் புராண மேவும், வண்மைபெறு மான்மியமிவ் வரன்முறைமை வழாதுபுவி யதனின் வாழ்வோர், கண்மணியாஞ் சூதமுனி வரனுரைத்த படிகருத்தி லமையச் சொல்வேன். (கரு)

வல்லியந்தா மரைபயிலுங் குறிஞ்சியண்ணல் பூசைசெய்மா நகர மாகும், பல்லியந்தா மரையிருளின் கண்ணுமுறங் காத்திரும் பசுந்தேன் பில்கு, மல்லியந்தா மரைப்பழனப் புள்ளூரின் மான்மியப்பாயிரமா ராய்ந்து, சொல்லியந்தா மரைச்சேரா நல்வினஞ்சேர் திருநாட்டுச் சிறப்புச் சொல்வேன். (கசு)

பாயிர முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ருரு.

---

## திருநாட்டுச்சிறப்பு.

எல்லை காணரு மிறைவனை யிமயமீன் றெடுத்த
வல்லி யங்குழ லுமைமகிழ் தலந்தோறு மன்பாற்
புல்லி டும்புது மலரினாற் பூசைதான் புரிய
நல்ல மாதவஞ் செய்தது சோழநன் னாடு. (௧)

கலைவ ளர்ந்திடு மதிக்குமோர் களங்கமுண் டிருக்கு
முலைய நாடினு மவருளத் தொருகளங் கின்றித்
தலைமை பெற்றநல் லொழுக்கமுந் தக்கபே ரறிவு
நிலைமை பெற்றவர் நிறைவது சோழனீர் நாடு. (௨)

இன்மைபெற்றிரப் பவர்க்கெலா மிருநிதி யளித்துத்
தொன்மை பெற்றநீள் புகழையே பொருளெனத் தொகுக்குந்
தன்மை பெற்றபல் பெருங்குடி தழைக்குமென் றுரைக்கு
நன்மை பெற்றது நாட்டினிற் சோழநன் னாடு. (௩)

கற்பு மேவிய மனைவியைக் கலந்துறு காதற்
பொற்பி னின்வழா தில்லறம் புரிந்துதான் புகன்ற
சொற்றி றம்பிடா தரிந்துடற் றசைதுலை நிறைக்கப்
பெற்ற மேன்மையும் படைத்தது பெருகுநீர் நாடு. (௪)

### வேறு.

மறுப்பு லப்பகை வேந்தர்கள் வந்துதாள் வணங்கிட மனுநீதி, பெறந டத்துசெங் கோன்முறை பிறழ்ந்திடாப் பெற்றிய னரசாட்சி, முறைசெ லுத்தலாற் றிங்கண்மும் மாரிமு துலகினிற் பொழிந்தோங்கக், குறைவில் பல்வளங் கொழித்துநா டுயர்புகழ் கொண்டெழின் மிகுமாதோ. (௫)

வேறு.

குவிம ணிக்கொழித் தருவிசூழ்ந் திடுமுயர் குறிஞ்சி
கவிய மாத்திரள் சார்ந்திடுங் கலுழிசேர் முல்லை
* விவித மீன்குவை மேவிடுங் கழிமிகு நெய்தல்
புவிதொ ழும்புதுப் புனல்பரந் திடும்புகழ் மருதம். (சு)

நீடு காதல்சூழ் புணர்ச்சியி னெறிமிகுங் குறிஞ்சி
வாடி யேபிரிந் திருப்பது மல்கிடு முல்லை
யாட வர்த்தமை நினைந்திரங் கிடுமடர் நெய்த
ஊடல் செய்குத லிசைந்திடு மொளிர்புனன் மருதம். (எ)

பசுந்தி னைக்கிளி கடிகுவர் கொடிச்சியர் பதலை
யுசந்த வெண்டயி ராய்ச்சியர் கடைகுவ ரொளிர்நீ
ரிசைந்த நித்திலம் பரத்தியர் குவியல்செய் திடுவா
ரசைந்து நெற்பொலி கடைச்சிய ராற்றுவர் கொழிப்பார். (அ)

மேவி நல்வெறி யாடுதன் மிகுந்திடுங் குறிஞ்சி
பாவு டாளிதம் பிரப்புமல் கிடும்பனி முல்லை
யாவ லிற்சுறு முள்ளணங் கயர்வன நெய்த
ரேவ வள்ளைபா டுதனிறைந் திடுஞ்செழு மருதம். (கூ)

காரகிற்செழுங் குங்குமந் தடிந்துமேற் கமழு
மாரம் வேரகழ்ந் தெடுத்தெறிந் தவிரொளி மணிகற்
போர்கு வித்துழு திடுந்திறற் கானவர் புதிய
வார்தி னைவிதைத் திடுவன மிகுமலைச் சாரல். (கo)

ஒன்று கம்பலக் கொடுமேடிப் போர்வைய ரூதுங்
கொன்றை வேய்ங்குழ லாயர்தம் பாடியிற் குழைந்து

---

* விவிதம்-பலவகை.

துன்று காதல்கூர் தாய்வருஞ் சுரநெறி பார்த்து
முன்றி லான்குழக் கன்றுநின் றிரங்கிடு முல்லை. (கக)

வெண்ம ணற்பரந் திளநிலா வெறிப்பமே வியநீள்
வண்ண வார்கட லிருள்பரந் தெனவதி தரமே
னண்ணு பைந்தளிர்த் துவர்ப்பின்ன னெடுங்கொடி நாப்பட்
கண்வ லைப்பெருங் குவியல்சூழ்ந் திடுங்கழிக் கானல். (கஉ)

பிள்ளை வண்டுசூழ்ந் தெழுந்துபாண் மிழற்றிடப் பெருகுங்
கள்ள விழ்ந்தசெந் தாமரைக் கிடங்கினுக் கயல்சூழ்
பள்ள வோடையின் மறிபடா நகன்றுநீள் பசிய
வள்ளை தின்றுகார் மேதிகண் ணுறங்குநீண் மருதம். (கங)

மிசைவி ளங்கிய குறிஞ்சியு முல்லையும் விரவிப்
பசிய மெல்லிலைக் காந்தளங் கொடிபடர்ந் திடநின்
றசையு நீனிற மலர்கொள்கா யாவின்மே லமர்ந்தே
யிசையு நல்லெழின் மயில்சிற கினைவிரித் திருக்கும். (கச)

கருநி றக்கட னெய்தலு மருதமுங் கலந்து
விரவு வெண்மடற் கைதையின் றுதுமேற் றிமிர்ந்தே
மருவு தாமரை மலரினல் விளரிவண் டினங்க
ளுருகு மன்பர்போற் செவ்வழி பாடியே யுறையும். (கரு)

புணர்கு றிஞ்சிநன் முல்லைபொற் புறுநெய்தன் மருதந்
திணைம யக்குறு நிலங்களுஞ் செறியுநா னிலத்தி
லணையு நண்பகற் பொழுதுசேர் பாலையு மடுத்தே
யிணையில் காளிகோட் டங்களுஞ் சிற்சில விருக்கும். (கசு)

ஆறலைத்திடும் வேடரு மலைக்குற வருமா
னேறு மேய்த்திடும் பொதுவரும் பரதரு மிளகு
சேறு செய்திடு முழவருஞ் செறியுமந் நிலத்தில்
வேறு வேறுதா மிகுதியாய் விளங்குவ ரம்மா. (கஎ)

மல்கும் வெண்முகி னீணிறக் கடலினை மடுத்துப்
பல்கி டும்பசும் பொன்னென மின்னிமேற் பசந்து
நல்வ ளங்கொழித் திருந்திடு சையநல் வரைமேற்
புல்கும் வெள்ளிவீ ழெனமிகப் பொழிந்தது மாதோ. (கஅ)

வளங்கொண் மாமணி யலைநெடுங் கரத்தினால் வாரித்
துளங்கி வீழும்வெள் ளருவிமேற் பரந்துசூழ்ந் தோடிப்
பிளந்து சாரல்சேர் குறிஞ்சியைப் பெருமலைக் குறவர்
தளர்ந்தி ரைந்திட முல்லையிற் சார்ந்தது தகவே. (கக)

குந்த மத்தடஞ் சினைமுறித் தெழுந்துகோ மூரைநற்
றங்க வாரம்வேர் கிழிந்திடப் பிடுங்கியே சுழித்துத்
தங்கு காரகிற் குறடெறிந் தாசினி தகர்த்துப்
பொங்கி வெண்டிரை கொழித்துமேற் போந்தது மருதம். (உ0)

இடைசெ றிந்திடு பாலையி னீணிலத் தெய்தும்
வடவை வெந்தழ லாமெனப் பரன்மடுத் திருந்த
விடர்பு குந்துபா தலமுதலாழ்ந்துமே லெழுந்து
புடைப ரந்துசூழ்ந் தாயிடை வெம்மையும் போக்கி, (உக)

வேக மோடெழும் பொன்னியின் வெள்ளநீர் பரந்து
நாக ஞாழல்சூழ் கழிக்கரை மருதநன் னிலம்
தாக வேயுவர் முழுவது மகற்றியாழ் கடலின்
சேகு சேர்புலா னாற்றமுங் கடியமே வியதே. (உஉ)

ஒழுகு தீம்புனற் பொன்னிமா நதிசுழித் தோடி
முழுதும் வெண்சுதை தீற்றிய மதகினும் மோதிக்
கழனி மேவுகால் வாயிரு கரைதொறும் வழிந்து
செழிய வல்விசை யம்பினும் விரைந்துசென் றதுவே. (உங)

அங்கண் மாநிலத் தமுதெனப் பரந்திடும் பொன்னிப்
பொங்கு நீள்புதுப் புனல்செழுந் தாமரைப் பொய்கை
தங்க வார்கரைக் குளம்பல நிரம்பிடச் சூழ்ந்தே
செங்கை யற்பழ னந்தொறுஞ் செழித்திட நிறையும். (உச)

துள்ளி வாளைசெங் கயல்பிறழ்ந் திடச்சுழித் தோடிப்
பள்ள நீண்மடை யுடைந்திடப் பரந்திடும் பொன்னி
வெள்ள நீர்ச்சிறை செய்குவர் விரைந்தெழுந் தனேக
மள்ளர் மைம்முகிற் குழாமெனப் பரவினர் மகிழ்ந்தே. (உரு)

உழுவ ரெங்கணும் பரந்துநின் றுழுதிடு கருஞ்சேற்
றிழுதின் வான்முளை வித்துவ ரிந்திர தெய்வந்
தொழுது நாற்றினை யெடுத்துநீள் கோட்டகந் தோறுங்
கழனி வாழ்கெனக் களிப்பொடு கடைச்சியர் நடுவார். (உசு)

கள்ள நீள்விழிக் கடைச்சியர் களிமது வார்க்க
மள்ளர் தாமகிழ்ந் துண்ணுமவ் வழிமதுப் பெருகும்
புள்ள லம்புதண் பணைதொறும் புதுமது நுகர்ந்தே
துள்ளி வாளைக யேசெங் கமலமே லுறங்கும். (உஎ)

உறுப தம்மறிந் துழவர்கள் காட்டவொண் புருவ
நறுநு தற்கடைச் சியர்கணீள் கழனியி னளின
மிறையுந் தந்திரு முகத்திணை பெறுதெனப் பிடுங்கி
யெறிவ ராம்பல்வா யிணைபெறு தெனமிதித் திடுவார். (உஅ)

தழைந்து நென்முதற் பசேலெனச் செறிந்தசெஞ் சாலி
யெழுந்து வெள்ளறி வினரெனச் சூன்முதிர்ந் திலகு
செழுங்க திர்த்தலை நிமிர்ந்துமேன் முதர்ச்சிசெய் திறைஞ்சிக்
கொழும்ப யன்மிகு மன்பர்போற் குலவிய தன்றே. (உக)

பரவி நின்றுசெஞ் சாலியைத் தடிவர்பற் பலநல்
வரையெ னப்பல போர்கள்கட் டிடுவர்வண் பகடு
நிரைநி ரைமிகப் பூட்டிநெற் சூடடித் திடுவ
ரரசு கொள்கட னளித்துமேன் மிகுதிகொண் டம்மா. (கூ0)

எண்ண ரும்பல தானங்க டருமங்க ளியற்றி
வண்மை சேர்மலை யெனமிகக் குவிந்தநெல் வாரி
நண்ணு பண்டியி லேற்றுவர் நன்னெறி யொழுக்க
முண்மை யோங்குநீ ரோதோறு மூர்தொறு முவந்தே. (கூக)

வேறு.

அம்பியனல் விழிமாத ரணிகலவை கமழ்பொன்னித் துறைவ
னுன, செம்பியன்செங் கோன்முறைமை செலுத்துதிரு நாட்டிலகு
சிறப்புச் சொன்னேன், பம்பியன்மா வலிமெலிய வெயிலுமிழ்பன்
மணிமாடம் பலசூழ்ந் தென்று, * நம்பியநல் லெழில்கொழிக்கு நல
ங்கொடிரு நகர்ச்சிறப்பு நவில்வன் மாதோ. (கூஉ)

திருநாட்டுச் சிறப்பு முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கூஎ.

---

* நம்பு-விருப்பம்.

## திருநகரச்சிறப்பு.

இன்ன வண்புகழ் நாட்டினி லிலகிய மகிமை
மன்னு புண்ணிய வளநகர் வயித்திய நாதந்
தன்னை நேரரு மாடமா ளிகைபல தழைத்துப்
பொன்னி லங்குவா னுலகினும் பொற்புறு மன்றே. (க)

தயங்கு சந்திர காந்தநன் மேடைபொற் றசும்பு
நயக்க னிந்தெழில் கொழிக்கும்வே திகைநவ மணிகள்
வயங்கு சித்திரத் தூணெடு மண்டப மன்னி
யியங்கு நீணிலைச் சாரள மெங்கணு மிலகும். (உ)

அன்ன சத்திர நான்மறை வேதிய ரகரம்
பன்ன ருஞ்சிவா கமம்பயின் றிடுமடம் பலவே
றுன்னு நால்வகை யாச்சிர மம்பயி லுறையுண்
மன்னு வீதியி னிருபுற நெருங்கியே மல்கும். (௩)

மந்தி ரத்துறை வழாதுவே தியர்மனை தோறுஞ்
சிந்தை கூர்தரும் வேள்விசெய் செழும்புகை கமழும்
பிந்து மூவர்தம் மனைதொறும் பிறங்குநற் சடங்கு
தந்த மக்கியல் பாம்வதி முறைதழைந் திடுமே. (௪)

பொன்னும் வெள்ளியு நவமணிக் குவியலும் பொருந்து
மந்ந லாரணி கலன்களும் வெயில்கொழித் தம்மா
துன்னு தாங்கிருள் கிழித்திடுஞ் சுதைசெய்நன் மாட
மன்னு நீடெழின் மனைதொறு மனைதொறு மாதோ. (௫)

வேறு.

திரைதவழ் தலினுற் கொடிப்பவ ளங்கள் செழித்தினி திருத்த லால் வெண்முத், திரையும்வெண் சங்க மிகுந்திடு மதனு லிலக்குமி

வாசநன் னுதலா, ருரைசெய்தெண் ணரிய கலன்பரப் பிடுஞ்சீ
ரொளிர்தலா லோங்குமாக் கடல்போல், விரைகமழ் நெடிய வா
வண வீதி விளங்கியே தழைந்திடு மாதோ. (௬)

வேறு.

அளகை மாநகர் வளமெலா மாவண வீதி
யுளதெ ருத்தனி லொன்றினுக் கிணைபெரு தொளிசேர்
நளின மங்கையு நற்கலை மடந்தையு நகர்வா
ழிளகு மன்பினர் மனைதொறு மினிதுவீற் றிருப்பார். (௭)

மகர தோரணம் வான்முக டுரிஞ்சியே மல்கு
நிகரில் வீதியி னெகிழ்செழுஞ் சந்தனக் கலவைப்
பகரரும்பனி நீர்பரந் தெழுந்துகள் படியத்
தகர வார்குழற் றையலார் தாந்தெளித் திடுவார். (௮)

கற்பி னின்வழாச் சணங்குழை மாதர்கள் கவின்சூழ்
சிற்ப நூன்முறை மணிகளைப் பரப்பிவே திகைமே
லற்ப சும்பொனும் வெள்ளியு நகுசுட ரெறிக்கும்
பொற்ப மைந்திடு பூரண கும்பம்வைத் திடுவார். (௯)

புனையும் பொன்மதி லெடுத்தபுள் ளிருக்குவே ளூரின்
மனையி டந்தொறு மங்கல மணிவணி மன்றுஞ்
சினவி டைப்பிரான் சிவகண மாவரந் நகரி
னனைவ ருப்முகித் திடுங்கிரு மியுஞ்சிவ கணமாம். (௧௦)

செருந்தி சண்பகம் பாடலங் கூவிளந் தேமாக்
குருந்து சாதகி வகுளமந் தாரநற் கோங்கம்
விரிந்த மஞ்சரி திகழ்தரு தாடிமம் வெள்ளி
யரும்பு பொன்மலர்ப் புன்னைகந் தனவன மனேகம். (௧௧)

முட்பு றக்கனி வருக்கையின் முதிர்சுளை கனிந்து
விட்பு லத்தினின் ளெழுகுசெந் தேனுமென் முகைகள்
பெட்ப வொண்முறுக் கவிழ்ந்திடப் பெருகுசெந் தேனுங்
கட்பு லன்மகிழ் தரமலர்ச் சோலையிற் கவினும். (கஉ)

கறைவி ளங்கிய கந்தரக் கடவுள்வாழ் வேளூர்
நிறைவ ளஞ்சொல லெட்டிதழ்த் தாமரை மலர்மே
லுறையு நான்முக னொளிருமா மணிமுடி யனந்த
னறையி னெண்ணரும் பிறப்பினை வேண்டுவ ரம்மா. (கங)

இன்ன தொன்னகர் வளமுழு வதுமினி தெடுத்தே
யுன்னி யோதுதற் கரியதா லுலகெலாந் துதிக்கு
மன்ன மான்மிய மறிந்தவா றுரைத்தன னளந்து
பன்ன ருந்தவர் நைமிசா ரணியமேற் பகர்வேன். (கச)

திருநகரச்சிறப்புமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-அக.

---

## நைமிசாரணியச்சருக்கம்.

திருக்கிள ரிதழ்முறுக் கவிழ்ந்து தேன்றுளித்
தருக்கிய பசும்பொனி னொளித ழைந்திடு
மருக்கமழ் தாமரை மலரின் மேலினி
திருக்குநான் முகனெழிற் காஞ்சி யெய்தினான். (க)

எய்திய விரணிய கருப்ப னோர்மிகு
நெய்திகழ் கருங்குழ னிமலி பாகனைப்
பெய்திடு மதுமலர்ப் பெரித ருச்சனை
செய்திருந் தனனுளந் தெளிவு கூரவே. (உ)

வேறு.

பனிமலர்ப் பொழில்சூழ் காஞ்சிப் பதியில்வெண் பதும மேவுங்
கனியிதழ் முத்த மூரற் கலைமக ளுடனி ருந்து
புனிதனைப் பூசை செய்யும் போதனை வேத வாய்மை
முனிவர்கள் மகிழ்ச்சி கூர முன்னர்நல் வினையாற் கண்டார். (ங)

வேறு.

குலகிரி யெனக்குண முயர்ந்து குற்றநீத்
திலகிய வில்லறம் புரிந்தி ருந்துதொல்
லுலகிய லாய்ந்துநல் லொழுக்க முற்றிய
வலகின்மா தவரய னடிவ ணங்கினர். (ச)

வேறு.

முகங்குளி ரினிமை கூறி முகிழ்த்தகைத் தலத்த ராய்நின்
றகங்குழைந் தைய கேணின் னடியமில் வாழ்க்கை யாற்றி
யிகந்தனி னகர மெங்கு மிருந்தனந் தவமி யற்றி
மகம்புரிந் தினியா முய்யும் வனமதொன் றருள்செய் யென்றார். (ரு)

விருப்பமும் பரவு வாய்மை விளக்கமு முருகிக் கண்டு
மருப்பயில் கமலத் தண்ணல் வளர்ந்துகூர் நுனிய தான
தருப்பையொன் றெடுத்த னேக தவஞ்செய்நல் வழிதான் காட்டு
முருப்பொலி நேமி யாக்கி யொய்யென வுருட்டி விட்டான். (சு)

வென்றிசேர் மறைக ணான்கும் விரித்துரை செய்யும் வேதாந்
துன்றிய முனிவர் தம்மைச் சுபந்தரு மமுத வாக்கா
லின்றிது விரைவி னெய்தி யிருநிலங் கிழிய வோடி
நின்றிடு வனத்தி னீவிர் நிலைபெற விருத்தி ரென்றான். (எ)

குணதிசை தனிலெ ழுந்து குடதிசைச் சாரும் வெய்யோன்
வணமலி விம்பம் போன்று வளர்ந்தெழில் கொழிக்கு நேமி
கணமதி லனேகங் காதங் கடுகியோ டியது கண்டே
யுணர்வுகூர் விடைகொண் டன்னோ ருளமகிழ்ந் ததன்பின் சென்றார்.

சாருமா தவர்பின் செல்லத் தண்மதி தபன னாதி
யாருமூ வுலகி னுள்ள வனைவரும் வலஞ்செய் தோங்கு
மேருமால் வரையின் றென்பான் மிக்கால் வளங்கள் வாய்ந்து
சேருமா ரணியந் தன்னிற் செறிப்புற நின்ற தன்றே. (௯)

இலங்கொள்சீர் நேமி யோடி நின்றகா ரணத்தால் வாய்மை
யிலக்குமா தவர்முன் னுள்ள விடுகுறிப் பெயரை மாற்றி
நலங்கிளர் வனத்தி னும நைமிசா ரணிய மென்றே
வலங்கொள்கா ரணப்பேர் கூறி மகிழ்ச்சிபூத் திருந்தார் மாதோ. (க0)

வேறு.

வள்ளி தழ்ச்செழும் புன்னையின் செருந்தியின் மலரு
மெள்ளி டற்கிட மின்றிவீழ்ந் திருந்திடுங் காட்சி
யள்ளி யப்பொழின் மாதருந் தவர்வரு மகிழ்வால்
வெள்ளி கற்பகும் பொன்மல ரிறைத்தென விளங்கும். (கக)

புனைத ருக்களின் கோடுவண் புவிமிசை வளைந்து
துனைவின் மேலெழுந் தெழுந்துதாழ்ந் திடும்பொழிற் றோற்ற
நனைம லர்வன மாதுநன் பொடுதனித் தனியே
யனைய மாதவ ரடிபணிந் தெழுவது போலும். (கஉ)

திருந்த லிக்குரன் முல்லவனத் தினிற்செழுஞ் சுனைகள்
பொருந்த வெண்ணிறம் பொற்புறப் புணர்ந்தருந் திடனற்
பெருந்த வத்தினர் வழிநடைப் பேரிளைப் பாற்றி
யருந்த வைத்திடு மின்சுவை யமுதென லாமால். (கங)

வழங்கு மாதவர் தமையுயர் வருக்கைமா வாழைப்
பழங்கு ளிர்ந்தசெந் தேனடர் பசுங்கொடி வள்ளிக்
கிழங்கு காயுள தருக்குமி னெனக்கிளர்ந் தெழுந்து
முழங்கு பாட்டளி முரல்வகூப் பிடுமுறை யாமால். (கச)

புள்ளெ ழச்சிற கடிதுதிர் பூங்கனி யுடைந்த
கள்ளெ திர்த்துநீள் கால்கரைத் தோடுமக் கானின்
முள்ளெ யிற்றரா முடிகொள்சூட் டணிமயின் முறைகொண்
டுள்ளெ ழுச்சியோ டிறவுசெய் மகிழ்ச்சியுண் டாமால். (கரு)

தேனி னம்முரன் றுடுமவ் வனந்தனிற் சிறுகன்
றூனி னம்புலி போர்த்தொரு சுனையினீ ரருந்தும்
வானி டிக்குரன் மதகரி வாலுளை மடங்க
லூனி னைந்துவர் தோரிடந் தன்னினின் றிடுமே. (கசு)

அசும்பி கழ்ந்துசூழ் பொழிலினிற் கோங்கரும் பவிழ்தேன்
றசும்பி னின்வழி மதுவெனப் பெருகிடுந் தழைந்த
* பசும்பி டிக்கபல் வளர்ந்திடு பாளைவாய்க் கமுகு
விசும்பி னைக்கடி தளவிட வெழுந்தென விளங்கும். (கஎ)

குளவி கண்மது மலரையீன் றிடுங்கொடு வரிப்பேர்
வளர்த ருப்பொலிக் குருளையை மகிழ்ந்துபூத் தளிக்கு
மிளகி னர்க்குற வெழின்மிகு பாவையை யீனு
மளவில் பொற்பினுக் ககமதா நைமிசா ரணியம். (கஅ)

வளமை நல்குநல் வரநல்கு நரைதிரை வாரா
திளமை நல்குமெண் சித்தியு நல்குமெண் ணரிதா
யுளபி றப்பினை யொழித்திட வுபாயமு நல்கு
மளவி லற்புதம் படைத்தது நைமிசா ரணியம். (ககூ)

---

* பசும்பிடி - பச்சிலைமரம்.

அனந்த லைவிடுத் தருந்தவம் புரிமுனி வரரவ்
வனந்த லைத்தலை யளிமுரன் றிடப்பனி மலர்சேர்
நனந்த லையொருங் கெய்தினர் நயப்புறு தோற்றஞ்
சினந்த லையொழித் தனந்தமென் றுதித்தெனத் திகழும். (௨௦)

வேறு.

போது கொண்ட பொழில்வளம் யாவையு
மூது ணர்ந்த முனிவரர் நோக்கியே
யீது நன்மகஞ் செய்தற் கிடமென
வோது நன்மொழி யோசை பரந்ததால். (௨௧)

எண்ணி லாமகிழ் வெய்திய மாதவர்
விண்ணில் வாழும் விசுவகன் மாவினைத்
தண்ணி தாமனந் தன்னி னினைந்தனர்
கண்ணி மைப்பொழு திற்கடி துற்றனன். (௨௨)

முனிவர் கண்டு முறுவலித் திவ்வனந்
தனிம கஞ்செய் திடத்தகு சாலைநீ
யினிது செய்யென வேவின ரன்னவன்
கனிவு கொண்டு கருத்தி னினைந்தனன். (௨௩)

வேறு.

உலப்பை வந்தடை யாமுன முயர்தவம் புரிய
நலப்பை வாளராத் தாங்குமம் புவிதனி னுடித்
தலப்பை யின்னதென் றறிவரு மகிமைமா தவர்க்குக்
* கலப்பை சூழ்ந்தொளிர் சுபதலங் களிப்புறக் கண்டான். (௨௪)

* கலப்பை - உபகரணம்.

எண்ணு மம்பதி னுயிர யோசனை யிலகி
நண்ணு நீளநா லாயிரம் யோசனை நலஞ்சேர்
திண்ணி தாயுயர் செழுமதி னாற்றிசை சூழ
வண்மை யானகை வளம்விளங் கிடவகுத் தமைத்தான் (உரு)

ஏயு மூவிரண் டாயிரம் யோசனை யெழுச்சி
யாயுங் கோபுரத் தமைந்தணி பெறுமுரு விளங்க
வாயி னான்கினு நின்றிடு மரகதக் கதவிற்
பாயும் வச்சிரத் தாளலாற் பகரரி தாமால். (உசு)

பகடு பூண்டிழா தொளிர்மணித் தூண்பல நிறுத்தித்
தகடு றம்பசும் பொன்னொளி தளும்புமண் டபமு
முகடு வேய்ந்திடும் விமானமு முழுநிலாத் தவழ்ந்து
துகடு லக்கிவீழ்த் திலகுமே டையுமகத் துளதால். (உஎ)

வேறு.

சிற்ப நூல்விதி யிற்சிறி தாயினு
முற்ப கர்ந்த முறைபிற ழாமனற்
பொற்பு யர்ந்து புனையுஞ் சினகரம்
பற்ப லப்டண் பமைந்து பரந்ததால். (உஅ)

குண்ட மேகலை தண்டில மன்றியே
யண்டர் வந்தவி யுண்ணு மிடமரும்
பண்டம் வைக்கும் பயிலிடம் பற்பல
கண்ட மைத்தகண் காட்சி மலியுமால். (உகூ)

விருக்க வுத்தமங் கண்டு விதித்திடுஞ்
சுருக்குந் தூய சுருவமுஞ் செந்தழ
லருக்க னன்றிக் கடையு மரணியு
மிருக்குந் தூய்மை யிடமு மமைத்தனன். (௩0)

கோப மாழக் குணமிகு மந்தணர்
தாப வான்கனல் வேள்விசெய் சாலையி
னூப தாரு வுயர்நல் லிடத்துட்
ளூப சுப்பந்த லத்தல மாக்கினான். (௯க)

மணங்க மழ்ந்த மலர்புனை மாலையுங்
குணங்கொ ளும்பனி நீர்குளிர் சாந்தமு
மிணங்கு பைங்கருப் பூரமு மெய்திடங்
கணங்கண் கண்டு களிப்ப வமைத்ததால். (௯உ)

அன்ன சாலையு மந்தணர் சூழ்ந்திடும்
பன்ன சாலையும் பாகிலைச் சாலையுஞ்
சொன்ன சாலையுந் தூய்மணிச் சாலையு
மின்ன சாலையென் றெண்ணரி தாகுமே. (௯௩)

வேறு.

வழிமதுத் துளிக்குந் தூய மடலவிழ் மலர்மி டைந்த
பொழிலகத் தமைந்த சாலை பொற்புற முதிரை யேன
லெழின்மிகும் யவைநீர் வார மெட்கனிக் குவியன் மற்று
மொழிவது முழுதும் வைக்கு முறைதெரிந் தமைத்தான் மாதோ, ()

மருப்பயில் பதும மேவு மறையவன் வகுத்த வேத
விருப்புறு பலன்க ணல்கும் வேள்விசெய் சாலைச் சூழற்
றருப்பையும் பொரியுந் தேமாந் தழையொடு சமித்து நெய்யு
மிருப்பதற் கியனூல் சொல்லு மிடம்பிற ழாத மைத்தான். (௯௫)

உந்தியங் கமலப் போதி னுதித்தநான் முகன்பூ மேவுஞ்
செந்திரு மார்பன் மேலாஞ் செம்பொன்வா னுலக ளிக்கு
மிந்திரன் முதலா யுள்ள விமையவர் யாக சாலை
வந்தினி திருக்கும் பீட மலைப்பதும் வகுத்தல் செய்தான். (௯௬)

இனையன பலவுஞ் சூழ வியல்புளி வழாது மேன்மை
தனையறி வரிய யாக சாலைநன் கமைத்துத் தாழா
தனையமா தவர்ம லர்ப்பொன் னடியிணை யிறைஞ்சி னான்கற்
பனைபதோ படைப்பெ முச்சிப் பான்மையோ வெனம கிழ்ந்தார். ()

விண்டுதே னொழுக வோங்கி விண்முக டளாந்து லாவும்
வண்டுளர் மலர்ப்பூங் கானின் வளங்கெழும் யாக சாலை
கண்டுள மகிழ்ந்த தூய கடவுண்மா தவர்கள் சூழ்ந்து
பண்டுசெய் விரதம் வந்து பலித்தெனுஞ் சாலை சார்ந்தார். (௩௮)

சகத்திருண் மயக்கந் தீர்ந்த சவுனகன் சனகன் கற்க
னகத்தியன் வியாக்ர பாத னத்திரி விசுவா மித்திர
னுகத்தினை யனேகங் கண்ட வுரோமமா முனிவன் குச்சன்
சுகத்திரு முனிதூர் வாசன் குணிபரத் துவாச னென்போன். (௩௯)

காசிபன் வசிட்டன் சாந்தன் கார்த்தியா யனன்ம ரீசி
யாசிகர்த் தாபு லத்திய னணிமாண் டவியன் றுற்பிய
னசிகே தாத்தி ரேய னாரதன் பருவ தாக்னி
தேசில கியத தீசி சிலாதரன் வாம தேவன். (௪௦)

இருதிலி கிதன்ம தங்கன் ளொர்சுனச் சேபன் மேன்மை
தருசனந் தனன்சி றந்த சனாதிபன் றகுசாண் டில்யன்
பிருகிரை வதன்பி றங்கு மாதேசன் பினாகி சீர்த்தி
வருமிரு கண்டாங் கிரன் வைச்சிர வணன்சம் வர்த்தன். (௪௧)

பகைத்தெழு புலத்தை வென்ற பார்க்கவ முனிவன் பாரின்
மிகப்பெரு மயக்க முற்றும் வெறுத்திடுங் கபிலன் வேத
வகைத்திற னங்கம் யாவும் வகுத்தறி நாத சன்மா
இகைப்பனு காது வாய்மை திகழ்சம தக்னி மேலோன். (௪௨)

புராதன மறைக்கு மெட்டாப் புனிதன்பொற் புரும ணிச்சூட்
டாரவணி பரன்ம லர்த்தா ளகத்தனு தினமு நீங்காப்
பராசரன் றகுமார்க் கண்டப் பண்ணவன் கண்ணு வன்சீர்த்
தராதலந் தனின்மே லாமுத் தாலக முனிவன் சாத்தியன். (சங)

கேழ்கிளர் குசிக கோத்திரன் கெழுமுபல் கலைநற் கேள்வி
சூழ்சுனப் புச்சன் ஞான சூரிய னெனத்து தித்தே
யேழ்புவி யிறைஞ்சும் வேதா ரணியன்மற் றேனை யோரும்
வாழ்பெருந் தவப்பே ருன மகம்புரி வதற்கெ ழுந்தார். (சச)

வேறு.

ஆய்ந்த நான்மறை யந்தண ரரியநல் வேள்விக்
கேய்ந்த யாவையு முபகர ணமுமினி தமைத்தே
வாய்ந்த நெய்சொரிந் தாகுதி விதிமுறை வழாது
காய்ந்த னற்சொலித் தெழுந்திடக் கனிந்துசெய் தனரால். (சரு)

போதி னுன்முகன் பூவைமே னியன்மதிப் புனித
னுதியாகிய கடவுளர்க் கருமறை பகர்ந்த
நீதி யாய்ந்தவி யருத்தினர் நெறிபிற ழாதே
யோதி வாய்ந்துநல் லொழுக்கமுற் றியவுயர் தவத்தோர். (சசு)

நிரம்பி நற்குண நெறிவழி யொழுகினன் னிலைமை
வரம்பி கந்திடா மாதவர் மகம்புரி சூழ
னரம்பி சைந்திடும் யாழொலி நான்மறை யொலியேழ்
சுரம்பி றங்கிசைப் பாடலி னெலிதொனித் திடுமே. (சஎ)

மேக மண்டலம் போழ்ந்துமே லெழுந்துமே வரிய
மாக மீதுலா வியசெழு மலர்திகழ் வனஞ்சூழ்
யாக சாலையி விரவுநன் பகலுமெண் ணரிய
காக ளம்மணிச் சின்னநல் லிசைகலித் திடுமே. (சஅ)

கொழுந்து விட்டனல் சொலித்தது விண்மிசைக் குழுறி
யெழுந்து துந்துபி முழங்கின விடிக்குரன் முழவ
மழுந்து மோசைவிட் டார்த்தன வதிர்ந்தன வெங்கும்
பொழிந்து பூமழை நிறைந்திடும் யாகபூ மியினில். (சகூ)

பாகு தித்திடு மின்னிசைப் பாட்டளி முரலுங்
காகு ளிர்ச்சிகொ டளிர்மலர் கமலமே லெழுந்த
வாகு திப்புகை நறுமண மகலிரு விசும்பி
னேகு மைப்புயல் சொரிமழை யினுங்கமழ்ந் திடுமே, (ரு௦)

கொடிசி றந்திடுங் கிழங்குகாய் கனிகுளிர் தருநீர்
வடிசி றந்தநெய் தோய்ந்தசிற் றுண்டிவாய்ந் திடுபா
லடிசி லின்சுவைக் கருனைவெண் சாலிநல் லன்ன
முடிசி ருங்கநீள் கடவுளான் முறைதெரிந் தளிக்கும். (ருக)

பொய்வ திந்திடு புறச்சம யந்தனை யொழித்துச்
சைவ சாத்திரந் தத்துவ நெறிபகுத் துணர்ந்த
தெய்வ நீறணி யந்தணர் தேன்மழை கமழ்ந்து
பெய்வ னந்தனிற் பிறவும்வேண் டுவபல வுளவால். (ருஉ)

ஒருப லத்தையும் விரும்பிடா வும்பர்கோ னருளால்
வருப லப்பய னிதுவென மகம்புரி முனிவ
ரிருப திற்றினு ருயிரஞ் சீடர்பாங் கிருப்பத்
தருப ணைத்தெழு வனந்தனிற் றகும்படி செய்தார். (ருங)

அனைய வற்புத யாகமீ ராறெனும் வருடந்
தனில ருந்தவர் நிறைவுறச் செய்துதன் டளிர்மென்
னனைய ரும்பிடு கற்பக நாட்டுறை வேந்த
னெனைய தேவரு மவிநுகர்ந் திடவினி தளித்தார். (ருச)

நலன்செ ழித்திடு நைமிசா ரணியமென் றுரைக்கு
நிலன்செய் புண்ணியப் பேறென நெடிதுபற் பலநாள்
வலன்சு ழன்றெழு பாவகற் கெழின்மறை மனுவாற்
புலன்செ யித்தவர் பூரணா குதிபுரிந் தனரால் (௫௫)

எழுது தற்கரி தாமறை யியம்பிடும் விதிகண்
முழுது ணர்ந்தவர் முறைசெய்து வேள்விமுற் றியபின்
பழுது றுதுநீ ராடியவ் வேள்விசூழ் பரப்பிற்
றொழுது சந்தியிற் கடன்கழித் தினிதுசூழ்ந் தனரால். (௫௬)

இவவி னின்றிடு நரம்பிசை யெனத்திசழ்ந் தொளிரு
மவண யர்ந்தெழு நாதமஞ் சுழுமுனை யடுத்து
மவுன யோகநன் மாதவம் புரிதரு மகிமைச்
சவுன காதிமா முனிவரர் மகிழ்ச்சிசாற் றரிதால். (௫௭)

பன்னு நான்முறை பகர்ந்திடு பலதவ மியற்றி
மன்னும் வேதியர் மரபினுக் கோதிய யாக
முன்னும் வாய்மையா யுளுற்றின மொளிர்மதி யணிந்த
மின்னும் வேணியன் வீடுறை வழிவினை வறியேம். (௫௮)

எது வாமிவை செய்தயா மினியது கிடைக்க
வோது முண்மையா முபாயமு முணர்கில மெனவே
கோது நீங்கிய குணத்தினர் குறித்திருந் தனரப்
போது சூதமா முனிவரன் போந்தனன் மாதோ. (௫௯)

வேறு.

பண்டிசைவு கொண்டபுரி நூலெலர்ளி பரம்பப்
புண்டர மிருந்தநுதல் பொற்புற வணைகங்
கண்டிகை புனைந்துசடை கட்டவிழ விண்ணின்
றெண்டிசை விளங்குகதி ரோனென வெழுந்தே. (௬௦)

வண்டொடு மிடைந்தமலர் விண்டுமணம் வீசும்
விண்டொடு வளர்தனில் விரைந்துகர மீது
தண்டொடு கமண்டலம் விளங்குமுனி சாரக்
கண்டொடு மகிழ்ச்சிகரை கண்டிலர்க ளம்மா, (கக)

வேறு.

புனித மாதவர் சூதமா முனிவரன் போத
வினித லர்ந்த செந்தாமரைக் காங்குவித் தெழுந்தே
கனித ரும்பல முகமனின் அரைத்தகங் கரைந்து
பனித யங்குசெம் பொன்னொளிப் பதுமபீ டிகைமேல். (கஉ)

வைத்த ருக்கியங் கொடுத்துநின் வரவுகண் மலரோ
ருய்த்த னுக்கிர கம்புரி யொளிமிகு வனத்தின்
மெய்த்த ருந்தவம் வேள்விசெய் பேறெனை வியந்து
பொய்த்த விவ்வுடற் புனிதமா கியதெனப் புகன்றார். (கங)

துய்ய மாதவர் சூதமா முனிவனைத் தொழுதே
ஐயய கேள்பதி னெண்புரா ணமுமரு மறையும்
வையய மீதுள கலைகளும் வகுத்துணர்ந் தனையா
மூய்ய நின்றிரு வருளாலாற் பிறிதுவே றுளதோ. (கச)

என்றெ டுத்தெடுத் துரைத்திரு கண்களணி ரிறைப்ப
நின்றெ மக்குமற் றேனைய வுயிர்க்குநீங் கரிதா
யன்றெ னைத்தையு மறைத்துழும் மலவிரு ளகலத்
துன்றெ மின்னகத் தவனருள் வீடுசேர் சூழ்ச்சி. (கரு)

யாது செய்திடிற் பெறுவது மெனவுரைத் திவரைய
வோது மாதவர் வாய்மைகண் டிருகிபோர் முகூர்த்த
மூது ணர்ந்தவ னுணர்ந்தக் கடலினமூழ் கினன்பின்
காது நீவிர்கேட் பனசொலத் தகுமென வியந்தான். (கசா)

உலகு போற்றிடு நைமிசா ரணியமென் றுரைக்கு
மிலகு முத்தம சருக்கமீண் டுரைத்தன னிப்பா
லலகு கண்டெடுத் துரைப்பரு மனேகமா மகிமைப்
பலன்வி ளங்கிடுந் தலச்சருக் கம்பக ருவனே. (௬௭)

நைமிசாரணியச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௩அ.

---

## தலச்சருக்கம்.

கஞ்சநாண் மலர்மே லுறையயன் முதலோர் கற்பகா லம்பல தேடி, நெஞ்சினுத் தின்னங் காணரும் பொருளை விழைந்தனிர் நிகழ்த்துவ னென்றே, யெஞ்சலில் வளஞ்சூழ் நைமிசா ரணியத் தினிலுறை யருந்தவ ரிலகு, மஞ்செவிக் கமுத மாமெனச் சூத முனிவரனன்புகூர்ந் துரைத்தான். (௧)

வேறு.

விடைப்ப ரம்பொருள் மெய்யருள் விளங்கிவெவ் வினையைத்
துடைப்ப மும்மல வலிதொலைந் தவர்தொகு மிடமாங்
கிடைப்ப தற்கரு முத்தியைப் பெறும்வழி கேள்வி
நடைப்ப யின்றநன் முனிவிர்கா ணயம்பெறக் கேண்மின். (௨)

உவமை சொல்லரு மியோகநன் கியற்றினு மூண்மைத்
தவமு திர்ச்சிகொள் சாந்திரா யணமுதல் விரதம்
பவமொ ழிந்திடப் புரியினும் பலித்திடும் பரம
சிவன ருந்தல வாசஞ்செய் யினுமுத்தி சேர்வார். (௩)

என்று சூதமா முனிவர னுரைத்தன னிலங்கு
துன்று ரோமநற் புளகித முற்றிடத் துதித்தே
நன்று கூறினை யையநீ நால்வகைத் தோற்றஞ்
சென்று தித்திடுஞ் சராசர மியோகுசெய் திடுமோ. (௪)

உண்மை சூழ்தவம் விரதநன் றுஞற்றுவ தெளிதோ
வெண்மை காணரு முயிர்த்தொகு திகட்கெலா மியலும்
வண்மை யேதல வாசமற் றதன்பெரு மகிமை
யண்மை சேய்மையிவ் வனைத்துநீ யருள்செயென் றுரைத்தார். (௫)

வேறு.

எடுத்த ருந்தவ ரருள்செயென் றுரைத்தலு மிணையிரு விழியென்னு
மடுத்த தும்பிவீ ழானந்தப் பெருக்கொடு மயிர்ப்புள கிதஞ்செய்யத்
தொடுத்த கங்குழைந் துருகிடப் பற்பல தொகுத் துரைத்தனனம்மா
கடுத்த தும்பிய கண்டன்மெய் யருள்பெறு கருணைமா தவர்கேட்ப. (௬)

வேறு.

அன்ன தன்றியொன் றுரைத்தன ரையகேண் மகிமை
யின்ன தென்றறி வதற்கரும் வியாசன்றன் னிடத்திற்
பன்ன ரும்பதி னெண்புரா ணமும்பகுத் தறிந்து
முன்னர் மற்றுள கலைகள்யா வதுமுழு துணர்ந்தாய். (எ)

திருந்தி டுஞ்சிவ தலவிசே டங்களுந் தீர்த்தம்
பொருந்தி நீடுமான் மியமுமேற் புகழ்சிவ தீக்கை
வரும்ப டிக்கிடைத் திடுஞ்சைவா சாரமு மற்று
மருந்தி றற்பெற விரித்துணர்ந் தனைபெரி தாமால். (அ)

நேர்மை யானநன் னெறிதனி னேர்மையாய் நிலவுஞ்
சீர்மை யாகிய சைவமான் மியநயந் தெரிந்து
கூர்மை யாமறி வுடையையிக் கலிதனிற் குலவி
யார்மை சேர்மிடற் றண்ணல்கீர்த் தனஞ்செய லரிது. (௯)

ஆழி சூழ்புவி யினிற்சிவ பத்திரா னரிது
வீழி வாயுமை பாகன்மெய்த் தலம்பெற லரிதுள்
ளூழி யற்கையாய்க் கிடைப்பினு முண்மையாய் முத்தி
வாழி மானுடர்க் குதவுபுண் ணியத்தல மரிது. (௧௦)

எனவு மையநீ யோதினை யிளம்பிறை கங்கை
மனவு சேர்தரும் வள்ளல்பா தாம்புய மலரை
நனவு வாய்ந்திடு பொழுதினு மன்றிகண் ணிடுநீள்
கனவு காண்பினு மருதூரற் கருத்தமைந் தனையே. (௧௧)

மூர்த ருந்தவ மேம்மனோர்க் குதவிசெய் முறைபோற்
பந்த நீத்திடும் பரமபுண் ணியவுரு வெடுத்து
வந்த செல்வரால் வயித்திய நாதமென் றெழில்சே
ரிந்த மாநிலத் தொருதல முளதென விசைத்து. (௧௨)

கயிலை யாதியா மகிமைசேர் கண்ணுதற் பெருமான்
பயிலும் புண்ணியத் தலம்புவி யினிற்பல வுளவால்
வெயில்வி ரித்தெழு மாடமா ளிகைமிக விளங்கிச்
சயில நேர்பெறு மனையநற் றலத்திலுத் தமமாம். (௧௩)

எண்ணி டுங்கணப் பொழுதினிற் பாதியா யினுமப்
புண்ணி யத்தலம் புகுவதற் கிச்சைசெய் தவர்க
ணண்ணி வாழ்வாரற் கதியலா தருத்திர ளுவா
ருண்ணி னைத்தன பெறுகுவ ரெனவுரைத் தனையால். (௧௪)

அனைய வற்புதத் தலப்பெரு மகிமையை யடியே
னினைய வெண்ணபுண் ணியப்பல னறிகிலே னினது
புனைய ருட்கிட னுனையாம் பெறும்வகை புகழ்ந்த
தனைய ருந்தவ வுரைத்தரு ளெனப்புகன் றனரால். (௧௫)

ஆய மாதவ ருரைத்தலுஞ் சூதமா முனிவ
னேய மாகசீர் சிவவழி பாடன்றி நீங்காக்
காய நன்மனம் வாக்கினாற் பணிதலுங் கனிவு
மேய மாமகி மைத்துதி செய்தலு மியல்பால். (கசு)

சம்பு வின்கதை கேட்பவன் சங்கர னுவான்
வெம்பு கோபநீத் தருந்தவம் விழைந்திடுங் குணத்தீர்
நம்பும் வாய்மையா யிடைவிடா தையனற் கதையை
யம்பு விக்கணே கேட்பதா லதிகபண் பினரால். (கள)

இன்ன தன்மையர்க் குரைப்பதை யன்றியே றுகந்த
முன்ன வன்கதை பத்தியின் மூர்க்கர்க ளிடத்திற்
சொன்ன வன்னர கந்தனிற் றேய்வனென் றுரைத்துப்
பின்னர் புண்ணியஞ் செய்தனர் பெறுவதா மென்றான். (கஅ)

வேறு.

வளங்கெழு வெத்திரி வனந்தனில் வியாசன் வாய்மலர்ந் தருள் செய வன்றோன், விளங்கெழி லருளா லுணர்ந்தநற் சரித மிகுசிவ பூசையின் பலனும், களங்கெறி முனிவீர் கேட்பது வேண்டு மென்றன னன் கணிப்பினா லுணர்ந்து, துளங்கெவற் றினையுந் துரிசறக் கடிந்த சூதயா முனிவரன் மன்னோ. (கக)

ஆற்சடற் கரைகண் டிலகுமம் முனிவ னுடங்குநான் மாரி னீர் கேண்மின், பாற்கடற் பிறந்த கடுநுக ரமல பராபர பாலநேத் திரநற், சேற்கருங் கண்ணாள் பாகவே றுகந்த சிவசிவ சங்கர குளிர் கல், லாற்கவி னிழ லமர்ந்ததற் பரகு மாரண வெனுமது நாவாம். ()

கறைமிடற் றண்ண லாலய நோக்கி நடப்பது கால்களா மெ முதா, மறைவகுத் தறியாப் பரன்றாி சனஞ்செய் திடுமதா கண்ண

தா மமுமா, னுறைபரன் சரிதங் கேட்பது செவிதா மூறுமதே யுடல தா மினிய, நறைகமழ் மலர்க ளருச்சனை செய்து நறுமண மறிந்த நாசிய தாம். (உக)

எடுத்தினி துரைத்த வவயவம் படைத்தே யிருந்திடு மருந்தவத் தினிர்சேர்த், தடுத்திணை பகர்தற் கரிதுபூ மியினி லனையநற் றலத்தி னைக் காணேன், கொடுத்திடு முத்திக் கங்குர மென்று கூறுவர் குண கடன் மேல்பாற், றொடுத்தயோ சனைதூ ரந்தனிற் சுவேத வனமி டை சூழ்ந்திட மாதோ. (உஉ)

திகழ்தரு சாயா வனத்தினுக் கனிலன் றிசையினிற் சிரபுர மெ ன்று, புகழ்பெறு நகர்க்கு நிருதிதன் றிசையிற் பொருந்திடு குரோச மாத் திரத்தி, னகழ்துயர் நீக்கும் வாளொளி புத்தூர்க் காகுநற் றிசை யதின் கீழ்பா, னிகழ்தருந் தெற்கும் வடக்கினு முபய காவிரி நிறை ந்திட மன்னும். (உங)

வேகமாம் பொன்னி மாநதி யிருபால் விளங்கிடு மெல்லையி னள வை, யேகயோ சனைமாத் திரமித னுப்ப ணிலகிடு மிந்திர தலத் திற், காகுமோர் குரோசம் வாயுவின் றிசையா மந்நகர் மன்னுசுற் றெல்லைச், சேகரங் கூறிற் கிருதமா யுகத்திற் றிகழ்ந்திடு நான்குயோ சனையே. (உச)

உரைபெறுந் திரேதா யுகந்தனி லொருமூன் றியோசனை துவா பர யுகத்தின், விரையுமியோ சனையோ ரிரண்டினிக் கலிதான் வந் திடு முகந்தனி லம்மா, புரைதவிர்ந் திலகு மியோசனை தூரம் பொ ருந்துநற் பொற்புறு மினிய, தரைபுகழ் வயித்திய நாதமா நகரந் தன்பெரு மகிமைகூ றரிதே. (உரு)

இனையவற் புதநற் றலந்தனிற் கணப்போ தெண்ணிடுங் கணத்தினிற் பாதி, வனைதரும் வாசஞ் செய்தனர் பெருகி வளர்ந்திடு சகலபாக் கியமு, நினைவரு நிமலன் பதவியும் பெறுவ ரென்றிடி னித்தியந் தலம்வா, ழனைவரும் பெறும்பே றனேககற் பங்க ளளவிட வரிதரி தாமால். (உசு)

பண்ணிய தவத்தின் பலன்பலித் தென்னப் பகர்பதி னெண்புரா ணத்தின், புண்ணிய கதையி லுத்தம மாகும் புராதனன் வயித்திய நாத, னண்ணிய வனைய தலப்பெரு மகிமை யாவது நவிலுதற் கினியா, னெண்ணிடிற் கோடி வருடத்து முடியா தென்றனன் சூதமா முனிவன். (உஎ)

முந்திய கிருத யுகந்தனிற் கதம்ப வனமிரண் டாமுக முறையாய், வந்திடும் வில்வ வனந்துவா பரத்தின் வளர்ந்திடும் வகுளநீள் வனஞ்சூழ், தந்திரக் கலியிற் றழைந்திடு நிம்ப வனமதிற் சதுர்முகன் முகுந்த, னிந்திரன் பணிய வயித்திய நாத னின்பமுற் றினிதுறை குவனால். (உஅ)

சிறந்திடு மகிமை யுறுந்தரு வொன்றே சேர்ந்திடும் யுகந்தொறும் வேறாய்ப், பிறந்திடும் பெயர்பெற் றிருந்திடு மதனிற் பெரியவீரேழுல கமர்வோர்க், கறம்பொரு ளின்பம் வீடுதந் தருள வமர்ந்திடு மையனைப் புவியி, லுறங்குத றவிர்ந்தே யொருதரம் பார்த்தோருறைவர்பே ரின்பவீ டெளிதாய். (உகூ)

கண்ணகன் புவியிற் பொடிந்ததூள் பகுத்துக் கணக்கிட லாங்குவி மணலை, யெண்ணலா மெழுந்து சொரிமழைத் திவலை யினைக்கணித் தறியலா முயர்ந்த, விண்ணகத் திலகு தாரகைத் தொகையை

விதிக்கலாம் வயித்திய நாத, வண்ணல்சூழ் தலத்தைக் கண்டபேர் பெறும்பே றளவிட லரிதரி தாமால். (௩0)

மண்ணினின் விளங்கும் வயித்திய நாத மகாதலஞ் செனனமத் தியிற்றங், கண்ணினு லொருக்காற் பார்த்தவ ரிட்ட சாமியம் பெறு வர்வெண் கயிலே, நண்ணியே யுபய குலமிரு கோடி சூழ்ந்திட நடு வினி திருப்பா, ரெண்ணியோர் கற்ப காலமே லைய னினிதருண் முத் திபெற் றிடுவார். (௩௧)

வரமகத் துவஞ்சேர் வயித்திய நாத மாநகர் பெயர்சொலக் கே ட்போர், பிரமகத் தியுந்தாம் பிறந்தநாண் முதலாய்ப் பிழைபடச் செ ய்தபா தகமு, மூரமற வுதறி யெறிந்துதம் முடலி லுற்றநோய் முழு வதுந் தீர்ந்து, பரமபுண் ணியஞ்செய் யுத்தமர் பெறும்பே றனைத்து மே பலித்திடப் பெறுவார். (௩௨)

பெருந்திரைக் கடலி லுளபல புவியிற் பிறந்தவர் தீவுக டம்மி, லிருந்திடு மவர்வந் திறைஞ்சுதற் கெளிதன் றுதலா லிருக்குமூ ரத னிற், பொருந்தியே வயித்திய நாதநற் றலத்தின் பொற்புறு திசைத னைப் பார்த்தே, திருந்திடப் பணிவோர் தீவினை யொழித்தே திகழ் தரு கயிலேவீற் றிருப்பார். (௩௩)

நூறயோ சனைதூ ரத்தனி லிருந்து நுவலருந் தலப்பெயர் நினைந்து, கூறிடுமவரும் வல்வினை நீங்கிக் குலவுபே ரின்பவீ டுறை வா, ரீறிலாப் பெருமை வயித்திய நாத வெழிற்றல வாசஞ்செய் வேனென், றூறிடு மன்பா னிதஞ்சொல்வோர் தலத்தி லுறைவர்தாம் பெறும்பலன் பெறுவார். (௩௪)

மடுப்பொலி கமல மலர்மணங் கமழும் வயித்திய நாதநற் றலம் பார்த், தெடுத்தடி வைத்துப் போகுவ மென்றே யெழுந்தன ரடிக்

கடி யம்மா, வடுத்திடு மசுவ மேதயா கஞ்செய் யரும்பலன் பெறு குவ ரன்றிக், கடுத்தனை நுகர்ந்த கண்ணுதற் பெருமான் கயிலையங் கிரியுமே பெறுவார். (௩௫)

நனைத்தரு நந்த வனமிகும் வயித்திய நாதநற் றலந்தனை மனத்தி னினைத்தவக் கணத்தி னீடும்வெங் கலிதோ டந்தனை நீக்கியே முத்தி தனைத்தரு முலகி லதிகமா மகிமை தான்றரு மன்பருக் குதவி யினைத்தரும் பாரம் வதிந்திடு மிட்ட காமிய மியாவதுந் தருமே. ()

வருதின மைந்து மூன்றுதான் வாசஞ் செய்திட வேண்டுமா மகிமை தருமுயர் வயித்திய நாதநற் றலத்திற் றம்முளங் கனிவுகூர்ந் தினகி யொருதினம் வாசஞ் செய்தனர் பதினு யிரமுய ரசுவமே தஞ்செய் பெருமகப் பேறு பெறுகுவ ரன்றிப் பேரின்ப வீடுமே பெறுவார். ()

தருமசிந் தனைசெய் தனர்க்கதி விருத்தி தான்செயுந் தனம்விழைந் தோர்க்கு, வருதன விருத்தி கொடுத்திடும் போக வாஞ்சைசெய் பவர்க்குமப் படியா, மொருபலன் விழையார் முத்தியை விழைந் தோர்க் குளமகிழ் தரவினி தளிக்கு, மிருநில மதனில் வயித்திய நாத வெழிற்றல மகிமைகூ றரிதே. (௩௮)

புதல்வரை விரும்பு மவர்க்குநற் புதல்வன் றனைத்தரும் புவி விரும் பினர்கட், கிதமிகு மகில புவனமுந் தருமே யெழில்பெறு கன்னியை விழைந்தோர்க், குதவுமங் கனகன் னியையது வன்றி யுற் றவர் பிணிவினை தீர்த்துப், பதவிநல் கிடுமவ்வயித்திய நாத மகாதலம் பார்தனி லம்மா. (௩௯)

சாற்றுபொய்ம் மாயக் கடலினி லழுந்திக் கிடந்திடு முயிர்த னைக் கரைதா, னேற்றுநற் பிணைதா னுகிடும் பிறந்த தினிப்பிறக் கின்

றன பிறவி, தோற்றுமெவ் வுயிர்க்குஞ் சொலற்கரும் பரமா னந்த நல் கிடுந்தொகுத் தெழுத்திட், டேற்றுமந் திரங்கட் கிடமதாம் வயித்திய நாதமா மெழிற்றல மாதோ, (சம)

எழுந்துசு ழவிச்சை யிருட்டினாற் குருடா யிருந்திடு மனுக்களுக் கெழுந்து, கொழுந்துவிட் டிலகு தீபமாம் வயித்திய நாதநற் றலந்துவ லயத்தி, னழுந்தும்வல் வினைக்கு மண்ணினை மருந்தா யளித்திடும் பிறவிவே ரறுக்கு, மொழிந்துமேற் கதியுந் தருமிதற் கிணைவே றெப்பிட லரிதரி தாமால். (சக)

திருக்ககன் றிலகும் வசுக்களோ ரெண்மர் திகழுருத் திரர்பதி னொருவ, ரருக்கர்பன் னிருவர் புரந்தர னயன்மா லாதியாங் கடவுள ரன்றி, யிருக்குரைப் பரிய முத்திபெற் றிடவே யெண்ணிலர்க் கருளுநல் லெழிற்செம், புருக்கனற் கோபக் கட்பசா சனைத்துமோட்டிடும் வயித்திய நாதம். (சஉ)

வருசன நடந்த போதெழு செந்நாள் படினும்வாழ் சுரபிகாலடியிற், பெருகுநாள் படினுஞ் சுழன்றிடு காற்றிற் பிறந்தநாள் வீழினும் பெருங்காற், றிருநில மதிர வடித்தநாள் படினு மிலகும்வேளூர்நெடு வீதித், தெருவிலங் கப்பிர தக்கிணஞ் செய்வோர் சிறுதுகள் படினுநற் கதியாம், (சங)

மட்டிலா மகிமை வயித்திய நாத மகாதல வீதியி லெழுந்நாள், பட்டபே ரரச ராயுல காள்வார் பகர்தரு முருத்திர ராவா, ரிட்டமாம் வரங்கேட் பவர்க்கிரு மடங்கா மிலகுபுண் ணியஞ்செய்வோர்க் கிரட்டி, நட்டம்வா ராம லளித்திடும் வளர்மெய்ஞ் ஞானமும் வீடுநல் கிடுமே. (சச)

உலகெலாந் துதிக்கும் வயித்திய நாத னுறைதல வாசமுற் திருக்க்கு, மலகுகா ணரிய கலையுணர் மறையோர்க் கமைந்திடு சந்திவந் தனஞ்செய், யிலகுசோ பான மியல்பெறுங் கிரகங் கருங்கன்மா ளிகையிவை கொடுப்போர், பலகுண மணிசூழ் முடிபுனை வேந்த ராகிமேற் பரகதி பெறுவார். (சரு)

ஒத்திடு மகிமை வயித்திய நாத னுறைதலந் தனில்வள ரன்ன, சத்திர மடம்வீ டிடமிகு மாட மாளிகை தழைந்தெழில் கொழிக்குஞ், சித்திர கூடங் கட்டிவைத் திலகு சிவனடி யார்க்களித் திடுவோர், புத்திர ருடனே சகலபோ கங்கள் புசிப்பர்மேன் முத்தியும் பெறுவார். (சசு)

அல்லணி களத்தெம் மையனல் வயித்திய நாதன்வாழ் தலந்தனி லன்பர்க், கில்லிடங் கட்டி வைத்தவர் குலமூ வேழுட னின்பமுற் றிருப்பார், செல்லுமுத் திரந்தூண் போதிகை மரங்கல் சிவனடி யார்தமக் களிப்போர், சொல்லரு மணிபொன் னுடையா ப்ரணஞ் சூழ்வர்பே ரின்பமும் பெறுவார். (சஎ)

வளம்பெறும் வயித்திய நாதன்வாழ் தலத்தின் வழிநடைச் சாலையின் மீது, தளர்ந்தவ ரிளைப்பா றுதற்கமை தண்ணீர்ப் பந்தல்சத் திரங்கண்மண் டபந்தன், னுளங்கனிந் துறுதி பெறச்செயு நல்லோ னுயர்குல மிருபதிற் றொன்றும், விளங்கிடும் விமான மேறியே சிவலோ கந்தனின் மேவியே யிருக்கும். (சஅ)

மாடமா ளிகைசூழ் வயித்திய நாத மகாதலந் தனில்வள மிலகு
பாடக சாலை செய்துபோற் றினர்கள் பாருல காள்வர்கோ சாலை
யாடக மதில்சூ ழங்கே ரதனிற் செய்துவைத் தவர்கள்கோ வுலகந்
தேடரும்பசும்பொன் னுலகினில்வாழ்வர் சேர்குவர்மேற்சிவலோகம்.

அற்புத வயித்திய நாதநற் றலத்தி லணிமண மமைந்தசெங் கழு நீர், பொற்புறு நளின வாவியைப் புரிந்து வைத்தவ ராசராய்ப் பிற ந்து, கற்புறு மனையா ளுடன்கலந் திருந்து கல்விசேர் புதல்வரைப் பெற்று, நற்புவி செங்கோல் செலுத்தியே யாள்வர் நண்ணுவர் மேற் சிவ லோகம். (ரு0)

திகழ்தரும் வயித்திய நாதநற் றலநாற் றிசைதொறும் பரிதியங் கடவு, ணிகழ்வெயிற் கினிய குளிர்நிழ லளித்து நின்றிடுந் தருமிக வைப்போர், புகழ்பெறும் வேந்த ராயுல காள்வார் பொன்னுல கமும் புரந் திடுவா, ரிகழ்விலா விமான மேறியே மகிழ்கூர்ந் தெய்துவர் மேற்சிவ லோகம். (ருக)

படங்குனித் தாடு மரவணி வயித்திய நாதநற் றலந்தனிற் பரி ந்து, தடம்புனற் றீரந் தனிற்றரு வைப்போர் சகலபாக் கியம்பெறு குவர்நன், மடந்தைதன் னுடனே யில்லறம் புரிந்து வானுல காள்வர் மேற் பதவி, யடங்கலும் பெறுவ ரவைவெறுத் திடிற்சொல் லரிய பே ரின்பவீ டுறைவார். (ருஉ)

மழுவணி வயித்திய நாதனற் றலத்தின் மன்னுபூந் தோட்டம் வைத் திடுவோர், செழுமல ரொன்றிற் கிலகுமைம் பதினா யிரம்வரு டஞ்சிவ லோகர், தொழுதிடுங் கணங்கள் சூழ்ந்திட விருப்பார் தூய பத் திரங்களொன் றினுக்குப், பழுதுறுப் பதினா யிரம்வரு டம்பொற் பமைசிவ லோகம்வீற் றிருப்பார். (ருந)

புண்ணிய வயித்திய நாதநற் றலத்திற் புகழ்பெறு வாகன மத னைப், பண்ணிவைத் தவரவ் வாகனம் பார்த்து மகிழ்ந்தவர் பரிந் தபகார, நண்ணிடும் படிசெய் தவர்கள்வாக் குதவி நல்லனு கூலசா

தகஞ்செய், திண்ணிய வுறுதி யுள்ளவர் வாழ்ந்து சேர்குவர் மேற் சிவ லோகம். (ருச)

புவனியிற் புகழ்சேர் வயித்திய நாத புண்ணியத் தலந்தனி லம்மா, சிவகயிங் கரிய விசாரணை செய்தோர் சித்தியும் போகமும் பெறுவார், துவரித முரம்பை கவரிகா லசைப்பச் சொல்லரும் விமானமே லேறித், தவமிகு தேவ கணம்புடை சூழச் சார்குவர் மேற்சிவ லோகம். (ருரு)

திருத்தகும் வயித்திய நாதநற் றலத்திற் றிருப்பணி செய்திடினம்மா, பருத்தமண் ணதனிற் றசகுணந் தாரு பகர்ந்திடுஞ் சதகுணஞ் செங்கல், பொருத்தமாங் கருங்கல் லாயிர மடங்காம் புண்ணியம் புவிமுழு தாள்வ, ருருத்தகு தேவ விமானமே லேறி யுறைகுவர் மேற்சிவ லோகம். (ருக)

சங்கரன் வயித்திய நாதநற் றலத்திற் றன்மனங் கனிவுகூர்ந் தமைந்த, செங்கலோ ரெட்டாற் றிருப்பணி செய்வே னெனத்திசை யெட்டினும் வைத்தே, யங்கதற் குபயோ கந்தனை நினையு மவர்சுமை யெடுப்பவ ரெனினுந், துங்கவெண் குடைசூ ழரசராய்ப் பிறந்து சூழ்திருப் பணிசெய்து மகிழ்வார். (ருஎ)

நிதியம்வைத் திருப்போர் நிலைபெறு சிவபுண் ணியநிமித் தம்மன மகிழ்ந்தே, மதிபணி பெருமான் பணிசெய வேண்டும் வயித்திய நாதநற் றலத்தி, லதிகபுண் ணியமாஞ் சிவாலயப் பணிசெய் யாதவ ருருங்கொடு நரகம், பதியவோர் பதினு யிரம்வரு டம்வீழ்ந் தனுபவிப் பார்பல துன்பம். (ருஅ)

படிபுகழ் வயித்திய நாதநற் றலத்திற் பகர்திருப் பணிசெய்யா திருக்குங், கடினசிந் தையர்போய்ப் பசாசதாய்ப் பிறந்து கணக்கில்

பன் னூளலைந் திடுவார், மிடியராய்ப் போகா திருந்திட வேண்டு மெனத்திர வியம்புதைத் திடுமக், கொடியர்கள் பிரம கற்பகா லங் கள் கோரமா நரகில்வீழ்ந் திடுவார். (ருகூ)

விஞ்சைய ரேத்தும் வயித்திய நாத வியன்றல மகிமையை விழைந்து, நெஞ்சொடு சிவகா ரியத்தினுக் களிப்ப நிறைந்திடு திர விய மதனை, வஞ்சனை செய்வோர் மகாநர கத்தி லழுந்துவர் வள்ள லுக் கென்று, செஞ்சொலா லளித்த திரவியம் பாது காத்தவர் சேர் வர்நற் பதவி. (சூ0)

ஏழிலொன் றுகு மீசனுக் கென்றே யிரந்துசெய் தவர்தமக் கம் மா, வாழிரு மூலகி லளித்தவர்க் காறு மடங்குபுண் ணியமது சே ரும், வீழிவா யுமைபங் காளர்கா ரியத்தின் மேன்மைய ரேவலா லெ ழுந்து, தாழ்விலாச் சிவகா ரியந்தனைச் செய்வோர் தரணியாண் டின் பமேற் பெறுவார். (சூக)

தோன்றிய புகழ்சேர் பொருள்படைத் தோர்க டொகைபெறு திரவியம் பகுத்து, மூன்றிலொன் றளிப்ப துத்தம மாறி லொன்றதை மொழிவர்மத் திமமா, வேன்றிடு மெட்டி லொன்றினை யதன்ம மெ ன்பர்பத் ததன்மமே லதன்மம், போன்றிடும் பாதி யதிகவுத் தமமாம் புண்ணியம் பெறுகுவர் மாதோ. (சூஉ)

வடித்தசெந் தமிழ்சூழ் வயித்திய நாத மகாதலந் தனினிறை தீர்த்தப், படித்துறை மைய மண்டபங் கொடுங்கை பதிந்திடு சுற்று மண் டபநீ, ளடிப்படை பலமா மதில்சிவா லயஞ்செய் தனர்புவி யாள்வரிந் திரன்மான், முடித்தல மிருகை குவித்திட விமான மேறி மேன் முத்திவீ டுறைவார். (சூங)

மன்னிய மகிமை வைத்திய நாத மகாதலந் தனிற்சிவ பெருமான், சந்நிதி யினிற்கோ புரங்கொடி மரஞ்சூழ் மேடைசார் நிருத்தமண் டபநல், லின்னிசை பயிலு மண்டபம் யாக சாலைகற் றூண்மடைப்பளிக்காம், பொன்னினை யளித்தல் செய்தவ ரகிலம் புரந்துபேரின்பவீ டுறைவார். (௬௪)

பாவலர் சங்கத் தமிழ்நிறை வயித்திய நாதநற் றலத்திருப் பணிசெய், யேவலாள் வண்டிற் பகடுவை மருப்பே றிவைசெலுத் திடுமவர் வார்தோ, லாவலிற் பதஞ்செய் ததுகொடுத் திடுநல் வேலைசெய் தார்புவி யாள்வார், பூவல யத்தின் புறுவர்பொன் னுலகம் புரந்துமேற் சிவகண மாவார். (௬௫)

அற்புத வயித்திய நாதநற் றலத்தி லையனுக் கமைதிருப் பணிசெய், சிற்பநூல் வல்லோர் சிவகண மாவார் திரண்மரத் தச்சர்காரிரும்பு, நற்பதஞ் செய்யுங் கம்மியர் விளங்கு நலமிகு முருத்திராவார், பற்பல பணிசெய் கொத்தர்நெற் றியிற்கண் படைத்திடு முருத்திர ராவார். (௬௬)

அளிந்துரு கிடுமெய் யன்பர்சூழ் வயித்திய நாதநற் றலத்திருப் பணிக்காங், கிளிஞ்சில்கள் சுக்கா னிவையெலா முன்னங் கிடைத்திடு தவத்திலிவ் வுருவாய்ச், தெளிந்தநூல் வல்லோ ரமைந்தவென் றுரைப்பர் திகழ்கரும் பினியதீஞ் சாறு, பொளிந்தகல் செங்கல் பணிக்கமை தலினற் புண்ணிய வுருவெனப் புகல்வார். (௬௭)

பவவினை தீர்க்கும் வயித்தியநாதன் பரிந்துறை தலந்தனி லிருந்து, சிவகயிங் கரியஞ் செயுமத யானை சிறந்திடு சுழிகொள்வாம் புரவி, குவவுகூ னமையொட் டகஞ்சிவ கணமாங் கொடிறினுக் கமை

கரும் பொன்கல், லிவருளி கருங்கல் லடித்திடுங் கொட்டி லீபவ ருஞ்சிவ கணமாம். (சஅ)

வரந்தரும் வயித்திய நாதநற் றலத்தில் வளங்கெழு திருப்பணி யதனை, யிரந்துமே பிச்சை யேற்றுமே செய்வோ ரேழ்கடல் சூழுல கினிதாய்ப், புரந்திடும் வேந்த ராகவே பிறப்பர் பூவுல கினிலிருந் திடினு, முரம்பெறு தேவ ராகுவ ரதன்மே லுருத்திர கணங்களா குவரே. (சகூ)

பரவிமெய் யடியார் வழிபடும் வயித்திய நாதநற் றலந்தனைப் பணிந்து, திரவியஞ் சிவகா ரியத்தினுக் கென்று செலுத்தினர் சூரிய கிரணம், விரவிடு * மருத்தொ தயமகோ தயமாம் வியன்றினங் கோடிகோ தானஞ், தரவினி தாம்புண் ணியந்தனக் கதிகங் கோடியாங் கயிலைமேற் சார்வார். (எ0)

பொருப்பணி வில்லாய் வளைத்திடும் வயித்திய நாதநற் றலந்த னிற் போந்து, திருப்பணி செய்வோர் தமையெலா மனித ரென்பவர் சேர்குவர் நரக, மருப்பணி பெறும்வெள் ளானைமே லேறி வருபுரந் தரன்முதல் வானோ, ருருப்பணித் திடஞ்சூழ் விமான்மே லேறி யுறைகுவர் மேற்சிவ லோகம். (எக)

---

* அருத்தோதய மகோதயகாலம்:— "மங்கலில்லவை காசிமா தத்தி லாதி வாரத்தி லமாவாசை யாதி யுஞ்சீர்ப், பொங்குதிரு வோணத்தி னடுவு னன்மை பொருந்துவிதி பாதவந்த மும்பொ லிந்தே, தங்குமரு ணோதயகா லம்ம ருத்தோ தயமாகு மிம்மதியிற் சோமவாரந், துங்கமதா யுறமுன்போல் வருமே லஃதைச் சொல்வர்மகோ தய மெனநூற் றுணிபு ளோரே." என்னும் இச் செய்யுளா லறிக.

இன்னமொன் றுரைப்பன் வயித்திய நாத னெண்ணில்புண் ணிய த்தலம் விழைந்து, முன்னரே மூதனுல் வருணமவர் துதித்தோர் முன்செய்புண் ணியத்தினுற் படைத்த, பன்னரும் பசும்பொன் சிவ பிரா னிமித்தந் தந்ததைப் பணிசெயா தழித்தோ, ருன்னரு மனே க கற்பகா லந்தி யுறுபெரு நரகில்வீழ்ந் திடுவார். (எஉ)

சித்திரல் கிடுமிவ் வயித்திய நாத சிவதல மகிமையை விழை ந்து, பத்தியாய்த் தனதா னியந்தனை யுதவி பண்ணினர் பூமிதா னத்தி, னித்திய மான புண்ணியம் பெறுவர் நிறைந்திடு தானியந் தனத்தைப், புத்திபூ ருவமா யழித்தவர் நரகம் புகுதுவ ரெண்ணி ல்பல் காலம். (எஙு)

தெய்வவே தியர்சூழ் வயித்திய நாத சிவதலந் தனிற்சிறிதேனு, மெய்துகா ரியத்தைத் தவிர்ந்திட விகாத மெண்ணினர் செய்தவர் கொடிதா, முய்விலா நரக மழுந்துவர் தலத்திற் குறுமுப காரமெ ள்ளளவு, துய்யபூ மியினிற் பண்ணினர் பிறவித் துன்பநீத் தின்ப மே பெறுவார். (எசு)

தமிழ்மணங் கமழும் வயித்திய நாதன் றலந்தனிற் றடங்கடம் சிப்பி, யுமிழ்குளிர் முத்து மாலைநன் மணிவைத் தொளிசெயா பர ணநல் லாடை, யமிழ்தென வினிமை செய்யபி டேக திரவிய வரு க்கமா சையினீர்க், குமிழ்பெறு காலம் பெருவுடற் பொருட்டாற் றிருடினர் கொழுநர குறுவார். (எரு)

செந்திரு நிருத்தஞ் செய்திடும் வயித்திய நாதநற் சிவதல மகி மை, புந்திகூர் மகிழ்ச்சி பெறவறிந் துதவி புரிந்திடு திரவிய வரு க்கம், வந்திருந் ததனைச் சிவபணி செய்யார் வாரிவீண் செலவுசெய் தவர்க, ளுந்திநீர்க் கடல்சூ ழுலகினிற் பசாசாய்ப் பிறந்துபல் லூழி நா ளலைவார். (எசு)

மகிமைசேர் வயித்திய நாதநற் றலவா சஞ்செய வருபிறப் பரிதா, மெகினமே முதலாம் பறவைநாய் நரிக ளீசிறு விட்டிலூ ரெறும்பு, சிகிநுக ரிந்திர கோபநூற் சிலம்பி சியமே முதற்பல மிருக, மகிவிருச் சிக * மூந் துருதரு வனைத்து மருமையாஞ் சிவ கண மாகும். (எஎ)

நறைகமழ் நளின வாவிசூழ் வயித்திய நாதநற் றலத்தினி லம்மா, வுறையுமப் பெரியோர் மற்றும்வே றுள்ள வுயிர்க்கிடை யூறு செய் பவர்கள், குறைவிலா நரகின் மூழ்குவர் பசாசின் கொடியவல் லுருவெடுத் தலைவார், பிறையெயி றதுக்கி யியமதூ துவர்கள் பிடித்திடும் வேதனைப் படுவார். (எஅ)

ஆரணப் பொருளாம் வயித்திய நாத வண்ணறன் றலத்திருப் பணிதான், சீரண மான துறுதிபெற் றிடவே செய்தவர் பிறந்துல களித்து, வாரண வுரிபோர்த் திருக்குமவ் வள்ளல் வாழ்சிவ லோக மேற் பெறுவார், காரணன் சிவகா ரியத்தினி னிமித்த மிறந்தவர் கயிலைவீற் றிருப்பார். (எகூ)

நீதிநூல் வல்லோ ருறைந்திடும் வயித்திய நாதநற் றலந்தனி னிறைந்த, வேதியர்க் குபகா ரஞ்செயு மவர்கள் வியன்முடி தரித் துல காள்வார், கோதின்மூ வேழு குலத்துடன் மகிழ்ச்சி கூர்ந் தொளி விமானமே லேறிச், சோதிவெண் கயிலை மால்வரை சூழ்ந்து தூயபே ரின்பமுற் றிருப்பார். (அ0)

நித்திய ஞான வயித்திய நாத நிமலன்வாழ் தலத்தில்வே தியர்க்குப், பத்தியாய்ப் பூசை செய்திடின் முக்கட் பரன்றனைப் பூசை செய் பலமாம், புத்திரன் றன்னைப் பெறுவர்பூ வுலகம் புரந்திடும்

---

* உந்துரு-பெருச்சாளி.

வேந்தராய்ப் பிறந்து, சத்திய வானென் றுரைத்திடச் செங்கோல் செலுத்தியே சிவபதஞ் சார்வார். (அக)

ஆடக மதில்சூழ் வயித்திய நாத னற்புதத் தலத்திலந் தணரைத், தாடணஞ் செய்வோர் சிவார்ச்சனை செயினுந் தூயபூ சாபலனில்லைத், தேடரு மறையோர் தமைப்பணி வோர்கள் சிவபதம் பணிபலன் பெறுவார், வேடர்போற் கோபித் திடினிருப் பூசி விழியிலேற் றிடத்துய ருறுவார். (அ௨)

செய்தவஞ் சூல மணிந்திடும் வயித்திய நாதநற் றலந்தனி னிறைந்த, துய்யவே தியரை யிகழ்ந்தவர் பொருள்சேர் குறைந்திடுந் துன்பமுற் றிடுவார், வைதவர் நாவை யமன்விடு தூதர் வளைத்தரிந் தெறிவரெள் ளளவா, வெய்யதீ நரகி லழுத்திடப் படுவார் மேவுதல் லூழிநாண்மாதோ. (அ௩)

வேலைசூ முலகின் மேன்மையாம் வயித்திய நாதநற் றலந்தனில் விளங்கு, மாலய மருங்கி னந்தன வனத்தி லசுசியாய் மலசலம் விடுவோர், சூலைநோ யுறுவர் குதந்தனிற் கோசத் துளைதனிற் சலாகையேற் றிடவே, காலைகண் டெண்ணற் கரியபல் லூழி காலநீ ணரகில்வீழ்ந் திடுவார். (அ௪)

பச்சிலை யிடினும் பலன்றரும் வயித்திய நாதனு லயம்பயி றீர்த்தத், தெச்சிலை யுமிழ்வோர் மூக்கினைச் சிந்தி யெறிபவர் கோழைகான் றிடுவோர், துச்சிலை மகிழு மன்னவர் நாசித் துளையினும் வாயினும் வலிந்து, கைச்சிலை யம்பு கோத்தரக் கெண்ணெய் காய்ச்சியே யூற்றிடப் படுவார். (அரு)

தெய்வநா யகனும் வயித்திய நாத சிவனுறை தலத்துள தீர்த்த, மொய்புன லதனின் மலசலம் விடுவோர் முடிவிலா நரகினில் வீழ்வா,

ரையனு லயத்திற் புகும்பொழு திருகா லலைபுன லாற்கழீஇச் செல்வோ, ருய்வரிந் திரபோ கந்தனைப் புசிப்ப ருறைகுவர் மேற்சிவ லோகம். (அசு)

காசியி லிலக்கம் வேதியர்க் கன்னங் கனிந்தளித் திடும்பல னெண்ணிப், பேசரும் புகழ்சேர் திருச்சயி லத்தி லொருவருக் குதவினர் பெறுவா, ராசைதீர்ந் திடவீ ரிலக்கமத் தலத்தி லரியகே தாரமாந் தலத்திற், பூசுரர்க் களித்த பலன்பெறு வார்புள் ளூரிலோர் கவளநல் கினரும். (அஎ)

உறுபல னுமிவ் வயித்திய நாத வுத்தம மகிமைசேர் தலத்தில், வறுமைதீர் தரவங் காரக வார மகேசுர பூசைபண் ணினர்தாம், பெறுவர்பூ மியினி லிட்டகா மியமும் பிரமன்மா னுலகமும் பெறுவார், சிறுபிறை யணிந்த செல்வன்வாழ் வெள்ளி மால்வரை சேர்வர்மே லம்மா. (அஅ)

பிறந்துல கதனில் வாழ்பவர் வயித்திய நாதநற் றலந்தனிற் பெருமை, சிறந்திடுஞ் செவ்வாய்க் கிழமையி னிறைந்த சிவனடி யார்க்குநல் லன்ன, மறந்திடா தளிப்போ ரன்னமொன் றினுக்கு மன்னுமா யிரயுக மளவு, நிறந்தரும் விமான மேறியே சிவலோ கந்தனி னிலைபெற விருப்பார். (அகூ)

சுசித்தல மாமிவ் வயித்திய நாத தூயபுண் ணியத்தலந் தன்னிற், பசித்தவர்க் கில்லை யென்றுரை யாது பரிந்தொரு கவளமே யெனினும், புசித்திடக் கொடுப்போ ரிந்திர போகம் புசிப்பர்பொன் னுலகில்வீற் றிருப்பர், நசித்திடும் வினைநோய் பிறப்பொழிந் திடுமே னவில்சிவ லோகமும் பெறுவார். (கூ0)

புள்ளிமான் றரித்த வயித்திய நாதன் புண்ணியத் தலந்தனில் வறியோர்க், கள்ளியே பிடிசோ றளிப்பவர் பெறும்பே றளவிட வரி தரி தாகும், வள்ளிதா கியதண் டுலமொரு பிடியத் தலந்தனின் மறை யவர்க் களித்தோர், வெள்ளிமால் வரையி லாயிரங் கற்ப காலநா ளினிதுவீற் றிருப்பார். (கூக)

எத்தலந் தனினு மன்னதா னஞ்செய் திடுபவர் பேறுபெற் றிடு வா, ரத்தலந் தனிலோர் கோடியந் தணருக் கன்னதா னங்கொடுத் திடும்பே, றுத்தம மான வயித்திய நாத னுறைதலந் தனிலொரு கவ ளங், கைத்தல நிறைய வளித்தவர் பெறுவர் கயிலைமால் வரையுமேற் பெறுவார். (கூஉ)

கன்றுமழை யேந்தும் வயித்திய நாதன் கனிந்துறை தலந்தனிற் றரும, மொன்றுசெய் திடினுங் கோடியா யுறலாற் புண்ணிய கோடி யென் றுரைப்பார், பொன்றுமிப் பிறவி யெனநினைந் தினிய தலந் தனிற் புண்ணிய தரும, நன்றிவாய்ந் திடச்செய் தவர்கள்வாழ்க் கதன்மே னண்ணிடு வார்சிவ லோகம். (கூரு)

நறைகமழ் குமுத வாவிசூழ் வயித்திய நாதநற் றலத்தில்வீற் றிருக்கு, மறையவர் வேதம் வராதவ ரெனினும் வளர்மகா தான யோக் கியரா, மறையுநால் வேதம் வந்தவ ரெனவன் னியர்தமக் களித்தவப் பலன்வீண், விறையமா மதனு லத்தல வாச வேதியர் மகிமைகூ றரிதே. (கூச)

இதமிகு வயித்திய நாதநற் றலத்தி லிருந்திடு சராசர மைந் து, வதனமு நெற்றிக் கண்ணுமான் மழுவும் வளங்கெழு நீலகண் டமுஞ்சேர், பதவிபெற் றிருக்கும் வடிவுள ததனாற் படிமிசை யத் தல வாச, நிதமுள பெயரை மனிதரென் றெண்ணி நினைப்பரோ வறிவுதா நிறைந்தோர். (கூரு)

வேறு.

எழுதரிய பசும்பொனுல குறையுந் தேவ ரிடுச்கண்டீர்ந் திட விமையோர் வேந்தன் வாழக், கொழுதியளி முரல்கடப்பந் தார்சேர் முத்துக் குமாரநா யகன்சூரன் மார்பு கீற, மொழுகொளி வேல் வாங்குநெடும் புகழ்சே ரூர்பூ வுறைகூந்த லம்மைபருச் சனை செய் யூர்சூழ்ந், தழைமியினெனக் காலனுரை யாத மூதூ ரதனுமம் புள்ளிருக்கு வேளூ ராமால். (கூசு)

வட்டமதி போலுமுக மாத ரஞ்ச வந்துபிடித் துணைவிட்டுப் போகே னென்னு, நெட்டுடற்பைங் கட்பகுவா யலகை யம்மை நேர்முகம்பார்த் திருந்துதலை சுற்றி யாடி, விட்டுவந்த வழிபார்த் தே யோடு மேன்மை விளங்குமூர் மேவுபெரும் போக நல்கி, யட்டசித்தி முத்தியுந்தந் தருளு மூதூ ரதனுமம் புள்ளிருக்கு வேளூ ராமால். (கூஎ)

எண்ணிடுநா லாயிரநா னூற்று நாற்பத் தெட்டுவியா தியினுறு நோய் தீர்க்க வெண்ணித், தண்ணிலவு சொரிகயிலை மலையி னின்று தயிலபாத் திரமுஞ்சஞ் சீவி வில்வ, மண்மருந்து மெடுத்தம்மைத் தையல் கூடி வரத்தழைந்த வெள்ளெருக்கின் வனத்தின் மன்னி, யண்ணல்வயித் தியனுகி யருள்செய் மூதூ ரதனுமம் புள்ளிருக்கு வேளூ ராமால். (கூஅ)

வளமிகுநல் லறுசுவைய வடிசி லன்னம் வகையறிந்து சமைத்தபருப் பொழுகு நெய்தோய்க், திளகியிடா திருந்தகட்டித் தயிர்புசித்தற் கிதமான கனிவடையிட் டப்ப மற்று, முளமகிழச் சிவனடியார் தமக்கு வாய்ந்த வூரிலுள்ள மடங்கடொறு மொழியா தென்று,

மாவின்மகே சுரபூசை செய்யு மூதூ ரதனுமம் புள்ளிருக்கு வேளூ ராமால். (கக)

உரியதரு கரணபுவ னம்பு சிப்பென் றுற்பவிக்கு நாட்சிரசி னெழுத்திற் கிடாக், கரியநெடுங் கடல்புடைசூ ழுலகின் மீதிற் கற்பகா லங்களினுந் தீரா தான, பெரியவினை தீர்த்திடுமந் நகரில் வந்து பிறந்தாலு மிறந்தாலும் பிரமன் மாலுக், கரியசிவ போகமுத்தி யளிக்கு மூதூ ரதனுமம் புள்ளிருக்கு வேளூ ராமால். (௬00)

வேறு.

வளமிகு சடாயு புரிவளர் கந்த புரிவரம் வேண்டினர் தங்க
ளுளமகிழ் தரவே யளித்திடும் வேத புரியுயர் மகிமைகூ றரிதாய்க்
கிளர்தரு பரிதி புரியிவை யன்றிக் கெழுமியே யருச்சனை புரிந்தோ
ரளவில ரன்னோர் பெயரினாற் பெறும்பே றளவிட வரிதரி தாமால்.

இந்திர திசையில் வயிரவன் வீர பத்திர னிலகுமேற் றிசையில், வந்தகா ரிருள்போல் வடிவுள காளி வடதிசை துர்க்கைதென் றிசையிற், சுந்தர நிறைந்த வையனை யென்றுஞ் சூழ்ந்துகாத் திருப்பர்சொல் லரிய, கந்தநாண் மலர்ப்பூங் காமிகும் வேளூர்க் கிணைகரை கண்டுகூ றரிதே, (௬0௨)

என்றுவண் புகழ்சேர் சூதமா முனிவ னிலகிய தலப்பெரு மகிமை, நன்றினி துரைப்ப வுணர்ந்திடு முனிவர் நவிலரு மகிழ்ச்சிபூத் துருகி, வென்றிசேர் தீர்த்த மகிமையை யுணர விரித்தருள் புரியெனப் பகர்ந்தார், துன்றிய வுரோம புளகித மல்கத் தூயவன் சொல்லன்மே யினனால். (௬0௩)

வேறு.

சொலற்கரு மகிமை பெற்ற சூதமா முனிவன் சொன்ன
தலப்பெரு மகிமை தன்னை யுரைத்தனன் றரணி மீதில்

விலக்கரும் வினைக டீர்த்து வேண்டிய வரத்தை நல்கிப்
பலத்தினை யளிக்குந் தீர்த்தச் சருக்கமேற் பகர்வன் மாதோ. (௧௦௪)

தலச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨௫௨.

---

## சித்தாமுததீர்த்தச்சருக்கம்.

செய்தபுண் ணியத்தி னுருவமே யாகித் தெளிந்தசித் தாமுத மகிமை, யெய்தரும் புகழ்சேர் நைமிசா ரணியத் தினிலுறை யருந் தவர்க் கினிதாய்ப், பெய்ததெள் ளமுதப் பெருக்கெனச் சூத முனி வரன் பெட்புமீ தூரக், கைதரு நெல்லிக் கனியென விளங்கக் கா ட்டுதல் செய்தன்மே யினனால். (௧)

விண்ணவர் துதிசெய் திறைஞ்சிடுஞ் சித்தா முதத்தினை விரு ம்பிடா தவருங், கண்ணினா னாடி லவர்நெடும் பாவங் கலங்கியே நீங் கிடு மெனின்மே, லுண்மையாய் நாடிப் படிந் திடு மவர்க ளுளிந்திடு பாவமன் னவரை, நண்ணிடா தோடு மென்னவே கூறி னயப்புறு புகழதோ வன்றே. (௨)

இன்னமு தாகி விளங்கிய சித்தா முதத்தினை யிலகிய காதன், மன்னிமீ தூர வலஞ்செய்து வந்து மகிழ்ந்துநீ ராடல்செய் திடு வோர், நன்னிய மஞ்சேர் முறைமையா சமன நலம்பெற விரண்டு செய் தன்பி, னன்னநல் லிருடி யொடமேனு வோதி யமர்ந்துநீ ராடு தல் விதியாம். (௩)

குலவிய கிருத யுகந்தனின் மகிமை கொண்டகோட் சீரதீர்த் தப்பேர், மலர்தலை யுலகில் விளங்கிடுந் திரேதா யுகம்வள ரிட்சுசா

ரமதா, மலகில்பல் புகழ்சேர் துவாபர யுகத்தி லதன்பெயர் சடாயு தீர்த் தமதா, மிலகிடுங் கலியில் யாவருஞ் சித்தா முதமென வெடு த்துரை செய்வார். (சு)

தேன்றுளித் திலகுந் தருநிழ லுறையுந் தேனுமா நிலந்தனிற் போந்து, மூன்றுகண் படைத்த வயித்திய நாதன் முளரிநாண் மலர்ப்பதம் பணிந்து, தோன்றுதன் முலையிற் சுரந்திடும் பாலாற் றூய மஞ் சனவபி டேகம், போன்றுதான் பொழியும் பொழுததுபெருகிப் பொற்புறு தீர்த்தமே வியதால். (ரு)

தெண்டிரைக் கடல்சூழ் தரணியி னிறைகோட் சீரதீர்த் தப்பெயர் திகழுந், தொண்டுசெய் பத்தி யுளனொரு வனுக்குத் தூயசெங் கரும்பினின் சுவையாய்க், கண்டுள மகிழ விருத்தலா லப்பேர் கவின்பெற விளங்கிடும் பல்கான், மண்டுதீம் புனலின் முழுகியே சடாயு வசித்தலா லப்பெயர் வழங்கும். (சா)

வந்துதாம் பணியுஞ் சித்தர்வா னுலகின் மன்னிய வமுதினை யெடுத்தே, யந்திவான் மதியுங் கொன்றையு முடித்த வண்ணனீண் முடிமிசைச் சொரிந்தார், சுந்தர வமுதம் பெருகிமே லெழுந்து தூய தீர்த் தம்புகுந் ததனு, லிந்தமா நிலத்தி லனைவருஞ் சித்தா முதமென விசைத்தன ரம்மா. (எ)

பொன்னிமா நதிசூழ் தீரமீ துறையும் பூசுரன் சுந்தர னென்போன், மன்னும்வெண் குட்ட வியாதியால் வருந்தி மகிமைசேர் தலந்தொறுந் திரா, தென்னசெய் வேனென் றிரங்கிமேற் சித்தா முதந்தனைக் கண்டெழிற் றீர்த்தந், தன்னின்மூழ் கினனற் றிவ்விய தேக மானது கண்டுதான் மகிழ்ந்தான். (அ)

சங்கரன் வெயர்வை தனிற்பிறந் திடுமெங் காரகன் றனதுசெங் குட்டம், பங்குனிச் செவ்வாய்க் கிழமையிற் சித்தா முதப்புனல் படி

ந்துதிர்ந் தனன்பின், செங்கழு நீர்நல் லோடையொன் றமைத்துத் திகழுமம் மலரினை யெடுத்தே, யங்கணற் கென்று மருச்சனை செய்தே யளப்பரு நல்வரம் பெற்றான். (௯)

குருமனை யாளைத் தொடுங்கொடும் பாவங் கொலைகள் வாதியா ய்த் தொடர்ந்து, பெருகிடும் பாவ மனத்தையுந் தீர்க்கும் பிடித்தவே தாளரோய் போக்குந், தருசிவத் துரோகி சற்குருத் துரோகி தன் பிதிர்த் துரோகியே யன்றி, வருவிசு வாச பாதகன் சித்தா முதப் புன ரோயின்மாற் றிடுமே. (௧௦)

கன்றினை யிழந்த பசுவினைத் தளைந்து கறந்துணும் பாவம் வீண் செலவாய், நின்றிடு தருவைக் களைந்திடும் பாவ நெருக்கியே குளக்கரை யழிக்க, வொன்றிடும் பாவந் தயிலம்விற் றிடவந் துறும் பெரும் பாவமேற் செய்த, நன்றியைக் கொன்ற பாவமுஞ் சித்தா முதப்புனல் படியமைந் திடுமே. (௧௧)

மூளைத்திடும் பாவக் காட்டினுக் கதனின் மூண்டெழு காட்டுறு திப்போல், வளைத்துநீ றுகச் செய்திடும் வறுமை தீர்த்திடும் வருங் கய ரோகந், திளைத்திடும் பிரம கத்தியுந் தீர்க்குங் கீழ்மையா கியசுரா பானம், விளைத்திடுந் தோட மனைத்தையும் போக்கும் விளங்குசித் தாமுத தீர்த்தம். (௧௨)

பேசிடும்பலபீ சத்தினுக் குரித்தாய்ப் பிறந்தவன் கேடுதா னினை ப்போன், கூசிடப் பஃறோ டந்தனைக் கூறுங் கொடியவன் பந்தியே தகஞ்செய், தூசினைப் பெறுவோன் மித்திரத் துரோகி தொக்கபொய் ச் சாட்சிசொல் வோனு, மேசுற வருதோ டந்தனைச் சித்தா முதப்பு னலெளிதொழித் திடுமே. (௧௩)

விதிமனை வியரை வேறுசெய் பாவம் வேதநூ லோதுவித் தடங்கா, வதிகவா சையினுற் பொருளினை வாங்கு மப்பவம் வேள்வி செய் மறையோன், றுதிபெறு மனையா டனைத்தொடும் பாவந் தூய பொன் திருடிய பாவங், கதிதரு சித்தா முதப்புனன் மூழ்கி யேறு மக் கணத்தின்மாய்ந் திடுமே. (கச)

காரிரும் பதனைக் கவர்ந்திடும் பாவங் கண்டசை யோகபா தகமிப், பாரினிற் கொடிய பாவிதன் னுடனே பரிந்துனும் பாவநீந் திப்போ, னூரினைக் கெடுப்போன் மலர்ப்பொழி லழிப்போ னுடன்கலந் துறவுசெய் பாவஞ், சீர்மிகுஞ் சித்தா முதப்புன லாடிற் றீர்ந்திடு மக் கணந் தன்னில். (கரு)

திருடிய மனையிற் றீயிடும் பவமுந் தீர்ந்திடச் செய்துநன் னெறிசேர், தெருளினை யறவே யளித்திடுஞ் சித்தா முதப்பெருந் தீர்த் தமான் மியத்தின், பொருடெரிந் தனயான் புகன்றன னிதனுட் பொருந்திய சரித்திர மான, விருடியர் முறைமை கூறிய சருக்க மினியெடுத் துரைசெய்வே னம்மா. (கசு)

சித்தாமுததீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-உகூஅ.

---

## இருடியர்முறைமைகூறியசருக்கம்.

அளந்தறி வரிய புராணமு மாறு மருங்கலை யாவையு முணர்ந்து, விளங்கிய சூத முனிவரன் கமல விரைமலர் வாண்முக நோக்கி, வளம்பெறு சித்தா முதப்பெருந் தீர்த்த மற்றுள தீர்த்தநீ ராடக், கிளந்திடு காலங் காவலர் முதலோர் கிளர்விருக் கமும்பக ரென்றே. (க)

வேறு.

ஒவ்வார்புர நகைசெய்திடு மொருவன்விதி தவரு
வவ்வாய்மைநன் முனிவோர்பக ரெனுமன்புறு மொழிகண்
டிவ்வாறென வுணரக்கரை கண்டெண்ணி யெடுத்தே
வெவ்வேறத னியல்யாவும் விரித்தோத நயந்தான். (உ)

இத்தாரணி தனிலேழ்நதி யினிலுத்தம மாகிச்
சுத்தோதக மீருமெழு கடலிற்சுசி தரலா
லெத்தாபத ருஞ்சூழ்ந்திட வென்னும்முதன் மையதாஞ்
சித்தாமுத மெனவேதிசை தோறும்புகழ் பெறுமே. (ங)

வேறு.

திகழ்தரு மங்கா ரகன்றனக் கடுத்த தென்றிசை யதுதனின் மிகுநற், புகழ்வளர் வாலாம் பிகையருள் கொழிக்கும் பொற்புறு சந்நிதி முன்னர், நிகழ்குளி ரமுத மெனநலந் தழைந்து நிறைந்தசித் தாமுதம் விளங்கு, மகழ்கருங் கடல்சூ ழுலகினுக் கினிய வதிகபாக் கியந்தர மாதோ. (ச)

வலஞ்சூ ழயன்புள் ளரசுதிரு மான்மெய்ப் புகழ்சேர் சதாநந்த, னலஞ்சேர் கிருத முதனுன்கிற் கிருடி நவிலும் விருக்கமெழி, லிலங்கி யிடும்வெள் ளெருக்குமுன மியம்பு மவரை விருக்கமதை, வலஞ்செ ய் துவந்து நீராடின் மகிழ்ச்சி தருநல் லுத்தமமாம். (ரு)

சுருதி தேடி யோலமிடுந் தூயன் றனக்குப் பாங்கணித்தா,நிருதி திசையி லனையபெருந் தீர்த்த நிறைந்தே யிலகியிடுங், கருதி யுலகம் புகழ்வயித்திய நாதன் றெய்வங் காசினியிற், பொருதி வருநீங் கொ ழித்திரட்சை புரிவோன் பூமி சுதனம்மா. (சு)

சித்தா முதநற் றீர்த்தமுதற் சேரு மிருப தடனூன்காய், வித்தா ரமுமேன் மையும்படைத்து விளங்குந் தீர்த்தங் கோடிகுல, * முத் தா ரணம்பண் ணிடுந்தெரிசித் தோர்க்கும் பரிசித் தோர்தமக்கு, மெ த்தா கமுந்தீர்ந் திடச்சித்தர்க் கமுத மழைபெய் தெய்தியதால். (எ)

படிமேற் சித்தா முததீர்த்தம் பணிந்து முழுகு மவர்பாவ, மடி வே ரற்ற மரம்போல்வீழ்ந் திடுமோர் துளிநீ ரருந்தினர்தா, மிடிவே தனைதீர்ந் தளகைநகர் வேந்தன் மிகுபாக் கியம்பெறுவார், வடிவார் கூந்தன் மனைவியுநன் மகப்பேற் றினையும் பெறுவாரே. (அ)

திகழுஞ் சித்தா முததீர்த்தந் தனையோர் வலஞ்செய் திடுமவர் தாம்,புகழு மேருப் புடைசூழும் புவிமு வலஞ்செய் பலன்பெறுவார், நிகழ்பூம் புனலிற் படிந்தெழுந்து நிதிபொன் னளித்து நின்றுள்ள, மகிழு மவரெண் ணரிதான மகஞ்செய் பேறு மிகப்பெறுவார். (கூ)

நித்தஞ் சித்தா முததீர்த்த நியமம் புரிந்தே யாடினர்தாம்
பத்து நூறு யிரம்பிரம கத்தி முதற்பா தகந்தீர்வர்
சித்த மகிழ்கூர் செல்வமிகப் பெறுவர் சிவலோ கமும்பெறுவார்
முத்தி வீடும் பெறுவர்தமை யெண்ணி மொழிவ தரிதாமால். (க0)

வேறு.

மாற்றரிய பிறவிவே ரகழ்ந்து மேன்மை மன்னிவளர் பேரின்ப வீடு நல்கத், தோற்றியிடு மிருடியர்தம் முறைமை கூறுந் தூயசருக் கந்தனையீண் டுரைத்தேன் றெருள்சீ, ரேற்றமுள நிதிதீர்த்த மனைத் துஞ் சூழ விருந்தெண்ணி யெழுந்துகந்த புரியில் வந்து, சாற்றரிய

* உத்தாரணம் - உயர்வித்தல்.

கங்கைமிகு பாவந் தீர்ந்த சருக்கமினிப் பகர்ந்திடுவன் றமியன் மாதோ. (சக)

இருடியர்முறைமைகூறியசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உஎகூ.

## கங்கைபாவந்தீர்ந்தசருக்கம்.

கொங்கவிழ் காவின் மலர்நிறை குமுத வதியிரை வதியெழிற் குமரி
கங்கைமன் னுவதி கவுதமை கபிலை காவிரி காத்தியா யனிவெண்
சங்குசூ ழளைந்து திரிந்திடும் யமுனை சரஸ்வதி தாம்பிர பர்ணி
துங்கபத் திரிகோ தாவரி யேம வதியொடு தூயபொன் முகலி. (க)

சந்திர பாகை மலகரி ப்ரமதி தருபிர யாகையே முதலா
மிந்தமா நதிகள் பராசர தீர்த்த மிந்திர தீர்த்தமீ தன்றி
நந்திதன் றீர்த்தஞ் சண்டிகா தீர்த்த நலமிகு சூரிய தீர்த்தங்
கந்ததீர்த் தங்கண் ணுதற்சிவ தீர்த்தங் கவின்பெறு சக்கர தீர்த்தம்.()

வேறு.

எழில்பெருகு பாதாள கங்கா தீர்த்த மிலகுமுனி தீர்த்தமிவை யன்றி யின்ன, மொழிதருபுண் ணியதீர்த்தஞ் சேர்ந்தோர் கால முளரிமல ரயன்சரணம் வணங்கி நின்று, பழிபடுபா வங்களெங்க ளிடத்தின் மூழ்கிப் பற்பலபேர் நீங்கினரப் பாவம்வந்து, குழியினமற் றவைதீர்க்கு முபாயங் காணேங் குளம்பாசி மூடியிடுங் கொள்கை போன்று. (ங)

நின்றனமென் றவைவகுத்துக் கூற வேதா நிருமலனை யொரு முகுர்த்த நினைந்து பின்னர், நன்றுரைசெய் தனவென்றே யாசி கூறி நலம்பெருகு முபயகா விரியி னுப்பண், வென்றிதரு மொருதல முண் டதன்பேர் கூறின் வேதபுரி யாமதனிற் றைய லம்மை, யென்

ருமினி தமர்ந்திடுஞ்சந் நிதிமுன் னுக வெழின்மிகுஞ்சித் தாமுதஞ் சூழ்ந் திருக்கு மாதோ. (ச)

பொங்கியிடு மகிமைகூ றரிதாய் மேலாம் புகழ்பெறுசித் தாமுத நற் றீர்த்தந் தன்னிற், பங்குனிமா தப்பருவ தினத்தி னீவிர் பரிந்துநீ ராடியெழும் பொழுதிற் பாங்க, ரெங்குமிறை திமிரமிர வியைக்கண் டோடி யிடுமதுபோ னீங்கியிடு மிதன்மேல் வந்தே, யுங்களிடத் தினின்றூழ்கி னோர்தம் பாவ மொழித்திடுசத் தியுமுங்கட் குண்டா மென்றுன். (ரு)

வேறு.

அண்ணலங் கமலப் பொகுட்டுறை விரிஞ்ச னவ்வுரை பகர்தலு நதியுந், தண்ணறும் புனல்சூழ் தீர்த்தமு மெழுந்து தற்பர வயித்திய நாத, புண்ணிய னமருந் தலந்தனில் வந்து பொருந்துசித் தாமுத தீர்த்த,முண்ணிறை காதல் பெருகிட மூழ்கி யொழித்தன பாவம்யா வையுமே. (சு)

சிதவான் புனல்சூழ் நதிகளுந் தீர்த்தம் யாவையுஞ் சேர்ந்துமேல் வயித்திய, நாதனை வணங்கி யநுமதி பெற்று நற்றல நயம்பெறச் சார்ந்த, வாதலாற் சகல தீர்த்தநற் பலன்சித் தாமுத மாடினர் பெறுவர், மேதகு மீன மாதவுத் தரநாள் விளங்கிமே லதிகமா மாதோ. (எ)

தவப்பெரும் பலப்பே றெனத்தழைந் தருமை சார்ந்தசித் தாமுத தீர்த்த, நவக்கிர கங்கள் படிந்தெழுந் தனேக நல்வரம் பெற்றன நீங்காப், பவச்சுழ லழுந்தித் தியங்குமா னுடர்க்குப் பலித்திடு திசாபலன் மிகுந்தே, யுவப்பினைப் பெறவங் காரக னனேக வுயர்வரம் பெற்றனன் மாதோ. (அ)

வேறு.

மடலவிழ் கமலப் புத்தே ளுரைப்பதை மனத்துட் கொண்டு
கடல்புடை சூழும் பார்மேற் கங்கைவந் திதனின் மூழ்கித்
திடமுறப் பாவந் தீர்ந்த சருக்கமீண் டுரைத்தே னிப்பாற்
படர்புகழ் மாத மேன்மைப் பலன்பெறு சருக்கஞ் சொல்வேன். (சு)

கங்கைபாவந்தீர்ந்தசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உஅஅ.

---

## மாதபலன்கூறியசருக்கம்.

மன்னும் வாய்மைசூழ் முனிவரர் சூதமா முனிவன்
பன்னு கேள்விசேர் செவிக்கமு தாமெனப் பகுத்தே
யின்ன தன்றியித் தீர்த்தமான் மியமுழு வதுமிந்
நன்னெ றிக்கதி யாம்பெற நவின்றரு ளென்றார். (க)

வேறு.

பொருந்துநன் முனிவர் கூறப் புராணமா முனிவன் மேன்மை
திருந்திய கன்னி மாதஞ் சேரமா வாசை தன்னி
லரும்புகழ் நிறைந்த சித்தா முதப்புன லாடி னோர்கள்
பெரும்பிணி தீர்வ ரன்னோர் பிதிர்மகிழ் கூர்வ ரன்றே. (உ)

துய்யநற் றுலாத்தில் வாய்ந்த சுக்கில பக்கந் தன்னி
லெய்திய நவமி சித்தா முதநிறை யெழினீ ராடின்
வையக முழுதுஞ் செங்கோன் மனுநெறி செலுத்தி வாழ்ந்து
பையர வணிந்த நாதன் பதநிழ லினிது வாழ்வார். (ங)

விருச்சிக மாதந் தன்னின் மேவிய சோம வாரந்
திருத்தமா கியநற் சித்தா முதற்செழும் புனலின் மூழ்கிற்
கருத்தினி னினையு மிட்ட காமியம் பெறுவர் வெள்ளிப்
பொருப்புறை குவர்பே ரின்பம் பொற்புறப் பெறுவர் மாதோ. ()

ஓதிய தனுமா தத்தி லுதித்திடு பருவந் தன்னி
லாதிரை சேரு நாட்சித் தாமுத மாடி னோர்கள்
கோதிகந் திலகு தேவர் கடன்கழித் தரசர் கோவாய்
வார்திரைக் கடல்சூழ் வையம் புரந்துநீ டூழி வாழ்வார். (ரு)

எவ்வகைப் பட்ட பாவி யாயினு மகர மாதஞ்
செவ்விசேர்ந் திலகுஞ் சித்தா முதப்புனல் செவ்வாய் வார
மொவ்விய மனத்த ராகி யொருதின மூழ்கி னோர்க
ளெவ்வரும் பாவ நீங்கி யளவில்பே ரின்பஞ் சேர்வார். (சு)

வேறு.

மகர மாதந் தனிலாதி வாரஞ் சித்தா முததீர்த்தந்
திகழ முழுகு மவரறிவு சேரும் புதல்வன் றனைப்பெறுவார்
புகழ்சேர் திதிநற் பதினொன்கிற் புனித முறுமப் புனல்படிந்தோர்
சகல தனமு நவமணியுந் தமது மனையிற் சேர்ந்திடுவார். (எ)

வேறு.

தகரவார் கூந்தற் றைய லம்மைசந் நிதிமுன் றூய
புகழ்நிறைந் திலகு சித்தா முதப்புனல் பொற்பு வாய்ந்த
மகரநன் மாத மெந்த வாரமே யெனினும் வந்து
திகழ்தர முழுகு வோர்வாழ் செல்வநற் கதியுஞ் சேர்வார். (அ)

வேறு.

எழுந்து மகர மாதமுழு தினுநற் சித்தா முததீர்த்த
மழுந்தி முழுகி யேறுமவர் பெறும்பே றம்மா வெண்ணரிதாஞ்
செழுந்திம் புனலம் மாதமதிற் செவ்வாய்க் கிழமை யுத்தமமாங்
கொழுந்தா ருரோம சங்கைசிவ லோக மகிழ்ச்சி கூர்ந்துறைவார். (௯)

மன்னுஞ் சித்தா முததீர்த்த மாசிச் செவ்வா யினின்மூழ்கிப்
பொன்னிற் செய்த கோதானம் புகழ்மா மறையோர்க் கினிதளித்தார்
சென்ம வந்தி மிருதவந்தி செப்புங் கதலி வந்தியிவர்
நன்மை மிகுபுத் திரன்றனைநா னிலமு மகிழப் பெற்றிடுவார். (௧௦)

வேறு.

எங்கணு யகிமுன் னெழில்பெற விளங்கி யிருந்தசித் தாமுத தீர்த்தம், பங்குனி மாதப் பருவமூழ் கினர்கள் பாவமோர் கோடி செய் திடினுஞ், செங்கதி ரவனைக் கண்டகா ரிருள்போற் றீர்ந்திடுந் திருநிலம் புரந்து, பொங்கொளி சூழும் விமானமே லேறிப் புகழ் சிவ லோகமேற் புகுவார். (௧௧)

உகந்தொறும் பெயர்வே றுள்ளதாய் மகிமை யோங்குசித் தாமுத தீர்த்த, மகந்தனின் மகிழ்ச்சி நல்குநன் மீனத் தமர்ந்தவுத் தரத்திலா டினர்தா, மிகபர மிரண்டி னெய்துநற் பலப்பே றெய்துவ ரிந்தமா நிலத்திற், பகர்ந்திடு மிராச சூயமோர் பதினு யிரஞ் செயும் பலன்பெறு குவரே. (௧௨)

வேறு.

மீன மாதந் தனில்வருநல் வெள்ளி வார முத்தரஞ்சேர்ந்
தான பருவந் தனிற்சித்தா முதந்தோய்ந் திடுவா ரரியசிவ
ஞானம் பெறுவர் கிருச்சரமோர் பதினு யிரநற் பலன்பெறுவ
ரீன மான பிறவியைநீத் தினிய சிவலோ கமும்பெறுவார். (௧௩)

மீனமாதப் பௌமதினம் விளங்குஞ் சித்தா முதப்புனலிற்
ருனஞ் செய்வோர் நூறுகுலர் தம்மைக் கரையேற் றவர்களபி
மான முடனே யமாவாசை பருவ மதிசூ ரிய * கிரண
மான தினமப் புனன் மூழ்கு மவர்தாம் பெறுவர் சிவலோகம். (கச)

மாக மாதம் பங்குனிநன் மாத மேட மாதமதி
லேக மாதம் பூமிசுத னெழில்சேர் சித்தா முதநீரிற்
றேகம் புனிதம் பெறமூழ்கி யேறு மவர்சேர் குவர்மிருந்த
போக மன்றிக் கிருச்சரமோ ரையா யிரஞ்செய் புண்ணியமே. (கரு)

இடப மாதம் பருவதினத் தினையும் விசாகந் தனிலெழுந்தே
யடரு மினிய படித்துறைசூழ் தழகார் சித்தா முததீர்த்த
முடனற் புனிதம் பெறத்தோய்ந்தோ ருலகிற் சகல பாக்கியமுந்
திடவிற் பனபுத் திரன்றனையும் பெறுவர் சிவலோ கமும்பெறுவார்.

வேறு.

விளங்கிடுந் துதிசேர் சித்தா முதப்புனன் மிதுன மாதங்
கிளர்ந்திடு நலன்சூழ் செவ்வாய்க் கிழமையின் முழுகு வோர்நல்
வளம்பெறு கல்வி வாய்ந்த புதல்வனைப் பெற்று வாழ்வா
ரளந்தறி வரும்பே ரின்பப் பேறுமேற் பெறுவ ரம்மா. (கஎ)

புவிநிறை தீர்த்தந் தம்மிற் புனிதமாம் புகழ்ந்து கேட்போர்
செவியினுக் கமுதாஞ் சித்தா முதப்புனல் செழித்து மேன்மை
கவினுறுங் கடக மாதங் கதிரவ னுதய காலந்
தவிருறு திலக மூழ்கிற் சகலபாக் கியமுஞ் சேர்வார். (கஅ)

அற்புத மிலகி மேலா மாவணி மூலஞ் சேரு
நற்புகழ் படைத்த செவ்வாய்க் கிழமையி னலஞ்சேர்ந் தென்றும்
பொற்புவாய்ந் திருந்த சித்தா முதச்செழும் புனலின் மூழ்கிற்
பற்பல போக வின்பம் புசித்துமேற் பதவி சேர்வார். (கக)

---

* கிரகணம் என்பது கிரணமெனத் தொக்கது.

தகளற வுணர்ந்த மேன்மைத் தூயமா முனிவர் கேட்ப
வகமகிழ்ந் திலகு சூத மாதவ னருள்செய் மாதப்
பகர்பலச் சருக்க வாய்மை பகுத்துரை செய்தே னிப்பாற்
றகவுறு தருப்ப ணஞ்செய் பலன்பெறு சருக்கஞ் சொல்வேன். (உ0)

மாதபலன்கூறியசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-ௗ0அ.

---

## தருப்பணபலன்கூறியசருக்கம்.

பெருமை பெறுஞ்சித் தாமுதநீர் தோய்ந்து பிதிர்க்கள் கடன் கரைமேற், றரும விதியாற் செய்திடுவோர் தங்கண் மரபிற் கோடி குலம், வருபற் பலருஞ் சிவலோகம் வாழ்வார் தீர்த்தக் கரைமீதிற், பருகத் தண்ணீர்ப் பந்தல்வைத்தோர் தாமு மனைய பலன்பெறுவார்.

பொங்குஞ் சித்தா முததீர்த்தப் புனித நீரிற் படிந்தெழுந்து, திங் கட் கலைசே ரமாவாசைத் தினத்திற் பிதிர்தர்ப் பணஞ்செய்வோர், தங்கள் பிதிர்க டமைக்குறித்தே தானஞ் செய்வோர் பிதிர்களு டன், றுங்க விமானந் தனிலேறிச் சூழ்வர் தூய சிவலோகம். (உ)

திலத்தாற் சித்தா முததீர்த்தத் தீரந் தனிற்றர்ப் பணஞ்செய் வோர், நலத்தாற் கோடி தினங்கயா சிராத்தஞ் செய்த நற்பலமாங், குலத்தாற் பிதிர்க டமைமனத்திற் குறித்தே யாம மிரணியஞ்செய், பலத்தாற் கோடி குலத்தொடும்போய்ப் பதிய வுறைவர் சிவலோகம்.

பதினுன் காநாட் பவுமதினஞ் சேரிற் பகர்புண் ணியதினமாந், துதிசேர் சித்தா முததீர்த்தந் தோய்வோர் கடல்சூ ழுலகாள்வா, ரதிமாமோக நவமணியா பரண மளிப்போர் குலங்கோடி, கதிசேர்ந் திடநற் சிவலோகங் காணி கொள்வ தெளிதாமால். (ச)

பயனைத் தருஞ்சித் தாமுதநீர் பவும வாரம் விதிபாத
மயன மருத்தோ தயஞ்சோம வார மாதி சேடனுடற்
சயனத் திருமாற் றுவாதசியே * தந்திச் சாயை கபிலைசட்டி
நயமுற் றிடத்தோய்ந் திடிற்கோடி யாகஞ் செய்த நற்பலமாம். (ரு)

நவமாங் கிரகந் தனக்கினிதாய் நயக்கும் பொருளுங் கண்மணி யுஞ், † சிவநா பமுஞ்சங் கமும்பெருகு சித்தா முதநீர் படிந்தெழுந் தே, யவமே பொழுது தனைப்போக்கா தருமா மறையோர்க் களித் தவர்தாந், தவமே செயினுங் கிடைப்பவரி தாகும் பேறு தனைப்பெறு வார். (சு)

சேரு மிருபத் தேழ்நாளிற் சென்ம நாட்சித் தாமுதநன், னீரு ன் முழுகி யேறினர்நீ ணிதியம் பெறுவ ரேழ்குலமுஞ், சாரு மரிய சிவலோகந் தயங்கு மந்நீர் நிதந்தோய்வோர், மேரு வரைபோற் புகழ் நிறைந்தே மேலாம் பதம்பெற் றினிதிருப்பார். (எ)

புகழ்சேர்ந் திடுபுண் ணியகாலம் புனித மிகுசித் தாமுதநீர், திகழ முழுகி யேறுமவர் சேர்வர் நூறு கிருச்சரஞ்செய், நிகழ்நற் பதவி யஃதன்றி நிமலன் சிவலோ கமும்பெறுவ, ரிகழ்வர் பிறவி யெனும்பெரிதா யிருக்கும் வினைவே ரினைக்களைந்தே. (அ)

வேறு.

மிக்கசீர் மகிமை பெற்ற தருப்பண பலத்தின் மேன்மை, புக்கெ ழிற் சருக்கர் தன்னை யறிந்தவா புகன்றே னிப்பாற், றிக்கெலாம் புகழ்ப டைத்துத் திறன்மிகுத் திடவி ருந்த, தக்கனல் லருள்பெற் றேங்கு சருக்கமேற் பகர்வன் மாதோ. (கூ)

தருப்பணபலன்கூறியசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ருகஎ.

---

* தந்திச்சாயை - கிரகணம்.

† சிவநாபம் - சாளக்கிராமத்தில் சிவமூர்த்தம் என்பர்.

## தக்கனருள்பெறுசருக்கம்.

பூரு வந்தணி ஞான்முக னளித்திடும் புதல்வன்
பாரு வந்தருந் துதிசெய்வான் படைத்தன னன்பின்
மேரு வந்தணி பெறவனைத் தெடுத்தவில் லியன்முள்
யாரும் வந்தனை செய்குவ தணர்ந்தில னிகழ்ந்தான். (௧)

இனைய வாறிகழ்ந் திருந்திடு தக்கன்விண் ணளிக்கும்
வனைக ருங்கழ லிந்திரன் முதலிய வானோ
ரனைவ ருந்நிறைந் திடுமரும் பிரமயா கத்தின்
வினைவி ளைந்திட லறிந்திலன் வெகுண்டுரை செய்தான். (௨)

வேறு.

தாம தக்குணத் தினன்றலை யோடுகை யேந்தி
வாம மேகலை மங்கையர் மனைதொறும் பலியேற்
றேம மெய்திடா தேக்கமுற் றிருப்பவன் றனக்கிவ்
வோம வேள்விநல் லவிநல்கல் விடுமினென் றுரைத்தான். (௩)

அன்ன தன்றியாங் கிருந்திடு மமரரை நோக்கிப்
பின்னு மொன்றுரை செய்தனன் பித்தனை வணங்கி
லென்ன தாக்கினை பெறுவிரென் றிதுநிகழ் வேலை
நன்ம கந்தனின் வந்தன னந்தியங் கடவுள். (௪)

வருதல் காண்டலும் வணங்கின னயன்மனத் தடங்காப்
பெருகு சீற்றமோ டெழுந்தனன் றக்கனப் பெற்றி
கருதி நந்திநா யகன்சபித் தனன்கணத் தழிய
வெருவி யென்னதாய் முடிந்ததென் றேங்கினர் விண்ணோர். (௫)

துள்ளி யார்த்திடு கணம்புடை சூழ்ந்திட வெழுந்து
வெள்ளி மால்வரை மேவின னந்திநா யகன்மே
லெள்ளி யேயவ மதித்துயிர்த் திருந்திடுந் தக்கன்
றள்ளி நாட்பல சென்றபின் வேள்விதான் புரிந்தான். (சூ)

அன்ன வேள்வியி லவன்றனக் கஞ்சியே யமரர்
துன்னி னூரயன் முகுந்தன்மற் றியாவருஞ் சூழ்ந்தா
ரின்ன காலையி லிமயமீன் றெடுத்திடுஞ் செல்வி
முன்ன வன்றனை வணங்கியே வாடிமுன் னின்றாள். (எ)

ஈன்ற தாதைசெய் வேள்வியான் கண்டிவ ணெய்தத்
தோன்ற லேவிடை யளித்தரு ளென்றன டேயோ
னூன்ற கேள்வியில் லாதவ னவமதித் திடுவன்
போன்ற வொப்பினை யிலாதநீ தவிரெனப் புகன்றான். (அ)

மலர்ந்த தாமரை வாண்முகம் வாட்டமீ தூரப்
புலர்ந்து பின்னரும் வேண்டினள் பொழிகரு ணையினூற்
கலந்து யிர்க்குயி ராகிய கண்ணுதற் பெருமா
னலந்த ருந்திரு வாய்மலர்ந் தனனயந் தெழுந்தாள். (கூ)

எண்ண ரும்பரி சனங்களுஞ் சூழ்ந்திட வெய்திப்
பண்ணி டும்பெரு வேள்விமுன் னின்றனள் பார்த்துக்
கண்ணி னைசிவந் துரைத்தனன் றக்கன்வெங் கடுஞ்சொற்
பெண்ண ணங்குதன் செவிப்புகப் பெரிதுவெய் துயிர்த்தாள். (க0)

கற்றை வார்சடைக் கண்ணுதற் கடவுளே பரமென்
றுற்று ணர்ந்துகோன் மறையுரைத் ததுபகுத் துணராய்
பெற்ற பெண்ணெனச் சிறுமையாய்ப் பெரிதெனை யிகழ்ச்சி
சொற்ற நின்செருக் கழிந்திட வென்றன டிடித்தே. (கக)

வலன்சு ழன்றிடு மங்கியில் வீழ்ந்தனள் வானோர்
புலன்க லங்கிட நடுங்கினர் பொன்னிதழ்க் கொன்றை
யலங்கல் சூடிய வையனஃ தறிந்துவே ணியினு
னிலம்பி எந்திட வடித்தன னெடிதுவெய் துயிர்த்தே. (௧௨)

அன்ன காலையி லண்டகோ ளகைநடு நடுங்க
வென்னை யாளுடை வீரபத் திரனெனும் பெரியோன்
சென்னி யாயிரங் கரமிரண் டாயிரஞ் சேர்ந்து
வன்னி யோருரு வெடுத்தென வந்துநின் றனனே. (௧௩)

அலகி லாற்றலா னேழ்கடற் சுவறிநீ ருகிக்
குலகி ரிவெடித் தெண்டிசை நிலங்களுங் குலைந்து
மலர யன்பத மாலவன் பதமழிந் தொழிய
விலகி டுங்கணப் பொழுதினிற் செய்கவோ வென்றான். (௧௪)

என்ற மற்புய வீரருள் வீரனெம் பிரான்முன்
னின்ற போதுநன் னெறியிலாத் தக்கனீள் வேள்வி
யொன்று செய்தனுற் றனனிது பொழுதவி யுள்ள
தின்று நல்கெனக் கேளிது மறுத்தன னெனின்மேல். (௧௫)

உரிய ராகியே மருங்குறு மொழிந்தவின் னவரும்
புரியும் வேள்வியும் புல்லறி வினன்புய வலியு
மிரியல் போகநீ செய்யென விறைவனி துரைத்தான்
றிரியும் பாரிடந் துள்ளியார்த் திடச்செயிர்த் தெழுந்தே. (௧௬)

வக்கி ரத்தெயி றிலங்கிடப் பத்திரா மருங்கு
மிக்க வெந்திறற் காளியின் குழூஉமிடை தரச்சூழ்
செக்கர் வானெனச் சென்துகள் பரந்திடச் சென்று
தக்கன் வேள்விசெய் சாலையிற் புகுந்தன னம்மா. (௧௭)

வீர னுற்றிடு வெஞ்சின நெருப்புமேற் சூழ்ந்து
கோர வாலெயிற் றிடையிடை குருதிகொப் புளிக்குஞ்
சார தப்படைத் தலைவர்க ணின்றதுந் தன்கண்
ணூரக் கண்டன ரழிந்தது வேள்வியென் றனரால். (கஅ)

பாக சாதன னடுங்கின னயன்பதைத் தனன்சூழ்
நாக மேற்றுயி னாரணன் வெள்கின னுப்பண்
யாக மீட்டுநல் லறிவிலாத் தக்கனின் னுயிர்தான்
போக வந்தநா ளிதுகொலோ வெனமுகம் புலர்ந்தான். (கசு)

பாரி டங்கொளாப் பாரிட நாற்றிசைப் பரப்புஞ்
சாரி டும்படி யேவினன் றழலெழ விழித்தான்
யாரி னும்வலி யாரிவ ரென்றுநா யகராய்ப்
பூரி யாரையெண் ணியசிறு விதியின்முன் போந்தான். (உ0)

தன்ம னந்தனைத் தேற்றிய தக்கன்முன் னின்ற
வன்மை கூறரும் வீரனை யாரைநீ வந்த
தென்ன வென்றன னீச்சுரன் புதல்வன்யான் யாகத்
தன்ன வன்பெறும் பாகநல் குதியது வாங்க. (உக)

வந்த னன்னவ னருளினு லென்றனன் மறுத்தா
னெந்தை யன்றிமற் றியாரிறை யாயுளோ ரென்றே
பைந்து ழாயணி முகுந்தனை யயன்றனைப் பார்த்து
நுந்த மக்கிவ ணிசைவுகொ னுவன்றதென் றுரைத்தான். (உஉ)

ஆம தன்றென வுரைத்திலர் வாய்திற வாம
லூம ரின்னிருந் தனர்களஃ தன்னியே வீர
னேம மாமிவர் வல்லமை யறிகுவ னென்றே
நாம வெங்கதை யாலுள நடுங்கிட வடித்தான். (உங)

அட்ட காசம்வந் தடித்தலு மூர்ச்சைமா லடைந்தான்
மட்டி லாவிறல் வீரன்மேன் மடித்திதழ் கடித்துக்
குட்டி னனயன் சிரம்வெடித் திடமலர்க் குழலா
ரொட்டி நின்றெழி யாதுதண் டனைசெய்வ தற்றார். (உச)

அண்டர் கோன்முத லாகிய கடவுள ரவன்கைத்
தண்ட னைத்தனை யுற்றனர் தக்கனைப் பற்றித்
துண்ட மாயுடல் பதைத்திடத் தலையினைத் துணித்துக்
கொண்ட வேள்விவெங் கனற்கிரை கொடுத்தன னன்றே. (உரு)

ஏடி லங்குதார் வீரன்மான் மூர்ச்சைதீர்ந் தெழுந்து
தேடி யேவிடும் படையெலாஞ் செயித்தன னுடன்சூழ்
கோடி கோடிபா ரிடமெலாங் கோதில்வெண் டும்பை
சூடி வேள்வியை யழித்துமேற் றுணங்கையிட் டனவே. (உசு)

வேறு.

ஈங்கிது நிகழ்ந்த தீரே ழுலகமு மளந்த மாயன்
பாங்கரி னின்ற வீரன் பகரருஞ் சீற்றந் தன்னை
நீங்கிடு முபாயந் தேடி யின்றனக் கிணைவே றுண்டோ
தாங்குமென் றடக்கை யாழி தானினக் கஞ்சிற் றுமால். (உஎ)

என்றுபற் பலவுங் கூறி யேத்தினன் சினந்த ணிந்து
துன்றுபா ரிடமி டைந்து சூழ்தர வெழுந்து போந்து
வென்றிகொள் வீரன் வெள்ளை விடையுகந் தருளு மையன்
றன்றிரு வடியை வாழ்த்தித் தலையினல் வணங்கி னனல். (உஅ)

போந்திடும் வானோர் யாக்கைப் புணர்ச்சிவிட் டொழிந்த மூர்ச்சை
தீர்ந்தயன் முதலா யுள்ள தேவர்சிற் சிலவ ரீண்டிக்
காந்தெரி கனலு நெற்றிக் கண்ணுடைக் கடவு டன்பாற்
சூழ்ந்துநின் னருளல் லாது தக்கனுக் குய்தி யுண்டோ. (உகூ)

உறுதியைத் தெளிந்தா னேனு முணர்ச்சிகூ றறிவி லாத
சிறுவிதி யென்ப தையன் றிருவுள மறியா துண்டோ
பெறுமப ராதந் தன்னுற் பெரியதண் டனையும் பெற்று
னிறுமவ னெழுமவ் வண்ண மிறைவநல் கெனவி ரந்தார். (௬௦)

மாறிலாக் கருணை யானல் வயித்திய நாத மென்னும்
பேறுயர் தலத்திற் சித்தா முதப்புனற் பெருந்தீர்த் தத்தி
லாறுபட் டிருந்த பாதி யுடன்மறித் தலையி ரண்டும்
வேறுநீ ரெடுத்து வைம்மி னெனவரங் கொடுத்தான் மேலோன். ()

பொருந்திய மாசிச் செவ்வாய்ப் புண்ணிய தினத்தில் வைத்தா
ரரும்புனற் றோய வேற தாமுடல் சிரமுஞ் சேர்ந்து
வரும்படி யாவிபெற்றம் மறித்தலை விளங்கத் தக்கன்
பெரும்பிழை செய்த பாவம் பெயர்ந்திட நிற்றல் கண்டார். (௬௨)

நஞ்சமுண் டிமையோர் தம்மை நயந்துகாத் தளித்த வையன்
செஞ்சரண் பணிந்தான் றக்கன் றேவதுந் துபிக லிப்ப
விஞ்சையர் பொழிபூ மாரி மேதினி நிறைந்த தம்மா
வெஞ்சினர் யாரு மண்ண லருளினு லெழுந்தா ரன்றே. (௬௩)

ஈசனை யிகழ்ந்த பாவ மிதுவிட வெண்ணில் கோடி
பேசவந் திடுபா வத்திற் பெரியதோர் பாவங் காணே
ணுசற ரெடிய பாவ மதனையுந் தீர்க்கு மாற்றுற்
றேசணிந் திலகுஞ் சித்தா முதமிகர் தீர்த்த முண்டோ. (௬௪)

இறந்தவன் பிழைத்து நன்மை யெய்திடச் செய்யு மேன்மை
சிறந்து மங்களமாஞ் சித்தா முதந்தரி சனஞ்செய் தோரும்
பிறந்திடுந் திவலை சேரப் பெற்றபேர் தாமுஞ் சற்று
மறந்துமிப் பிறவி சேரார் மகிழ்சிவ லோகஞ் சேர்வார். (௬௫)

இருவரா லறிய வொண்ணு வொருவனை யிகழ்ந்து தக்கன்
வருவதை யுணரா னுகி மகம்புரிந் ததனுல் வீரன்
பெருகுதண் டனையை யுற்றுப் பேறுமேற் பெறுதல் சொன்னேன்
றருமவ்வா றிரண்ய வன்மச் சருக்கமேற் றமியன் சொல்வேன். ()

தக்கனருள்பெறுசருக்கமுற்றிற்று.

ஆஉ திருவிருத்தம் - ந௫ந.

---

## இரணியவன்மச்சருக்கம்.

தேனவிழ் கடுக்கை சூடுஞ் செல்வனைப் பணிந்து வாய்மை
யானநற் கணித ரெண்ணி யளவிடும் யுகத்து ளென்று
மேனல னளிக்குந் திரேதா யுகத்தின்மே லினிது திக்கு
ஞானநல் லன்பன் சித்தா முதநறும் புனலிற் றோய்ந்தான். (க)

அன்னவன் றனக்குச் சித்தா முதப்புன லழகு வாய்ந்த
கன்னலின் சாற தாகி யிருந்தது கண்டு பின்னர்
மன்னவ னுடன டந்த மகிமையைப் புகன்முன் றாய
பொன்னின்வண் பெயர்ப டைத்த புரவலன் றேரா னுனன் (உ)

சோதனை செய்வா னெண்ணி யெழுந்தனன் பதாதி தூளி
காதல்கூர் திசைக ளிற்றின் கவுட்குழி தூர்த்த தம்மா
போதவிழ் வாகை சூடிப் புகழ்படைத் திருந்த வேலான்
மாதவர் குழாங்கொண் டேத்தும் வயித்திய நாதஞ் சேர்ந்தான். (ந)

வேறு.

வள்ளவாய்க் கமல நறுமணங் கமழும் வாவியின் றுளிநற வருந்திப், பிள்ளைவண் டினங்கள் விண்ணின்மே லெழுந்து பெட்புற முரன்றுபாண் மிழற்றப், புள்ளின மரற்றுங் காமர்பூந் துறையும் புது

மலர்ச் சோலையு நோக்கி, யள்ளிலை நெடுவே லரசர்கோ னுளத்தி னளப்பரு மகிழ்ச்சிபூத் தனனே. (ச)

மறையவ ரருண னுதிக்குமுன் னெழுந்து மகிமைசேர்ந் திலகுநீ ராடித், துறைதொறு நின்று தருப்பணஞ் செய்து தூயகா யத்திரி செபித்தே, நிறையுமன் னவர்த நிலைபெறு முறுதி நின்றுபார்த் ததிசயித் தனன்பின், னறைகமழ் சித்தா முதப்படித் துறையி னல்லெழில் கண்டுபூ ரித்தான். (ரு)

வேறு.

தெளிந்தசித் தாமுத தீர்த்த மூழ்கியே
யளிந்திடு மனத்தினோர் துளிய ருந்தினன்
குளிர்ந்திடு கன்னலின் கோதில் சாறதாய்
மிளிர்ந்ததி னிரட்டியாய் மிகுந்தி ருந்ததே. (சு)

மின்னொளிர் வேலினுன் மேனி மீதினிற்
றுன்னியே வுறுபெரு வுரோக நோய்த்தொடர்
புன்னிடின் முழுதும்விட் டோடக் கண்டன
னன்மகிழ் கூர்ந்தன னயந்து போற்றினன். (எ)

வேறு.

ஆதலி னிட்சு சாரமென் றதன்பே ரகலிடந் துதிசெய விளங்குங்
காதல்கூ ரரசன் கதிர்மணிக் குவையுங் கனகமுந் தாளமுந் துகிலும்
வேதமு துணர்ந்த பூசுர ருளத்தின் விழைவுதீர்ந் திடமகா தானஞ்
சீதள மிலகு தீர்த்ததீ ரத்திற் செய்துநன் மகிழ்ச்சிபூத் தனனே. (அ)

நிணங்கமழ் வேலான் காலைசெய் கடன்க ணெறிமுறை யாற்றிமே னறிய, மணங்கமழ் பசுந்தே னொழுகுசெங் கழுநீர் மலரணி வயித்திய நாத, னணங்குடன் விளங்கு மாலயம் வலஞ்செய் தைய

னைப் பூசைசெய் தருள்பெற், றிணங்கிடு மிகுந்த திருப்பணி செய் தே யிருந்தனன் ப்ற்பக லங்கண். (கூ)

நிகர்பகர் வரிய நவமணி குயிற்றி நேர்மையா யொப்பமிட் டிழைத்த, பகரும் பசும்பொன் விமானமொன் றையன் பரிவுகூர்ந் தளித்தனன் பரவிச், சகரர்தொட் டிடுதெண் டிரையெறி கடல்சூழ் தரணியிற் பகைதனைக் கடிந்து, புகர்தவிர்ந் திலகு புகழ்மிகும் வேலான் பொற்புறு தன்னகர் போந்தான். (க0)

வேறு.

அன்னதன் பின்ன ரனேகநாட் செங்கோல் செலுத்தியே யவனிகாத் தளித்து, மின்னொளிர் விமான மேறிவெண் கவரி யிரட்ட விண் ணவர்கள்பூ மாரி, நன்மழை பொழிய வரம்பையர் நடனஞ் செய்திட நறுமணங் கமழும், பொன்னிதழ்க் கடுக்கை யணிந்தவெம் பெருமான் புகழ்மிகு கயிலைசேர்ந் தனனே. (கக)

வேறு.

அன்பனுக் கிட்சு சார மாம்பெரு மையைக்கேட் டுள்ள
மின்பமுற் றிடவெ முந்த விரணிய வன்மன் செய்கை
நன்புகழ்ச் சருக்க வாய்மை யறிந்தன நவின்றே னிப்பாற்
றன்பெரு மகிமை யோங்கு சதானந்தச் சருக்கஞ் சொல்வேன். (கஉ)

இரணியவன்மச்சருக்கமுற்றிற்று.

ஆகூ திருவிருத்தம்-நஈகூ.

---

## சதானந்தச்சருக்கம்.

சிறந்திடு சித்தா முதப்பெரு மகிமை கேட்பவர் செவிதனக் கினிமை, பிறந்திட வுரைப்போர் கங்கைநீ ராடும் பெரும்பலன் பெறுகு

வரன்றி, நிறைந்திடு தீர்த்த நீர்தனின் முழுகி யெழுந்திடு நெடும்
பலன் பெறுவார், மறங்கிள ரியம வாதையை யொழித்து வள்ளல்
பா தாம்புயஞ் சேர்வார். (க)

வேறு.

சித்த முருகு மன்பினுடன் சித்தா முதனீர் தோய்ந்தெழுந்து
* முத்தம் பசும்பொற் றகட்டினின்மான் முதலாங் கடவு ளுருவெழு
மத்த மலர்தும் பையினறிய மலர்சேர்த் தளிப்போர் பூதான [தி
நித்த மிகுந்த கோதான நிறைவேள் வியுஞ்செய் பலன்பெறுவார்.

இப்பூ மியினிற் புதல்வர்ப்பே றில்லா தவர்சித் தாமுதநீர்
தப்பா துதைய காலமது தன்னிற் படிந்து நவநீத
மப்போ தருக்கு நறுநெய்பெய் தருமை பெறுமா விளக்கேற்றி
னெப்போ துதற்கு மிகவரிதா யுளநற் புதல்வன் றனைப்பெறுவார்.

வளமலிந் திலகுஞ் சித்தா முதப்புனன் மாதந் தோறு
முளமகிழ் தரச்செய் செவ்வாய்க் கிழமைநல் லுதய காலந்
தளர்வுறு தமர்ந்து மூழ்கி னோர்தருஞ் சென்ம மூன்றி
னளவிடாப் பாவந் தீர்ந்தே யையன்வாழ் கயிலை சேர்வார். (ச)

வேறு.

முக்க ணுயக னருள்பெறு முனிவரின் முதன்மைத்
தக்க பக்குவ நன்னடை யொழுக்கமா சார
மிக்க சீலநல் விரதமே தினிதுதி செய்யு
மிக்கு ணத்தினன் சதானந்த முனிவர னென்போன். (ரு)

அன்ன பண்பின னரியசித் தாமுத மதனி
னன்ன லம்பெற முழுகிநீ றணிந்துநான் மறைக
ளின்ன மோலமிட் டறிவரு மிறைவனை மனத்தி
னுன்னி யேசெபம் புரிந்துமேற் றியானமுற் றுறைந்தான். (சு)

---

* முத்தம் - விருப்பம்.

பரந்த தீர்த்தமேற் பயிறரும் பசியமண் டேக
முரந்து மேலெழுந் துறைந்திடு முனிவனுத் தமமாஞ்
சிரந்த னில்விழுந் ததுதியா னந்தனை நீங்கிப்
புரந்த னையெரித் திடுங்கன லெனப்புழுங் கினனால். (எ)

தீப மாமெனச் சுடரெழுந் திணைவிழி சிவந்து
கோப வெங்நெருப் பெழுந்திடக் கொதித்திடு முனிவன்
சாப மொன்றுரைத் தனன்றருந் தீர்த்தமீ தென்று
மேய்ப சுஞ்செழுந் தவளைக ளொழிந்திட வென்றே. (அ)

அன்று தொட்டருந் தீர்த்தமீ தனையமண் டூக
மின்று காறுமாங் கில்லைமற் றெறும்படைத் திலகு
வென்றி மாதவன் விளங்கிடுந் தலந்தனைப் பிரியா
தென்றும் வாசஞ்செய் திடவரம் படைத்திருந் தனனே. (கூ)

இனைய தாகிய மகிமைக ளெண்ணருங் கோடி
யனைய தீர்த்தமெவ் வுகத்தினும் படைத்திருந் ததனு
ளினைகு வோரதின் முழுகுவோர்க் கென்றுநீங் கரிய
வினையி னல்வருந் துன்பம்யா வையும்விலக் கிடுமே. (கய)

வேறு.

எதிரிலா திலங்குஞ் சித்தா முதப்புன லென்றுந் தோய்வோ
ரதிகமாங் கொடிய பாவம் யாவையுந் தீர்வ ரன்றிப்
பதிதனைக் கொன்ற பாவந் தீர்ந்திடும் பலிக்கு நல்ல
கதியினைப் பெறுவர் வெள்ளி மால்வரை காணி கொள்வார். (கக)

உலகெலாம் புகழு மேன்மை யுளசதா னந்த னென்னு
மிலகிய முனிவன் வாய்மைச் சருக்கமீண் டுரைத்தே னிப்பாற்

குலவெழிற் புருடன் றன்னைக் கொல்லுமப் பாவந் தீர்ந்த
நலமிகு சருக்க வுண்மை நயம்வகுத் துரைப்பன் மாதோ. (கஉ)

சதானந்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-நஎஎ.

---

## புருடனைக்கொன்றபாவந்தீர்ந்தசருக்கம்.

திலகமாய் நிறைந்தகான் மீர தேசமீ
திலகுமே மாவதி யென்னு மோர்நகர்
பலவள மிகுந்துபல் காவல் பூண்டுறு
நலமல்கே மாசுர னகர்க்கு நாயகன். (க)

அந்நகர் தனிலரு மறையு ணர்ந்தவ
னன்னெறி யொழுகிடு நயமி குந்தவன்
றென்மறை யவர்குலத் துதித்த தூயவ
னுன்னரு மவன்பெய ருஞ்ச விர்த்தியே. (உ)

தொகுமறை யவர்குழாஞ் சூழ்ந்து பார்மிசை
மிகுபுகழ வேதியன் றனக்கு வேதநூற்
பகுதியின் மணம்புரி பாரி யாயினு
டகுதியில் சண்டியென் றெருத்தி தானுளாள். (ந)

சிறியவா யினுங்குல நடத்தை சேருநல்
லறிவுமா சாரமு மின்றி யற்பகற்
பிரியமாய் வலிந்துசை யோகம் பீடுசேர்
செறியுள பதியுடன் செயசி னேர்துளாள். (ச)

உந்திநீர்க் கருங்கட லுடுத்த பார்மிசை
யெந்தவூ ரினுமிது நடக்கு மோவெனுந்
தந்தைதாய் சொல்வழி தள்ளி யெள்ளியே
நிந்தனை பற்பல நினைந்து பேசுவாள். (ரு)

விரவிய பிதிர்க்கடன் கெடுக்கு மிண்டினுள்
பரபுரு டரைப்பரி சிக்கும் பத்தியாள்
குரவரை நிந்தைசெய் கொடுமை யுள்ளவள்
வரனுடன் பொருந்தியே வலிமை செய்குவாள். (சா)

பதிதனை யிகழ்பவர் பரிவி லாருட
னதிகமா நல்லுற வாடுங் கொள்கையா
ணிதிதரு பரபுரு டருக்கு நேசமாந்
துதிசெய்து சூழ்ந்துப சாரஞ் சொல்லுவாள். (எ)

பஞ்சமா பாதகி பதியைக் கொல்லும்வன்
னெஞ்சுடைத் தானவ ளாகி நித்திரை
மிஞ்சிய வேளைபார்த் தெழுந்து வேதியன்
றஞ்சிர மீதுகற் றூக்கித் தள்ளினாள். (அ)

வீழ்தலு மவனுயிர் விட்டு நீங்கியே
யூழ்வினைப் புசிப்பினை யுற்ற தாயிடைத்
தாழ்வுறு தவனுட லெடுத்துத் தள்ளினாள்
பாழ்படு கிணற்றிருட் படாத்தை மூடியே. (கூ)

உரமிவர் பற்பல சாதி யாயுள
பரபுரு டரைப்பகற் பொழுதுங் கூடுவாள்
விரவியர் தமக்குமேம் பட்ட கொள்கையா
டரணியிற் கற்பினர் தமைநகைப்பளே. (க0)

ஈங்கிவட் கிளமைதா னிருக்கு மாயினுந்
தாங்கரும் புருடர்சை யோகஞ் செய்தலா
னீங்கின தெழினிகழ் தளர்ச்சி வந்தது
வீங்கிடக் கொடியநோய் மிகவி ளைந்ததே. (கக)

தொட்டணைத் திடுமவர் தூர நின்றனர்
விட்டன ரவளுடன் கூடும் வேட்கையை
யொட்டியே விடாதுநோ யுடற மீஇயது
முட்டிமேற் பெருஞ்சன்னி மூடிக் கொண்டதே. (கஉ)

இறந்தன ளடைந்தன ளியம லோகமேற்
றிறந்திடா நரகெலாந் திறந்த மூத்தினர்
பறந்தமு தனள்பல கற்பம் பாவிபிற்
பிறந்தன ளூறுபாழ் பிறப்பு நாயதாய், (கங)

இழுக்குடைச் செனனம்வந் தெடுத்த தன்றியே
புழுச்சொரிந் திடத்துயர் பூண்ட லைந்தன
ளழுக்குளாள் பூருவ சென்மத் தந்தண
னொழுக்கமா சாரமு முள்ள தந்தையே. (கச)

அன்னவன் றன்னுட னடுத்த நண்பினுன்
மன்னுகங் காதரன் மனைத னிற்செயும்
பின்னும்வே ணியன்பிர தோட பூசையைத்
தன்னிரு கண்ணினாற் றமியள் கண்டனள். (கரு)

இளமையிற் பிதாவுட னெய்தி யன்னவன்
வளமனை தனிற்செயும் வள்ளல் பூசையைத்
தளரிடை கண்டபுண் ணியத்தின் றன்மையா
லளவுதொண் ணூற்றினோன் பஃத கன்றபின், (கசு)

மன்னுசீர் வயித்திய நாத மாநகர்
தன்னினூ ரும்பிறப் பதுச னித்தனண்
முன்னர்போ னுயுட லெடுத்து மூத்துட
லின்னல்கூர்ந் திடப்புழுச் சொரிய வேங்கினுள். (௧எ)

பரந்தன ளந்நகர்ப் பழைய வேதியன்
வரம்பெறு பெயர்சுசன் மாவென் போன்மனைத்
திரம்பெறு வாசலிற் றிரியு நாயுட
லுரந்தவிர்ந் தேயினைத் தொடங்கி நின்றதால். (௧அ)

இதின்முனம் வேதிய னெழுந்து போந்துநற்
பதனல்கப் பரந்தசித் தாமு தம்படிந்
ததனரும் புனலெடுத் தகத்தின் வந்துசஞ்
சிதமொழிந் திடச்செபஞ் செயுந்த லந்தனை. (௧௯)

தெளித்தன னொருதுளி தெறித்து மற்றதின்
வெளிப்புற மேடைமேல் விழுந்த தண்புன
லொளிக்குநாய் புழுச்சொரி யுடலிற் பட்டது
களித்தன நாயுட னீங்கக் கண்டதால். (௨௦)

அக்கணம் பாவம்விட் டகலத் தேவரின்
மிக்கநன் மாதர்சூழ்ந் திடவி மானமேற்
றிக்கெலாம் புகழ்பெற வேறிச் சென்றனள்
சொர்க்கலோ கந்தனைத் தூய மேனியாள். (௨௧)

இந்திரன் முதலிய தேவர் யாவரும்
வந்தருந் துதிசெய மகிழ்ந்தி ருந்தனண்
முந்துசித் தாமுத முழுகுந் தூயவர்
சிந்தைகூர் பலன்றெரிந் துரைப்பர் யாவரே. (௨௨)

வேறு.

நீதிநூ லோதும் வாய்மை நெறியுள புருடன் றன்னைப்
பாதகி கொன்ற பாவந் தீர்ந்தது பகர்ந்தே னிப்பாற்
கோதில்சீர்ப் பாரி தன்னைக் கொன்றவப் பாவந் தீர்ந்த
மேதகு சருக்க வாய்மை விளங்கிட வுரைப்பன் மாதோ. (உரு)

புருடனைக்கொன்றபாவந்தீர்ந்தசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-சOO.

---

## பாரியைக்கொன்றபாவந்தீர்ந்தசருக்கம்.

ஓதநீர்க் கடனல் லாடைசூ ழுலகி லுதித்திடு சராசர மனைத்து
மேதநீங் கிடுபே ரின்பமுற் றிலக விதந்தரு புராணமூ துணர்ந்த
சூதமா முனிவ னைமிசா ரணியச் சூழன்மா முனிவரர் மகிழ [ளுல்.
வீதலா ததிக மகிமைசேர் கதையொன் றெடுத்தரு ளுதற்கிசைந் தன

வேறு.

ஊர்ந்தரு ளுளர்துசங் குயிர்த்த நித்திலஞ்
சேர்ந்தகோ தாவிரித் தீர மொன்றதிற்
சார்ந்தெழி றழைந்தநந் தவட மென்னுமூர்
கூர்ந்தபோ தாயனக் குலச்சி றப்புளான். (உ)

வேதவே தாங்கமுந் தெரிந்த மேன்மையான்
பூதலம் புகழ்பல புதல்வர்ப் பெற்றவ
னாதனைப் பூசைசெய் யாதி சைவனற்
கீதமென் சுவைபெறப் பாடுங் கேள்வியான். (ரு)

ஈங்கிவை யுணர்ந்தவ னிவைவி டுத்துமேற்
றீங்குசெய் கொள்கைய னாகிச் செந்நெறி
நீங்கின னிந்தைசெய் தானம் யாவையும்
வாங்கினன் சந்திவந் தனம றந்தனன். (ச)

தின்றதாம் பூலவா யுடன்றி கழ்ந்தெழி
றுன்றுமுப் புரமெரி செய்த தூயனை
யென்றுமா சாரம தின்றிப் பூசைசெய்
தன்றியுஞ் சிவத்திர வியம ழித்தனன். (ரு)

விலக்கிடும் பிரேதவூண் விரும்பி யுண்டனன்
கலக்கநெஞ் சினிலணுத் துணையுங் கண்டிலன்
குலத்துணை வியின்மனங் கொதிப்ப வேசிதன்
னலத்தினை நுகர்ந்திட நயந்து கூடினன். (சு)

அனையதீங் கினனடி வணங்கிப் பத்திசெ
யெனையிகழ்ந் தேபொரு ளிச்சை வேசிபா
னினைவுசெய் தவண்மனை நீங்கி டாதுவந்
தனைமறந் தனையிகழ் தானம் வாங்கினை. (எ)

ஊனமாம் பாவநீ டேக்கி ராந்திகோ
தானம்வாங் கினைபிறர் தனங்க வர்ந்தனை
ஞானமில் லாருட னட்பு வைத்தனை
யானதொன் றிலைநகைப் பாம னைத்துமே. (அ)

என்னுயிர் நாதனே யிளைத்து வாடினர்
நின்னரும் புதல்வர்கள் கால நீடின
ருன்னியே யவர்க்குப நயனஞ் செய்கிலை
தன்மமோ விதுவெனத் தளர்ந்து கூறினாள். (கூ)

இங்கிது வன்றியே யினிய கற்பினுள்
பொங்குகோ தாவிரிப் புனலின் மூழ்கியே
சங்கரன் றிருவடி தன்னிற் பூசைசெய்
தங்கவ னஞ்செழுத் துரைத்தல் விட்டனே. (௧0)

போதுசேர் குழற்பொது மகளி ராசையை
யீதுதீங் கெனவிடுத் திரங்கு மென்றனேப்
பாதுகாத் தருளெனப் பகர்ந்து கண்ணினீ
ரோதருந் துயருட னுகுத்து நின்றனள். (௧௧)

அடித்தலம் பணிந்தருந் ததியன் னுள்சொல
மடித்திதழ் கடித்துவன் னெஞ்சி னுனெடுத்
தடித்தன னுலக்கையா லவனி மீதினிற்
றுடித்துவீழ்ந் தனள்பொறி கலங்கிச் சோர்ந்தனள். (௧௨)

இரணமுற் றனளுயி ரிருக்கு தென்றுதிக்
கிரணமுற் றியசினக் கேள்வன் கண்சிவந்
திரணிய மேனியாள் சிரத்தி டித்தனன்
மரணமா யினள்சிவ கணங்கள் வந்தனர். (௧௩)

நாறுபூங் கோதையா ணலங்கொள் கற்பினு
ளேறினள் விமானமே லெழுந்து விண்ணவர்
மாறிலாப் பூமழை மாரி பெய்தன
ராறணி யண்ணல்சே வடிய டைந்தனள். (௧௪)

அத்தகு கொடியனு தரவி லாமையாற்
சித்திரத் தெழுதிய பாவை செய்கையை
யொத்தசை வின்றியே யொடுங்கிச் சோர்ந்தவள்
புத்திர ரனேவரு மிறந்து போயினுர். (௧௫)

நன்மைசேர் பாரியைக் கொன்ற தானலிந்
தின்னல்கூர்ந் தெண்ணருந் துன்ப மெய்தினன்
குன்மநோய் வந்தது கொடிய பாவியென்
றன்னமா நகருளா ரகல விட்டனர். (கசு)

இனியவன் பூசைசெய் திடற காதெனத்
தனிநகர் வேதியர் தள்ளி விட்டபின்
மனிதர்சஞ் சரித்திடா வனத்திற் போயினன்
புனிதமில் பாவியைப் புலிபி டித்ததே. (கஎ)

உடறனை யுழுவைவாய்க் கொடுத்து டன்பிடித்
தடர்சமன் றூதுவ ரவனைக் கட்டியே
படர்கொழுங் கனற்சுடு நரகு பாழ்ந்ர
கிடையிட வருந்தியெட் டுகம முந்தினன். (கஅ)

பறவையாய்ப் பாவிபின் வந்து பாரினிற்
பிறவிநூ றெடுத்தனன் பிறக்கு முன்னர்நற்
றுறைவழி கார்த்திகைச் சோம வாரநா
ளிறைவனை யருச்சனை செய்தி ருந்ததால். (ககூ)

நிறைதரு நூறதாம் பிறவி நீள்பொழி
னறைகமழ் வயித்திய நாத மாநகர்ச்
சிறைசெய்சித் தாமுத தீர்த்தத் தோங்கிய
துறையகத் திருந்ததொன் மரத்தின் மேலதாய். (உ0)

புராதனம் பிறந்திடு பறவை போற்பிறந்
திராவுநண் பகலினு மிருக்கு நாளினிற்
கிராதன்கண் டம்பினு லெய்யக் கேதமுற்
றுராயொளிர் தண்புன லுள்வி முந்ததே. (உக)

வேறு.

கதிதரு மாசி மாதங் கவினுறு மூன்றுஞ் செவ்வாய்
முதிர்சுவை நிறைந்த சித்தா முதப்புனல் பட்ட போதி
னதிகமாங் கொடிய பாவ மனைத்தையு நீங்கித் தீய
விதிதரு பறவைத் தேகம் விட்டுநன் மகிழ்ச்சி கூர்ந்தே. (உஉ)

ஒளிமிகும் விமான மேறி யுயர்சிவ லோகஞ் சேர்ந்தான்
றெளிபுன னிறைந்த சித்தா முதச்செழுந் தீர்த்தந் தோய்வோர்
நளிர்கட லாடை சூழு நல்லுல காள்வர் யாவு
மெளிதினிற் பெறுவ ரென்றே யிசைத்தனன் முழுது ணர்ந்தோன்.

பத்திசெய் பாரி தன்னைக் கொன்றிடு பாவந் தீர்ந்த
சுத்தமாஞ் சருக்கந் தன்னைத் தொகுத்தெடுத் துரைத்தேன் மேலா
முத்தமர் தமையி கழ்ச்சி யுரைத்திடு கொடிய னான
சத்திய சன்மன் செய்கைச் சருக்கமேற் சொல்வன் மன்னே. (உச)

பாரியைக்கொன்றபாவந்தீர்ந்தசருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்-சஉச.

---

## சத்தியசன்மச்சருக்கம்.

இலகிய சூதமா முனிவ னெண்ணிலா
நலமிகு நைமிசா ரணிய மேவிய
வலகின்மா தவர்செவிக் கமுத மாமெனப்
பலனுயர் காதையைப் பகர லுற்றனன். (க)

முத்திமா நகர்தனின் முதன்மை யாகிய
வுத்தம மதுரையி லுயர்ம றைக்குல
நித்திய கன்மவே தியரை நிந்தைசெய்
சத்திய சன்மனீள் கொடியன் றன்பெயர். (உ)

சைவநிந் தனைசதுர் மறையி னிந்தனை
தெய்வநிந் தனையறு தினமுஞ் செய்குவ
னையன்மான் மியஞ்சொலும் புராணத் தன்பிலன்
வைதுதூ டணஞ்செய்வன் சொல்லு வார்தமை. (ங)

அன்னபா னுதிக ளனைத்தும் விற்பன்மேன்
மன்னிய சிவத்திர வியம றைப்பன்மற்
றின்னவா றன்றியே யிழிவு செய்குவன்
றன்மமன் றென்பது சற்று மோர்கிலன். (ச)

அரசர்பே ரவைதனி லரிய கல்விசே
ரிரவலர் மறையவர் யாவ ராயினும்
வரினவர்க் கொருபொருள் வழங்கி டாதுமேற்
பரவிய கெடுதிதான் செய்யும் பாதகன். (ரு)

மிகுந்திடு புசிப்பினர்க் காணின் வெஞ்சினம்
புகுந்திடு கண்ணினன் புவன மீதினிற்
றகும்படி யன்றிநீ யுண்ணுந் தன்மையாற்
பகுந்தெவ ரிடுகுவ ரெனப்ப ழிப்பனே. (சு)

உருத்திடு கோபம்விட் டொழுகி லன்றினங்
கிருத்திரு வஞ்செயுங் கொடியன் கீழ்மையாங்
கருத்தின ருடன்கலந் துறவு செய்குவ
னிருப்பிட மாகுவ னெண்ணில் பாவமும். (எ)

கங்கைநீ ராடிய பலனைக் கைப்பிடித்
திங்கிது தந்தன னென்று விற்பன்மே
லங்கவன் செய்திடு மநீதம் யாவையும்
பங்கயா சனன்பகுத் தெண்ணற் பாலவோ. (அ)

புன்மதி யினன்றனக் கெழுவர் புத்திரர்
கன்னிய ரெனவெழில் கொழிக்குங் காஞ்சினி
யென்னுமோர் பெண்ணிவ டனக்கொ டுத்தவன்
பின்னரா ருயிரம் பொன்னைப் பெற்றனன். (கூ)

சேர்ந்திடு திரவியஞ் செலவிற் போகுதென்
ரேர்ந்துதன் வயிற்றினை யொடுக்கிப் புத்திரர்
சோர்ந்திட நெருப்பெனக் கடுஞ்சொற் சொல்லுவ
னோர்ந்தவன் கெடக்கய நோய்நி றைந்ததே. (க0)

அனையநோய் நிறைந்திட வவன்ம ரித்தனன்
றனைவினிற் சமன்விடுந் தூதர் கொண்டுபோய்
நினைவரி தாம்பெரு நரகி னீந்திடா
தினையவே யவன்றனை யழுத்தி யிட்டனர். (கக)

கொடிற்றினைக் காய்ச்சியே கொண்டு வந்துடன்
றடித்திடப் பிடுங்கினர் துள்ளி யார்த்தெடுத்
தடித்தன ரிருப்புமுட் கதையி னுலனுப்
பொடிப்பட வரிந்துவாய் புகுத்தி யிட்டனர். (கஉ)

ஈங்கிவன் மனுவொரு மூன்றின் காலமித்
தீங்குறு நரகினிற் கிடந்து தேம்பினன்
ருங்கிடா துடைசிவ நாபந் தன்கையா
லோங்கிவிற் றனனிரந் தொருவன் கேட்டனன். (கங)

தரித்திர னனவே தியன்ற னக்கலன்
மரித்திடு முனமனத் தொடுகொ டாமலே
யுருத்தன னெடுத்துநீ நடவென் ரேதினன்
பிரித்ததப் புண்ணிய நரகம் பின்னிட. (கச)

உற்றபுண் ணியமடுத் துதவி செய்தலான்
மற்றவன் வயித்திய நாத மாநகர்ச்
சுற்றுயர் சோலையிற் றூய பாதிரி
முற்றிய விருக்கமேன் முனிய தாகியே. (கரு)

திருந்துசித் தாமுத தீர மீதினி
லிருந்தன னெடிதுநா ளிருக்கு மேல்வயி
னரும்பொரு ளாமிரு கண்ட ருந்தவன்
வருங்குகன் றிருவிழா மகர மாதநாள். (கசு)

வேறு.

கிளர்ந்திடு நான்காஞ் செவ்வாய்க் கிழமையி லுதய காலம்
விளங்கிய தீர்த்த மூழ்கி விதித்தவெண் ணீற ணிந்து
வளம்பெறு மண்ணல் கோயில் வலஞ்செய்து வந்து விண்ணை
யளந்தபா திரிபி ழற்கி ழருஞ்செபஞ் செயநி னைந்தே. (கஎ)

குண்டிகை யிருந்த சித்தா முதனறுங் குளிர்நீ ரள்ளி
வண்டிசை மிழற்று நீழற் சுசிபெறத் தெளித்தான் மன்னு
மொண்டுளி யதனி லொன்று தெறித்துயர் மரத்தின் மீது
பண்டுறைந் திருந்த தீய முனியுடற் பட்ட தன்றே. (கஅ)

வேறு.

ஏறும்மிகும் பிரம யட்சதா முடல்விட் டிலகுதிவ் வியவுரு வாகி, யுறுபெரும் பாவ மனைத்தையுங் காணு தொழிந்துநல் லாடையா பரண, நறுமணங் கமழ்செஞ் சாந்தணிந் திலகு நவமணி மகுடமுந் தரித்தே, மறுவின்மா தவனைத் தொழுதனன் முன்னம் வந்ததுந் தீர்ந்ததும் புகன்றான். (கக)

தேறியே தெளிந்த முனிவர தேவ ருலகம்யான் செல்குவ னென்றே, யேறினன் விமானத் திலகுபூ மாரி யிமையவர் மிகப்பொழிந் தனர்வெண், ணீறினை யணிந்த சிவகண மனேகர் நெருங்கிய கவரிகா லசைத்தார், நாறிருங் கூந்தற் கன்னியா மரம்பை நன்னடம் புரிந் தனண் மாதோ. (௨0)

இந்திர னெதிர்கொண் டெழுந்தன னிவ்வா றிலகும்விண் ணவ ருல கதனைச், சுந்தர விமானத் திருந்துசெங் கமலத் துணைவிழிக் கடையினு னோக்கி, யுந்தியங் கமலத் துதித்திடும் விரிஞ்ச னுலகமா லுலகமு நீங்கி, வந்துமேற் சிவலோ கந்தனைச் சேர்ந்து மகிழ்ச்சி பூத் திருந்தனன் மன்னே. (௨க)

வேறு.

உயர்ந்தவர்க் கிடையூ றென்று முரைத்திடு தீமை தீர்ந்தே
யியங்கிய சத்ய சன்மச் சருக்கமீண் டுரைத்தே னிப்பா
னயந்தருங் குணத்த ராகி நானிலம் புகழு மேன்மை
தயங்குநன் முனிவர் தீர்த்தச் சருக்கமே லுரைப்ப னம்மா. (௨௨)

சத்தியசன்மச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௪௪௬.

---

## முனிவர்தீர்த்தச்சருக்கம்.

மன்னிய மகிமைசேர் சூத மாதவன்
பன்னரு முனிவர்கள் பரிவு கூர்ந்திட
முன்னரோ தியகதை யதனின் முற்றுறப்
பின்னரு மொருகதை பேசன் மேயினன். (க)

நற்புகழ் வயித்திய நாத மாநக
ரிற்றகு முனிவர்தந் தீர்த்த மெய்துநற்
பொற்புறும் பூருவ மதனிற் போற்றிடும்
விற்கிடை மூன்றினில் விளங்கி யென்றுமே. (உ)

இந்தநற் றடவிரட் சகன்புள் வேந்தன்மேல்
வந்திடு முயர்மிரு கண்டு மாதவன்
சுந்தர விருடிதொன் மரம்வி ருக்கமாஞ்
சந்திர சேகரன் றகுமெய்த் தெய்வமே. (ங)

வடவிருக் கந்தனை வலஞ்செய் தன்னவர்க்
கடன்முறை கைதொழு தியற்றி யாவணித்
தொடர்புறு மூலநாண் மூழ்குந் தூயவ
ரடர்வினை தவிர்சிவ கணங்க ளாகுவார். (ச)

விரவுநன் மகரமா தத்தின் மீதினிற்
பரவிய சுக்கில பக்க பஞ்சமி
வரமிகு சுக்கிர வாரங் கூடுநா
ணார்படிந் திடிற்சிவ னுருவ நண்ணுவார். (ரு)

அன்றியு முனிவர்தந் தீர்த்த மாடுவோர்
வென்றிசேர் மிகுபரி மேதஞ் செய்திடும்
வன்றிறற் பலன்றனைப் பெறுவர் மற்றுமவ்
தோன்றுபா தகமெலா மொழித்துத் தள்ளுவார். (சு)

புகுங்கொடு நரகுசேர் * புருண கத்தியு
மிகும்பிதிர் கத்தியும் வீர கத்தியுந்
தகும்பதி கத்தியுந் தாச கத்தியும்
பகுந்துபாற் றிடுமுனி தீர்த்த நீர்படின். (எ)

* புருணகத்தி - கருச்சிதைத்தல்.

வேறு.

அகழ்கட லுடுத்த பார்மே லளப்பரு நன்மை நல்கி
யிகல்கடிந் திலகு மேலா மெழிறனைழந் திருந்த நல்ல
புகழ்பெறு முனிவர் தீர்த்தம் புகன்றன னிப்பா லென்றுந்
திகழ்தர வீர கத்தி தீர்ந்திடு சருக்கஞ் சொல்வேன். (அ)

முனிவர்தீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - சருச.

---

## வீரகத்திதீர்ந்தசருக்கம்.

இத்தகு தீர்த்த மேன்மை யின்னமொன் றுரைப்பன் வீர
பத்திரன் யாக முற்றும் பாழ்படச் செய்து செங்கைச்
சத்திர மெடுத்துத் தக்கன் றலையினைத் தடிந்து வீர
கத்தியை யடைந்து பூமி யந்தரஞ் சுவர்க்கங் காறும். (க)

திரிந்தனன் றிரக் காணுன் றிகழ்தரு மேனி யெல்லாங்
கரிந்தெழின் மாறி வாடிக் கயிலைமால் வரையை நண்ணி
விரிந்தசெஞ் சடில நாதன் விரைகமழ் மலர்த்தாள் போற்றிப்
பரிந்தியா னென்செய் வேனிப் பாதக மகல வென்றான். (உ)

உரைசெய்த வீரன் பின்னு முன்னியித் தனைய தென்று
கரைதனைக் காணாத் துன்பக் கடலினுட் படிந்து யானித்
திரைதனை யொழிந்தே யுண்டி தீர்ந்தன னென்றான் கொன்றை
விரைகமழ் தாரான் வீரன் றனக்கிவை விளம்ப லுற்றான். (௩)

வாரிசூ ழுலக மேத்தும் வயித்திய நாத மென்னும்
பேரினைப் பெற்று மேலாம் பெருமைசேர் தலத்தின் மீது
நேரிலை யரிதாய் மன்னி நிறைமுனி தீர்த்தந் தன்னைச்
சேரின்வந் தடைந்த பாவந் தீர்ந்திடு மெளிதி னென்றே. (ச)

உரைத்திடு மையன் வாக்கி னுறுதியை நயந்து மேரு
வரைத்தடந் தோளான் வெள்ளி மால்வரை நீங்கித் தீர்த்தக்
கரைக்கணற் றவஞ்செய் காற்கியன் காசிபன் வீதி கோத்திரன்
தரைக்குண்மே லாம யிர்தன் பராசர னகத்தியன் றக்கன். (௫)

நலமிகு முனிவர் மூழ்கி நற்றவம் புரிந்து மேலாம்
பலனினைப் பெற்ற வாற்முற் பகர்முனி தீர்த்த மென்றே
யுலகினிற் பெயர்பெற் ேறுங்கு முண்மையு முணர்ந்து வீர
னிலகிய தீரத் துள்ள வெழில்வளம் யாவுங் கண்டான். (௬)

ஆயதா மகர மாதச் சுக்கில பக்கந் தன்னின்
மேயபஞ் சமியின் வெள்ளி வாரமெண் ணரிய வீர
நாயக னனைய தீர்த்த முழுகின னடுங்கி விட்டுப்
போயது பிரம கத்தி பொற்புறு மகிழ்ச்சி பூத்தான். (௭)

சூழ்ந்துழு வலஞ்செய் தையன் றுவாரபா லகனுய் நின்ருன்
வாழ்ந்திடு கலியி னன்னேன் வளரருள் பெற்றுப் பின்ன
ராழ்ந்து மூழ்கினர்க ளெண்ணி லாவரும் பாவ மெல்லாம்
வீழ்ந்திட வெளிதி னின்ப வீடுமேற் பெறுவ ரம்மா. (௮)

விறல்படைத் திருந்த வீர பத்திரன் வெகுண்டு நீங்கா
மறம்வளர் தக்கன் றன்னை வதைசெய்ய வந்து சூழ்ந்த
திறன்மிகும் வீர கத்தி தீர்ந்தவா றுரைத்தே னிப்பாற்
பெறலரும் பிரம தீர்த்த மான்மியப் பேறு சொல்வேன். (௯)

வீரகத்திதீர்ந்தசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௪௬௩.

---

## பிரமதீர்த்தச்சருக்கம்.

மங்கள நிறைந்தே மல்கு மகிமைசூழ் பிரம தீர்த்தந்
திங்கள்வே ணியன்றன் பாங்கிற் சேர்தருந் திசையோ ரெட்டி
லங்கியங் கடவுண் மன்னி யமர்ந்திடு திசையி னென்று
பொங்குமா தவர்கள் கேட்பப் புராதன முனிபு கன்ருன். (க)

இலங்கிடு மிருடி வேதன் கதிரவ னினிய தெய்வ
மலர்ந்தபா டலம்வி ருக்க மிரட்சகன் வருசண் டீச
னலம்பெறு மிவர்கள் செய்ய நாண்மலர்த் தாள்வ ணங்கி
வலஞ்செய்து விருக்கந் தன்னை வான்புனற் படிவர் நல்லோர். (உ)

மருமலர்ப் பொகுட்டின் மேவு மறையவன் வந்து நின்று
நிருமிதஞ் செய்து தீர்த்த நீரினுல் வயித்திய நாதன்
திருமுடிக் கபிடே கந்தான் செய்தருச் சனையுஞ் செய்தே
யருமக மொன்றி ரண்டை யாயிர வருடஞ் செய்தான். (ங)

செப்பிணைந் திருந்த தென்னத் திகழ்ந்திடு தனத்தாண் மின்ன
லொப்பிடு மிடையா ளன்ன நடையினு ளுலக மீதி
லெப்பெரி யோருங் கல்விக் கிறைஞ்சிடும் வாணி தன்னே
டப்பெருந் தீர்த்தம் பார்த்தே யனேகநல் வரங்கொ டுத்தான். (ச)

சிறந்திடு தீர்த்தஞ் சூழுந் தீரமேற் செய்த மேன்மை
யறந்தரும் வேள்வி முற்றி யையன தருள்பெற் றப்பா
லுறைந்திடும் பசிய பொற்சூட் டோதிம மூர்ந்து பாரிற்
புறந்தரு மவர்கள் போற்ற வெழுந்துதன் னுலகம் போந்தான். (ரு)

அனையகா ரணத்தான் வந்த வரும்பெருந் தீர்த்த மூழ்கின்
வினையொழித் திடுவர் வேத விக்கிர யஞ்செய் வோனு
நினையுமவ் வேதந் தன்னை மறந்திடு மவனு நீங்கா
தெனையமா பாத கஞ்செய் திடுமவர் தாமுந் தீர்வார். (சு)

மன்னுமா வணியின் மேவி வருமமா வாசை தன்னி
னன்மைசேர் பிரம தீர்த்த மூழ்கினற் றானஞ் செய்வோர்
பன்னிரண் டாண்டு மேலாம் பரன்சிவ நிசியிற் பூசை
தன்னையன் புடனே செய்வோர் பெறும்பலன் றனைப்பெற் றுய்வார்.

மட்டவிழ்ந் திலகும் பொற்று மரையுறை விரிஞ்சன் றீர்த்த
மட்டமி சேர்ந்த செவ்வாய்க் கிழமையி லமுந்தி மூழ்கிற்
சிட்டரா குவர னேகம் வேள்விசெய் பலனைச் சேர்வா
ரெட்டரும் வேத பாரா யணவெழிற் பலனுஞ் சேர்வார். (அ)

கண்ணிரு நான்கு பெற்ற கடவுளின் றீர்த்தந் தன்னை
வண்மையாய் வலஞ்செய் வோர்கள் புவிவலஞ் செய்த பேறு
நண்ணுவர் மூன்று கோடி குலநலம் பெறச்செய் தென்று
மண்ணறன் கயிலை நீங்கா திருந்திடச் செய்வ ரன்றே. (கூ)

குருமனை யாளைத் தொட்ட கொடியபா தகமுங் கூட
வருசகோ தரன்றன் பாரி மலர்க்கரம் பிடித்த வணைந்த
பெருகுபா தகமு நண்பன் பெய்வளை யிதழி னூறற்
பருகுபா தகமுந் தீர்க்கும் பகர்ந்திடும் பிரம தீர்த்தம். (க0)

மங்கள கரமா யார்க்கும் வரந்தரும் வயித்திய நாதற்
கங்கிதன் றிசையின் மேவி யருடரும் பிரம தீர்த்த
மிங்கிதன் பெருமை யென்னு லறிந்தவா றிசைத்தே னிப்பாற்
பொங்குகு ரியன்றன் றீர்த்தச் சருக்கமேற் புகல்வன் மன்னோ. (கக)

பிரமதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-சளச.

---

## சூரியதீர்த்தச்சருக்கம்.

ஓங்குசீ ரிராம தீர்த்தத் துரைபெறுந் தென்பான் மன்னும்
பாங்கர்விற் கிடையி ரண்டிற் பரிதியங் கடவு ளுர்த்த
நீங்கரு மகிமை பெற்று நிறைந்திடுங் கிரக தோட
மாங்கதின் மூழ்கி னேரை யணுகிடா தகன்று நீங்கும். (க)

சூரிய சாபண வாயிற் கொடுத்திடப் பட்டு வெய்யோன்
சீரிய வுடன்மெ லிந்து சிறப்பொழிந் ததன்மேல் வந்து
வாரிசூ மூலக மேத்தும் வயித்திய நாதஞ் சார்ந்தே
யாரிணை மலர ணிந்த வண்ணலைப் பூசை செய்தான். (உ)

இறைவன தருளான் முன்ன மியலொழிந் திருந்த மேனி
நிறையெழில் கொழிப்ப வாய்ந்து நிரம்பின ததன்மே லன்னே
னுறைதரு மிடத்திற் றீர்த்த மியற்றிமே லொளிர்வ ரங்கண்
முறைபெறக் கொடுத்த வாற்குன் மூதன்மைதான் மிகுந்த தம்மா.()

கண்ணுவ னிருடி தெய்வங் கதிரவ னந்தி கேச
னண்ணியங் கதனை நாளு மிரட்சைசெய் நலனை யுள்ளோன்
விண்ணுய ரரசு வாய்ந்த விருக்கமே லிவர்தாள் போற்றி
வண்மைசேர் விருக்கந் தன்னை வலஞ்செய்து மூழ்கின் வாழ்வார்.

முந்திய வருக்கன் வார மூழ்கிநீ றணிந்தே யன்னோன்
மந்திரஞ் செபித்துப் பம்பி வளர்ந்திடு மரசி னீழ
லந்தணர்க் கினிய தான கோதுமை கிருத மாதி
தந்தமக் கியன்ற தானஞ் செயிற்பலன் சதம டங்காம். (ரு)

கதிரவன் றீர்த்த மீது கனிந்துநால் வருணத் துள்ளோர்
துதிபெறுங் கடக மாதச் சுக்கில பக்க மூழ்கி
லதிகநற் பலன ளிக்கு மாதிவா ரத்தின் மூழ்கி
னிதிமிகப் பெறுவர் கங்கை தோய்நெடும் பலனுஞ் சேர்வார். (சு)

மங்கள கரமா மிந்தி ராதிபர் வாழ்வு நல்கு
மிங்கிது வன்றி யிச்சை யுற்றன வினித ளிக்குந்
தங்குகோ கத்தி யாதி பாதகந் தனைவி லக்குஞ்
செங்கதி ரவன்றன் றூய தீர்த்தநீ ராடி னம்மா. (எ)

திகழ்தரு மிராம தீர்த்தத் தென்றிசை தன்னின் மன்னி
மிகுதிறல் வரங்க ணல்க விளங்கிமே தினியின் மீது
புகழ்பெறு சூரிய தீர்த்த மான்மியம் புகன்றே னிப்பான்
மகிழ்பெறத் தக்க தீர்த்த வண்மையை வகுத்து ரைப்பேன். (அ)

சூரியதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆகூ திருவிருத்தம்-சஅஉ.

---

## தக்கதீர்த்தச்சருக்கம்.

மலர்தலை யுலகம் போற்று மகிமைசேர் வயித்திய நாத
னிலகுபூங் கோயி னின்று மெழின்மிகு மீசா னத்தி
னலகிடிற் குரோசப் பாதி யெல்லையி னமுதம் போன்று
நலமிகுந் தக்கன் முன்ன நயத்துசெய் தீர்த்த மாதோ. (க)

வேறு.

இருடிகாத் தியாயன னிலகு தெய்வநல்
லருண்மிகும் விநாயக னதனி ரட்சகன்
கருதருங் கந்தன்வாழ் விருக்கங் கூவிளம்
வருமவ ரிவர்தமை வணக்கஞ் செய்துமேல். (உ)

வளர்ந்திடு தருவலஞ் செய்து வார்புனல்
விளங்கிய கன்னிமா சத்துண் மேவிய
விளம்பிறைப் பக்கா ணவமி யெய்தியே
கிளர்ந்திடுங் குருதின முழுகல் கேண்மையாம். (௩)

தாமகங் கனிவுற முழுகிச் சார்ந்திடு
மாமறை யவர்மன மகிழப் பாறயி
ரோமநெய் தண்டுல முதவிற் செய்பவம்
போமருஞ் சிவத்துரோ கமும்பின் போகுமே. (ச)

வீடணை சைவசாத் திரம்வி பூதியைத்
தூடணஞ் செய்திடுந் துரோகி யாகிய
கேடனே யப்புனற் படியிற் கேதமாய்
வாடனேர் திடச்செய்து வறுமை தீர்க்குமே. (ரு)

அன்பொடு தக்கனற் றீர்த்த மாடின
பின்பிதிர் தருப்பணஞ் செய்யிற் பெட்புறுந்
தன்குலத் தினரொரு கோடி பேர்தமை
யின்புறு சிவபத மெய்தச் செய்யுமே. (கூ)

வேறு.

உலகெலாம் போற்றும் வயித்திய நாத வும்பர்கோன் விளங்கு பூங் கோயி, லிலகுமீ சான திக்கினில் விளங்கி யெழில்வர மெனி தினி லளிக்க, வலன்மிகப் பெற்ற தக்கனற் றீர்த்த மான்மியம் பகர்ந்தன னிப்பா, னலன்மிகும் வித்தியா தரர்பெருந் தீர்த்த நலந்தனை நவிலுவன் மாதோ. (எ)

தக்கதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்-சஅக.

---

## வித்தியாதரதீர்த்தச்சருக்கம்.

கறைவி ளங்கிய கந்தரக் கடவுடன் றீர்த்த
முறைதெ ரிந்துணர் சூதமா முனிவரன் மூதிர்ந்த
நறைம லர்ச்செழுந் தருமிகு நைமிசா ரணியத்
துறையு மாதவ ருளமகிழ் கூர்ந்திட வுரைத்தான். (க)

வந்து வானவர் நிதந்தொழும் வயித்திய நாத
விந்து சேகரன் கோயிலின் விளங்குமீ சானத்
தைந்துவிற் கிடை யளவையின் வித்தியா தரர்நற்
சுந்த ரத்திருத் தீர்த்தம்விண் ணமுதெனச் சூழும். (உ)

என்றெ டுத்தெடுத் துரைத்தன னிதமுனந் தக்கன்
வென்றி சூழ்பெருந் தீர்த்தநேர் கிழ்த்திசை விளங்கு
நன்றி சேர்ந்திடு மிருடிநற் குணமிகு கபிலன்
வன்றி றற்பெறு தெய்வம்வாழ் கந்தவேண் மாதோ. (௩)

வருகொ ழுங்கன விரட்சகன் வளர்ந்திடும் வில்வம்
பெருவி ருக்கமாம் பேருல கந்தனில் வாழ்வோ
ரருகி ருந்திடு மிவர்தமை வணங்கியப் புனறோய்ந்
தருகு சிந்தையோ டியர்மறை யவர்தமக் கம்மா. (௪)

கலந்த சாந்தநற் புதுமல ரணிந்து * காற் பாசந்
திலஞ்ச ருக்கரை தண்டுலந் தக்கிணை சேர்த்தே
யிலங்கும் வில்வமூ லந்தனிற் கொடுத்தவ ரெழில்சேர்
நலங்கொண் மங்கல நிறைந்திடு செல்வநண் ணுவரே. (௫)

ஆடி யென்றுநற் பெயர்பெறு மயனமீ தனைய
நீடி ருஞ்செழுந் தீர்த்தநீ ராடினர் நீங்காக்
கோடி பாதகந் தொலைந்துநூற் றொருகுலந் தன்னைத்
தேடி யேகரை யேற்றுவர் சிறப்புடன் வாழ்வார். (௬)

இடப மாதமீ தெய்திய விசாகநா ளிலகு
தடமி றைந்திடு தண்புன லாடினர் தம்மைத்
தொடரும் வல்வினை தொலைந்திடுந் தொல்லுல காளுந்
திடமி குந்திடு புதல்வனைப் பெறுவரஞ் சேர்வார். (௭)

---

* காற்பாசம் - பருத்திப்பஞ்சு.

அசழ்பெ ருங்கட லாடைசூழ் காசினி யதனி
னிகழு நல்லெழி னிறைந்திடு கன்னியர் நிரம்பித்
திகழ்த ருஞ்செழுந் தீர்த்தநீர் தோய்ந்திடிற் றிருந்தும்
புகழ்கொள் சுந்தரக் கணவனைப் புணர்குவர் மாதோ. (௮)

வேறு.

அக்கணிர் திலகு மையன தருள்பெற் றவனிமீ தினிற்றிகழ் தரு மெண்,டிக்கெலாம் புகழுங் வித்தியா தரர்தந் தீர்த்தமீண் டுரைத்தன னிப்பாற், செருக்கவெஞ் சாபம் பெறுஞ்சுத ரிசனன் சொலற்கரு மத னைவிட் டொழிந்து, தக்கசீர் விமான மேறிவெண் கயிலை தனின்மகி ழ்ந் திருந்தவா றுரைப்பேன். (௯)

வித்தியாதரதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௪௯௮.

---

## சுதரிசனன்சாபநீங்குசருக்கம்.

விளங்கிய சுதரி சனனெனு மெழில்சேர் வித்தியா தரன்மிகுந் திடுநல், வளம்பெறு மமுத குணத்தினுள் குமுத வதியெனுந் துணை விதன் னுடனெ, கிளர்ந்திடுங் கங்கை மாநதி யதனிற் கெழுமிமூழ் கிடுஞ்சலக் கிரீடை, துளங்கிடு மினிய துகிறனை நீத்துத் துணைவிழி சிவந்திடச் செய்தான். (௧)

அன்னகா லையினிற் றேவல னென்னு மரியமா தவன்வரு கங் கை, நன்னதி யாடப் போந்தன னன்னோர் நற்றுகி லின்றிநீ ராடு, மன்னிய விளையா டலையரு வருத்துக் கண்டனன் வளர்வெகு ளியி னாற்,றன்னனே ரரியா னுழுவையாய்ப் போகத் தக்கதென் றுரைத்த னன் சாபம். (௨)

ஆங்கது செவியிற் புகுதுமுன் னடியே மையலின் சாபம்விட் டொழிந்து, நீங்குநா ளெந்நா ளருள்செயென் றிரந்து நின்றன னெ டியமா தவன்பின்,பாங்கரி னின்ற வித்தியா தரனைப் பார்த்துநீ பாரி தன் னுடனே, யீங்கிது வுரைத்தா யென்பெருந் துயரங் கேளெடுத் துரைப்பனென் றிசைத்தான். (ரு)

ஆர்த்திடு தரங்கக் கருங்கட லுடுத்த வவனியிற் றம்பதி புணர் ச்சி, பார்த்தவன் செய்த புண்ணிய நசிக்கும் பாய்புலி கரடியாய்ப் பிறப்பன்,போர்த்துடுத் திடுநல் லாடையில் லாமற் பொற்கொடி நீயு நிற் றலையான், தீர்த்தநீ ராட வந்திடு மிடத்திற் றிட்டியாற் கண்ட பா தகத்தால். (சு)

செய்திடு தவங்கள் யாவையு மின்று சேரண மாயின வன்றி, யையுநன் மனத்தா லண்ணலான் வயிற்றின் வருமவர் நந்திசங் கரன் மே, லுய்தர வுபதே சஞ்செயுங் குரவ னுண்மைசேர் சீடனின் னோர் க, ளெய்துநல் லிடத்தி னிடைசெலு மவர்க ளியற்றுபுண் ணியமு ம்வீ ணுமால். (எ)

முற்றிழை கணவ னுடன்றனி யிடத்தின் முறுவல்செய் வதுத னைக் காண்போன், மற்றவர்க் கிடையூ றியற்றுவோ னீரின் வளர்ந் திடு செளுகமா குவனே, யுற்றிருந் தழல்வ னெனவிவை யெடுத்தே யுரைத்துநீ வயித்திய நாத, நற்றலந் தன்னிற் றும்பிரபரணி நன்னெ டுந் தீரநண் ணிடுநாள். (அ)

அவணுறை கங்கா தரன்றனைப் பசிரோ யகலநீ பிடித்திடப் போவாய், சிவனுரு வான மறையவ னனைய தீர்த்தநீர்ப் புரோட்ச ணஞ் செய்வா, னிவளுட னீயும் புலியுரு வொழித்தே யெய்துவை நின்னுல கென்றே, தவமிகும் வயித்திய நாதநற் றலத்தைச் சார்ந்த னன் றன்பவர் தீர்க்க. (ள)

தெண்டிரை சுருட்டிச் சுழித்தெழுந் தோடித் திகழ்ந்திடு கங்கைமா நதியி, னெண்டுறை யதனி னொடு பெண்ணி னுருவமை யுழுவைய தாகித், தண்டகா ரணியந் தனிற்பல ஞான்று சஞ்சரித் த தன்பினஞ் சிறைநல், வண்டுறை பொழில்சூழ் வயித்திய நாத மாநகர்ச் சேர்ந்தனன் மாதோ. (அ)

உறைந்திடும் வயித்திய நாதனுக் கீச திசைதனி லொருகுரோசத்தி, னிறைந்திடு மனைய தீர்த்ததீ ரத்தி னியதிசெய் மறையவன் றன்னை, யறைந்திழுத் தருந்தப் போந்தனன் பார்த்தே யருமறை யவன்புரோட் சணஞ்செய், நிறைந்திடு துளிபட் டதுபுலி யுருவ மிரண்டும்விட் டொழிந்திடக் கண்டான். (கூ)

தாங்கரும் புகழ்சேர் தாம்பிர பரணித் தண்புனல் பட்டவக் கணத்தின், வேங்கையா யுறுமப் பாவமு நீங்கி வேதியன் விரைகமழ் நறிய, பூங்கழல் பணிந்து விமானமே லேறிப் பொற்புறுந் தன்னுல கணைந்தா, னீங்கிது நிகழ்ந்தே யிருத்தலால் வித்தியா தரனெழிற் றீர்த்தமென் றனர்முன். (க0)

வேறு.

பத்தி பூருவ மாகவே பாரினிற் பிறந்தோர்
வித்தி யாதர தீர்த்தநீர் மூழ்கிடின் விளங்கும்
புத்தி ரன்றனைப் பெறுவதும் புகழ்பெறு வதுமோ
முத்தி வீடுமே முழுவதும் பெறுகுவர் மாதோ. (கக)

வேறு.

கலந்துநண் பிலகு பாரிதன் னுடனே கரைபொரு கடல்புடை சூழ்ந்த, நிலந்தனிற் சுதரி சனனெடுஞ் சாப நீங்கிய சருக்கமீண் டுரைத்தேன், வலம்படைத் திருந்த விசுவதே வர்கணன் மகிழ்ச்சி

பூத் தெழில்வர நல்கப், பலந்தனை யளிக்கும் வில்வதீர்த் தத்தின் மான்மியம் பகர்குவன் மன்னே. (௧௨)

சுதரிசனன்சாபநீங்குசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௫௧0.

---

## வில்வதீர்த்தச்சருக்கம்.

சொல்லரும் புகழ்சேர் சூதமா முனிவன் றொடுகட லுடுத்ததொல் லுலகி, னல்வள மிகுந்த நைமிசா ரணிய நலந்தர மகம்புரிந் திருந்த, செல்வமா தவர்கள் செவிக்கினி தான தெள்ளமு தம்பொழிந் தெனச்சூழ், வில்வதீர்த் தத்தின் மகிமையை யெடுத்து விரித்துரை செய்தன்மே யினனால். (௧)

வேறு.

அற்புத வயித்திய நாத வண்ணரு
னுற்றபூங் கோயில்சூ ழுத்த ரந்தனிற்
பொற்புறும் புண்ணிய திரட்சி யாமென
விற்கிடை மூன்றினில் வில்வ தீர்த்தமே. (௨)

வியன்புக ழிருடியாம் விசுவ தேவர்நன்
னயம்பெறுந் தெய்வமிந் திரனற் பாலகன்
பயங்கர வுருவுள தண்ட பாணியே
யுயர்ந்திடும் விருக்கமேல் வில்வ முண்மையே. (௩)

சொல்லிய விவர்தமை வணங்கித் தூயதாம்
வில்வமூ லந்தனி லன்னம் மேதகு
நல்லகோ தானமே நயந்து செய்திடிற்
பல்கிடு மொன்றினுக் கனந்த மாம்பலன். (௪)

இசைதரும் விசுவதே வர்களி லங்குமெண்
டிசைதொறும் வில்வம்வைத் திடையிற் செவ்விதாய்
நசையுறுந் தீர்த்தமொன் றியற்றி நாதனை
யசைவறப் பூசைசெய் தனர னந்தநாள். (ரு)

ஆதலா லதன்பெயர் வில்வ தீர்த்தமா
மோதநீர் சூழ்ந்திடு முலகில் வாழ்பவர்
காதலால் வலஞ்செயிற் கயிலை மால்வரை
மேதகு விமானமே லேறி மேவுவார். (சா)

தெளிந்தசித் தாமுத தீர்த்த மூழ்கியே
பளிங்கெனத் திருந்திய மனத்திற் பண்புட
னளிந்திடு மனையவ ரையன் பூசையை
விளிந்திடா திலகுநல் வில்வ மேந்தியே. (எ)

நித்தியஞ் செய்துநன் னியம மாகவே
சித்தியாம் வில்வநற் றீர்த்த தீரமேன்
மத்தியா னந்தனில் வந்த ருந்தவ
முத்திசேர்ந் திடமுயன் றியற்றி னின்றனர். (அ)

சிலபகல் கழிந்தபின் றேவ நாயகன்
பலனுறும் வரந்தனைப் பரிந்த ளித்தன
னிலகிய தீர்த்தநீர்க் கெழில்வ ரங்கொடுத்
துலகின்மே லாம்பத முற்றி ருந்தனர். (கூ)

அழகிய வில்வம்வாய்ந் தருகி னின்றிடு
நிழறனின் மூழ்கினர் நெடிய கங்கைநீர்
சுழன்மிக வருபிர யாகை தோய்பல
னுழல்வினை யொழிந்திடப் பெறுவ ருண்மையே. (கO)

இத்தகு தீர்த்தநீ ராட்டி யீசனை
மொய்த்திடும் வில்வமுக் கிளையி னுனிதம்
புத்திபூ ருவமதாய்ப் பூசை செய்தவர்
சுத்தரா குவர்வினைத் தொடர்ச்சி நீங்கியே. (௪௧)

வளர்ந்திடு மாநிலந் தன்னில் வண்புகழ்
விளங்கிடு வில்வதீர்த் தத்து மான்மியங்
கிளந்தனன் கௌதம தீர்த்த மேன்மைமே
லுளந்தனின் மகிழ்பெற வுரைத்தல் செய்குவேன். (௪௨)

வில்வதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ- திருவிருத்தம் - ௫௨௨.

## கௌதமதீர்த்தச்சருக்கம்.

பொங்கிடு மிராம தீர்த்தப் புறந்தனிற் புகழ்சி றந்த
வங்கியங் கடவு டிக்கி லேந்துவிற் கிடையின் மீது
சங்கைமா நதியிற் றூய கௌதம தீர்த்த மன்னுந்
தங்கிய பவமாங் காடு தனக்கதின் றீப்போன் மன்னோ. (௧)

சேருநல் லிருடி மேலாங் கௌதமன் றிகழுந் தெய்வ
மாருதஞ் சோமன் மன்னும் பாலகன் வளர்வி ருக்கஞ்
சாருமா மிரமம் மூலந் தனிற்றில தானஞ் செய்வோர்
பாருறும் போகந் துய்த்துப் பரகதி பெறுவ ரம்மா. (௨)

கைதரும் பலனு முள்ள கவுதம தீர்த்தச் சூழற்
கொய்யுளைத் துரகங் கைம்மாக் குளிர்பசும் பொன்னின் குப்பை
வைதிக மறையோ ருள்ள மகிழ்ந்திடத் தானஞ் செய்வோ
ரெய்தரும் போகம் யாவு மெளிதினிற் பெறுவர் மாதோ. (௩)

எண்ணிடு மிடப மாத மெய்தபூ ருவநற் பக்க
நண்ணுபஞ் சமியில் விண்ணோர் நயந்திடு மமுதம் போன்று
கண்ணினுக் கினிய தான கவுதம தீர்த்தந் தோய்வோர்
மண்ணுல காள்வர் நீங்கா மதுநுகர் பாவம் போமால். (ச)

வேறு.

கல்விசேர் கவுதமன் றீர்த்த மான்மிய
நல்வள முரைத்தன னயமி கும்பெருஞ்
செல்வம்வாழ்ந் திடத்தருங் கபில தீர்த்தமேற்
சொல்லுவன் றூயசொற் பொருள்வி ளங்கவே. (ரு)

கௌதமதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-ருஉஎ.

---

## கபிலதீர்த்தச்சருக்கம்.

கயல்விழி யுமைக்கோர் பாகங் கனிந்தருள் வயித்திய நாதன்
புயன்மிக வுறைபூங் கோயிற் பாங்கரி னிருதி பாகத்
தியல்பெறு குரோசப் பாதி யெல்லையிற் கபில தீர்த்தம்
வியனுறு மமுதம் போன்று விழைந்திட விளங்கு மன்றே. (க)

வேறு.

தகுதிசே ரிருடி கபிலனற் றெய்வஞ் சங்கர னிரட்சக னென்
போன், மிகுபுகழ் நிறைந்து விளங்குசண் டீசன் விருக்கமா மலகநீ
ழலிற்கீழ்ப், பகுதிபெற் றவர்தாள் வணங்கியம் முனிவன் பண்புறு
மந்திரஞ் செபித்தோர், புகுபெரும் பாவ நீங்கிமே லான புண்ணிய
போகமும் பெறுவார். (உ)

அலகிடின் மீன மாதமீ தபர பக்கவட் டமிதனி லணைய, நல
மிகு தீர்த்தந் தோய்ந்துகோ தான நறுமணங் சமழத்தி யயனச், குல
மறை யவர்கட் களித்திடி லொன்றுக் கனந்தமாம் பலன்கொடுப் பே
னென், றுலகினிற் கொடாதோன் சுவானமாய்ப் பிறப்ப னொழி
குவன் முழுகினப் பாவம். (௩)

பெருமைசேர் கபில முனிவரன் வளர்வெண் பிறையணி யண்
ணலைத் துதிசெய், திருநிலத் தெவர்க்கும் விழைந்தன நல்கு மெழில்
வரம் வாங்கின னதனா, லருமகப் பேறில் லாதவ ரணைய தீர்த்தமாங்
குரைசெயுந் தினத்திற், கருதிடு முதய காலமூழ் கிடினற் கல்விசேர்
புதல்வனைப் பெறுவார். (௪)

வேறு.

எந்தைதான் மறவா தேத்தி யெண்ணருந் தவம்பு ரிந்து
சிந்தைகூர் கபிலன் றீர்த்தச் சிறப்புரை செய்தே னிப்பால்
வந்துமூழ் கினர்தம் பாவந் தீர்த்துநன் மகிழ்ச்சி நல்குஞ்
சுந்தரச் சோம தீர்த்த மகிமையைச் சொல்வே னம்மா. (௫)

கபிலதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௫௩௨.

---

## சோமதீர்த்தச்சருக்கம்.

இந்துவாழ் வேணி வயித்திய நாதற் கெழின்மிகு மருத்துவன்
றிசையி, லைந்துவிற் கிடையிற் சோமநற் றீர்த்த மமுதமா மெனத்திக
ழ்ந் தொளிரும், வந்ததின் முழுகு வோர்தமை யொழிந்து மன்னுபா
தகமகன் றேடு, முந்தைநாட் சித்தா முதப்புன றேய்ந்து முழுமதி
தவம்புரிந் திருந்தான். (௧)

மன்னிய குருவின் மனைவியைப் புணர்ந்து வரும்பவந் தீர்ந்திட வன்றோ, னன்னெடுந் தீர்த்தக் கரைதனின் மூன்று வருடநற் றவம் புரிந் திருந்த, பின்னெழுந் தருளி வயித்திய நாதன் பேறளித் தரு ளினன் பிரிந்து, துன்னுபா தகங்க டீர்ந்தனன் மேலாந் தூயநன் மகிழ்ச்சிபூத் தனனே. (உ)

தொல்லுல கதனின் மூழ்குந ரிட்ட காமியம் பெற்றிடச் சூழு, நல்வரங் கொடுத்துத் தன்னுல கதனை நண்ணின னற்றைநாண் முத லா, வெல்லைகண் டதன்பேர் சோமநற் றீர்த்த மென்றுரைத் தனரி தற் கம்மா, வல்லறீ ரிருடி வருபரத் துவாச னவிர்மதி தெய்வமா குவனே. (ங)

பாலக னிரிட னெனுமுனி வரன்சூழ் பலன்றரும் விருக்கமந் தார, மேலதா மிடப மாதமுற் பக்கம் விசாகநாண் முழுகிடிற் பிதா வை, யேலவார் குழனல் லன்னையைக் கொன்ற பாவமற் றெனைய பா தகமு, மோலமிட் டோடு மிந்திர னயன்மா வுலகம்வீற் றிருந் துவீ றுறைவார். (ச)

வேறு.

மறையவர்க் கன்ன தான மன்னுகோ தானந் தீர்த்தத்
துறையகத் திருந்து தீரத் தோங்கிமேல் வளர்ந்து நின்ற
நறைகமழ் விருக்க நீழ னயந்துசெய் தனர்கள் பார்மே
னிறைபெருஞ் செல்வம் பெற்று நீடூழி காலம் வாழ்வார். (ரு)

நன்மைசேர் பலன ளித்து நவிலரு மகிமை பெற்று
மன்னிய சோம தீர்த்த மான்மிய முரைத்தே னிப்பாற்
பன்னரும் புகழ்ப டைத்த பராசர தீர்த்த மேன்மை
தன்னையிவ் வுலகிற் கேட்போர் தமக்கருள் பெருகச் சொல்வேன்.()

சோமதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-ருஙஅ.

## பராசரதீர்த்தச்சருக்கம்.

அங்கசந் தான தீர்த்த மடுத்திடு தென்பான் மாது
பங்கினன் றன்னை யேத்தும் பராசரன் றீர்த்த மன்னு
மங்கள ஞான தீர்த்த மாகமுன் மற்றம் மேலோன்
பொங்கவே செய்த வாற்முற் பொற்புறு மப்பேர் பூணும். (க)

வேறு.

பகர்ந்திடு மிருடி பராசரன் றெய்வம் பண்புசேர் சண்டிநா யகன்சீர், புகழ்ந்திட வரிய விரட்சகன் வருணன் பொலிவுறும் விருக்கமா மிரமா, மகந்தனி லன்பு கூர்ந்திவர் மலர்ச்சே வடிபணிந் தாமிர நீழன், மகம்புரி பலனும் வெண்ணிறக் கோவை மறையவர்க் களித்திடின் மாதோ. (உ)

புண்ணிய தீர்த்தம் படிந்துநீ றணிந்து பொற்புறு கந்தவேண் மனுவை, புண்ணிறை யன்பாற் செபித்திடி லொன்றுக் கனந்தமாம் பலன்களுண் டாகு, மண்மிசை மன்னர் திரவியங் குரவர் மனைத்திர வியமப கரிப்போ, னண்ணிடும் வேதம் விற்பவன் முதலோர் மூழ்கினு நலன்பெறு குவரால். (ங)

வினைத்தவக் கணத்திற் பாவகோ டிகளை நீங்குவர் நவநிதி முதலா, மனைத்தையும் பெறுவ ரட்டசித் திகளு மவர்தமக் கேவல்கேட் டிருக்கும், தனைத்தகுந் தெய்வந் தேடினுங் காணுச் சங்கர னுருவ ரெண்ணி, யினைத்தென வளவாப் பராசர தீர்த்த மதினொரு பொழுதுமூழ் கினர்தாம். (ச)

ஐப்பசி மாதச் சுக்கில பக்கத் தமர்ந்திடு தசமியி லனைய
பொற்புறு தீர்த்த மூழ்கினர் பதினு யிரமரும் புரவியா கஞ்செய்
நற்பலன் பெறுவ ரன்னது மன்றி நவிலருங் கயிலைமால் வரையைக்
கற்பகா லத்து நீங்கிடா திருந்து காதல்கூ ரின்பமுற் றிடுவார். (ரு)

வேறு.

வார்கட லுலகினின் மகிமை பெற்றெழிற்
பேருறு பராசரப் பெருஞ்சி றப்பெடுத்
தேர்பெற வுரைத்தன னிராம தீர்த்தநற்
சீர்பெறு சருக்கமேற் றிகழக் கூறுவேன். (௬)

பராசரதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவித்தம்-௫௪௪.

---

## இராமதீர்த்தச்சருக்கம்.

அலகில்சீர் வயித்திய நாத வண்ணல்வீற் றிருக்குந் தானத்
திலகிடு நிருதி பாகத் தெய்தும்விற் கிடையோர் மூன்றி
னலமிகு மிராம தீர்த்த நவிலும்வா னமுதம் வந்து
நிலமிசை யிருந்த தென்ன நிறைந்துதான் விளங்கு மாதோ. (௧)

மத்தநாண் மலர்சேர் வேணி வயித்திய நாதன் மன்னு
முத்திமா நகரின் மேன்மை முறைமையை மறையோர் கூறச்
சித்தர்தா முணர்ந்து வாசஞ் செய்தகா ரணத்தான் முன்ன
ரத்திருத் தீர்த்தஞ் சித்த தீர்த்தம தாயிற் றம்மா. (௨)

வேறு.

இனையவற் புதமாஞ் சித்ததீர்த் தத்திற் கிராமதீர்த் தப்பெயர் வரவு, தனையுரைக் குவன்முன் றசரத னரிமாத் தாங்குபொற் றவி சின்வீற் றிருந்து, புனைமணி மௌலி யரசர்வந் திறைஞ்சப் புகழ் படைத் தயோத்திமா நகரி, னனையென வருள்கூர்ந் துலகளித் தன ேனா றறுபதி னுயிரம் வருடம். (௩)

வேறு.

திங்கண்மும் மாரி பெய்யத் திருநிலம் புரந்து செங்கோல்
பொங்கிய மகிழ்ச்சி வாய்ந்து புரவலன் செலுத்து நாளி
னங்கண்மா நிலம ளிக்கு மரசிளங் குமர னின்றித்
துங்கநல் வேள்வி வேதஞ் சொல்லுமந் திரத்தாற் செய்தான். (ச)

புத்திரன் றன்னை வேண்டிப் புரவலன் செயும்யா கத்தி
லுத்தம மான தூய வோதனம் வந்த வாற்றாற்
சித்தநன் மகிழ்ச்சி கூர்ந்து தெரிவைமூ வருக்கு மீந்தான்
பத்தினி மார்க ணான்கு புதல்வரைப் பயந்தா ரன்றே. (ரு)

அரசுசெய் யுரிமை வாய்ந்த வனையரின் மூத்தோன் சேடன்
பரவுபாற் கடற்று யின்ற பைந்துழாய் முகுந்தன் வந்து
தரணியிற் பிறந்தான் றேவர் தந்துய ரகற்ற வன்னோற்
குரமிகு மிராம னென்றே யுலகெலா முரைப்பச் செய்தான். (சு)

ஆங்கவ னிளையர் தம்மோ டாயுதப் பயிற்சி யானை
யோங்கிய குதிரை யேற்ற முரமிகு மிரத மூரும்
பாங்குறும் வித்தை வெல்ல வல்லமல் லுயுத்தம் பார்மே
லீங்கிவற் கிணையே தில்லை யென்றிடக் கற்று னம்மா. (எ)

விறன்மிகும் விசுவா மித்திரன் செய்திடும் வேள்வி தன்னை
நிறைவுறச் செய்து நீண்ட கல்லுருச் சாப நீங்கி
நறைகமழ் குழல்சேர் மாது தன்மனை நண்ணல் காட்டி
முறைமையான் முனிவன் பின்போய் மிதிலைமூ தூரைச் சேர்ந்தான்.

வளமிகு மிதிலை யென்னு மாநகர்ப் புரக்கு மன்ன
னளவில்சீர் மகிமை பெற்ற வில்லினை யரசர் மைந்தர்
தளர்வுறு தெடுத்து நாணேற் றுநர்தமக் குரிய ளின்ன
விளநலம் பெற்ற மாதென் றிசைபெற வுரைத்தி ருந்தான். (கூ)

இனமுறுஞ் சிலைகு னித்தோர்க் குரியளென் றிசைத்த வாற்முற்
கனமிகு தனுவைக் கையி லெடுத்துநா ணேற்றக் காணு
முனமது முறிந்த வாற்முன் முழுதுல காளும் வாய்மைச்
சனகன்வண் புதல்வி தன்னைத் தகும்புக ழிராமற் கீந்தான். (கo)

எழினலம் படைத்த சீதை தன்னுட னிராமன் போதும்
வழிதனிற் பரசு ராமன் வந்துவின் முறித்த வெற்றி
பழுதெனப் பகர்ந்தென் வில்லைப் படிமிசை வளைத்தி யேனீ
முழுதுவில் லாளி யென்றே மொழியவக் கணங்கு னித்தான். (கக)

மன்னவன் றனது மைந்தர் நால்வரின் வேத வாய்மை
முன்னவன் றனக்குச் செம்பொன் முடிதரித் துலக ளிப்பத்
தன்னுளத் தெண்ணும் போது தயங்குகை கேசி வந்தே
யென்னினைந் தனையென் மைந்தற் கெழின்முடி சூட்டு கென்முள்.()

வரமுனங் கொடுத்த வாற்முன் மன்னவன் மறுத்தல் செய்யான்
விரவுபே ரின்னல் கூர்ந்தான் விளைந்தவா றறிந்து முன்ன
மரவணைத் துயின்ருே னன்பு மிகுமிலக் குமணன் சீதை
தரைவரப் பன்னுட் போந்தான் றண்டகா ரணியத் தம்மா. (கந)

ஆயிடை யுபய காவே ரியினடு விருந்தே யம்மா
வேயும்வல் வினைதீர்த் தாளு மிறைவன்பூங் கோயிற் பாங்கர்க்
காயுவெங் சோபச் செங்க ணிருதிதன் றிசையிற் சங்கை
தோயுமப் பலன ளிக்குந் தீர்த்தஞ்சூழ்ந் திருத்தல் கண்டான். (கச)

வேறு.

மன்பதை புரக்கு மிராமனுத் தமசல் வளமிகு தீர்த்தநீ ராடி,
மின்புனை வேணி வயித்திய நாதன் விரைமலர்த் தாளிணை வணங்கித்,
தன்குலப் பிதிர்க டருப்பணஞ் செய்து தன்னுள மகிழ்ச்சிகூர்ந் த

னன்சூழ், துன்பநீங் குவர்பே ரின்பமும் பெறுவார் தூயநீ ராடி னர் மாதோ. (கரு)

இலங்கிடு மிருடி சுதீட்சணன் றெய்வ மிராமன்மற் றிரட்சக னென்போன், வலங்கொள்சீ ரிலக்கு மணன்வளர் விருக்கம் வன்னி யம் மூலமீ தினினன், னலம்பெறு காரான் வருடைகுங் குமங்கோ ரோசனை ததிநவ நீதந், திலங்கணி மறையோர் செய்கையிற் றுனஞ் செயிற்பல னென்றுகோ டியதாம். (கசு)

வேறு.

அன்னதா லுலகினி லிராம தீர்த்தமாம்
பன்னரும் புகழ்ப்பெயர் படைத்த தோர்பெற
வின்னுமித் தலந்தனி லிராமன் செய்திடு
நன்னெறி சடாயுமான் மியந விற்றுமேல். (களஎ)

இலகுசீ ரிராம தீர்த்தத்தின் மேன்மைஈன்
னலநவின் றனனினி நன்னெ றிக்குணம்
விலகிய கொடியனுந் துசில வேதியன்
பலமுறு சருக்கநற் பண்பு கூறுவேன். (கஅ)

இராமதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-ருசுஉ.

---

## துசிலச்சருக்கம்.

பண்டரு மரம்பையர் நடம்பயில் பசும்பொ
னண்டருல கத்தினு மனந்தல் வளஞ்சூழ்
தண்டலை யுமெத்திசை தழைந்தெழில் கொழிக்குங்
குண்டின புரப்பெருமை கூறவரி தாமால். (க)

வேறு.

ஒண்டுறைச் சுதைசெய்வாய் மதகி னூடுபோய்
மண்டுதீம் புனறவழ்ந் தேறி வால்வளை
தண்டர ளமுழுமிர்த் திலகுந் தண்பணைக்
குண்டின புரத்தில்வாழ் மறைக்கு லத்தினன். (உ)

பழிபடு சிந்தனை யொழிந்த பண்பினன்
வழிபடு பன்னெறி யொழுகும் வாய்மையா
னெழின்மிகு மெக்கிய சீல னென்றுதா
மொழிகுவ ரனையவன் முறைமை யாம்பெயர். (ங)

எண்ணரும் புகழ்நிறைந் திலகு மன்னவன்
பண்ணிய தவப்பலன் பலித்த தாமென
நண்ணினன் மனைவியர் நலத்தி னுள்பெயர்
புண்ணிய வதியெனப் புகல்வர் யாவரும். (ச)

உத்தம குணத்தின ளுமைமயி டத்துநற்
பத்தியுள் ளவள்பதி விரதை கேளிர்கண்
மித்திர ராகமே தகுந லத்தினள்
புத்திரன் றனைச்சிறு பொழுதி னீன்றனள். (ரு)

தொட்டணைத் தன்னவன் றனக்குச் சூழ்பெய
ரிட்டனர் துசீலனென் றிளமை யெய்தினன்
விட்டுயிர் நீங்கிமே லுலக மெய்தினர்
திட்டமா முத்தரக் கிரியை செய்திலன். (சு)

ஓவிய ரெழுதரு முருவி னுளொளிர்
காவியங் கண்ணினள் வயிற்றிற் காய்கொடும்
பாவியந் துதித்தன னென்று பாருளோ
ராவிசோர்ந் திடத்துடித் தழுதி ரங்கினர். (எ)

காளையாம் பருவம்வந் தெய்தக் காமனல்
வேளைபார்த் தாசுகம் விடமெ லிந்தனன்
வாளைநேர் விழிப்பொது மகளிர் வேய்மிகர்
தோளையே விழைந்தனன் றுசிலன் சாலநாள். (அ)

பொருடனக் கின்மையாற் புகுந்தி ராவினிற்
றிருடர்போ னீள்கடைத் தெருவி னிற்றனந்
தருகிறே னென்றுதாம் பூல மாதியாய்ப்
பெருகிடும் யாவையும் பேசி வாங்கியே. (கூ)

ஏவண விழியினுட் கிந்து மற்றைநா
ளாவணத் தோன்பொரு ளடுத்துக் கேட்டபின்
ருவணக் குரங்கெனத் தாண்டித் தந்ததுண்
டோவணக் கஞ்செயா துரைத்தி யென்றனன். (கo)

இல்லையான் வாங்கின துண்டெ னிற்கணக்
கொல்லைநீ காட்டுதி யுறுதி யாகவே
யெல்லைகண் டென்கைநல் லெழுத்துங் காட்டிட
வல்லையேற் சொல்லென வழக்கு ரைத்தனன். (கக)

கொடுத்தன னென்றுபொய் சொல்லுங் கொள்கைதா
னடுக்குமோ வாணிகஞ் செயும வற்கிது
கெடுத்திடு நினைவென வறியக் கேடினி
விடுத்திடு வெனக்கொடு மொழிவி ளம்பினுன். (கஉ)

இல்லறம் புரிந்திடு மியல்பி னுருறை
வல்லரண் புகும்வழி பார்த்து மற்றைநா
ளல்லிடைக் களவுசெய் தளித்து வேசியைப்
புல்லியே பற்பல பொழுது போக்கினுன். (கூ)

மன்னுபுண் ணியதினம் வந்த காலையி
லிந்நதி படிந்தொரு நாள தாயினுஞ்
சென்மமத் தியிற்செபஞ் செய்தி ருந்திலன்
புன்மதி யினரைநண் புற்று நின்றனன். (கச)

அடுத்தவர் வறுமைகண் டிரங்கி யன்புடன்
கொடுத்திடு மவர்தமை யிகழ்ச்சி கூறினன்
கெடுத்தனன் பலரையா சார கினன்வா
தெடுத்துரைத் தந்தணர்க் கிடுக்கண் செய்தனன். (க௫)

வேறு.

கன்மனக் கொடியன் காலங் கழித்திடு நாளிற் றீரா
வன்மைசேர் குமர கண்ட வலிப்பெனும் வியாதி வந்து
துன்னிய ததனுற் றேசந் தொறும்புகுந் துயிர்த்து மாழ்கி
யின்னதென் றெண்ணிக் காணு விடந்தொறும் விழுந்து நொந்தான்.

உபத்திர வசத்தாற் றேக மொடுங்கியே மெலிந்து வாடிக்
கபத்தொடு கூடித் துன்பக் கடலிடை முழுகிப் பன்னு
ளிபப்பரு வனத்தி னெல்லை கடந்துபோய் வயித்திய நாத
சுபத்தலத் திராம தீர்த்தத் தாயதீ ரத்தைச் சார்ந்தான். (க௭)

உற்றது மீன மாத வுத்தர பருவஞ் சேர்ந்த
நற்றின மதின டுங்கி விழுந்தன னனைய தீர்த்தப்
பொற்புறு முன்னர்ப் போழ்ந்த கரையுதை பட்டி டிந்த
தற்புதப் புனலிற் பின்ன ரவனுட னனைய வீழ்ந்தான். (க௮)

வல்வினைப் பயனுல் வந்த வலிப்பெனும் வியாதி நீங்கி
யொல்லையி னமுத முண்டோ ரொளிமிகு முடலின் வாய்ந்த
நல்லெழில் கொழிப்பக் கண்டா னுன்மறை யவர்கள் வாக்கா
லெல்லைகா ணரிய தீர்த்த மகிமைகேட் டின்ப முற்றுன். (க௯)

அளிந்திடு மனத்த னான துசிலனுக் கற்றை ஞான்று
தெளிந்திடு ஞான சித்தங் கிடைத்தலாற் றிருந்தி வாய்ந்த
பளிங்குவெண் டிரைகொ ழித்த பரவைசூ ழுலக மீதிற்
குளிர்ந்திடு சித்த தீர்த்த மெனப்பெயர் கூறு கின்றார். (உ௦)

வேறு.

பகர்பதி னாயிரம் வேள்வி செய்பல
னிகமதி னிலங்கிடு மிராம தீர்த்தநீ
ரகமகிழ்ந் தாடினர் பெறுவ ரன்றியும்
புகழ்சிவ லோகமேற் பொருந்தி மன்னுவார். (உக)

நலவிய மறைக்குலத் துதித்துக் கூறருங்
கலதிசூழ் துசிலவே தியன்செய் காதையி
னலர்புக ழுரைத்தன னாதி காவிரிப்
பலமிகு சருக்கமேற் பகுத்துக் கூறுவேன். (உஉ)

துசிலச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ருஅச.

---

## ஆதிகாவிரிச்சருக்கம்.

பொற்புறு வயித்திய நாத புனிதனுக் கிலகு மேல்பால்
விற்கிடை யிரண்டின் மன்னும் விளங்குகந் தருவ தீர்த்த
முற்பக ரிருடி வாய்மை மொழிசொல்பார்க் கவன்சூழ் தெய்வம்
பற்பலர் புகழ்கோ பால னிரட்சக னிருதி பார்மேல். (க)

தழைந்திடும் விருக்கம் வாய்ந்த சண்பகந் தருநல் வாச
மிழைந்தசந் தனந் ரந்த மிலகுகுங் குமம டுத்து
விழைந்திடு மனத்தி னோடு விருக்கமூ லத்திற் றனங்
குழைந்துதான் செய்யி னென்று கோடிய தாகப் பல்கும். (உ)

துதிபெறு மேட மாத சுக்கில பக்கந் தன்னில்
வதிதிரு திகையிற் சுக்கிர வாரமுஞ் சேரு ஞான்றின்
விதியுட னனைய தீர்த்த முழுகினர் வேண்டும் போகஞ்
சதுர்பெறப் பெறுவ ரையன் சரணமும் பெறுவர் சாற்றின். (௩)

அடுத்திடுந் துலாமா தாந்த மாந்தின மூன்றி னுஞ்சீர்
மடுத்திடுந் தீர்த்த மூழ்கின் மன்னிய வயுத மாண்டு
தொடுத்திடுங் கங்கை தோய்ந்த தொகும்பலன் பெறுவ ரன்றிக்
கடுத்தனை யுண்ட நாதன் கைலைமால் வரைமேல் வாழ்வார். (௪)

ஆரணம் புகழ்ந்து போற்று மனையநற் றீர்த்தந் தன்னைத்
தாரணி தன்னி லாதி காவிரி யென்பர் தக்கோர்
காரணங் கூறிற் கும்ப முனிவரன் கையி லேந்து
மோரணி கொண்டு வாய்ந்த குண்டிகை யினைமுன் வைத்தான். (௫)

நண்ணிடு மவணிற் றீர்த்த நாயகி யாங்கா வேரி
யுண்ணிறை காதல் கூர்ந்தே யொருதின மகிழ்ந்து வாசம்
பண்ணினன் மற்றை ஞான்று பதிந்தகுண் டிகையெ டுத்துப்
புண்ணிய முனிவன் சைய மால்வரைச் சாரல் போந்தான். (௬)

வேறு.

கோதி லாப்புகழ்க் கும்பமா முனிவனால் விளங்கு
மாதி காவிரிச் சருக்கமீண் டுரைத்தன னன்னோ
னோது சாபம்வந் துற்றகந் தருவர்கள் சாபத்
தீது நீங்கிடு சருக்கமேற் செப்புவன் மாதோ. (௭)

ஆதிகாவிரிச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௫கக.

---

## கந்தருவர்சாபநீங்குசருக்கம்.

அன்னமா முனிவன் பின்ன ரநேகநல் வளந்த ழைந்து
மன்னுமவ் வரையி லையன் மலரடி வணங்கிப் பூசை
தன்னையன் புருகச் செய்தான் றமனிய வுலகி னின்று
மின்னிடை மடவார் சூழ விளங்குகந் தருவர் வந்தார். (க)

கருத்தமை காத லோடு கடமுனி வரன யந்து
மிருத்திகை யிலிங்க பூசை செய்வது கண்டார் வீணு
யிருப்பதே யன்றி மண்ணி னிலிங்கமேற் றெய்வ முண்டோ
வுருச்குறைந் ததுநி தஞ்செய் துனக்கென நகைத்தா ரம்மா. (உ)

அவஞ்செய்து பொழுது போக்கு கின்றனை யென்றன் னோர்கள்
சிவன்றனை யிகழக் கண்கள் சிவந்தன கோப வெந்தீ
நிவந்தெழு பொறிகள் சிந்த நின்றிடு மவரை நோக்கித்
தவம்பெறு முனிவன் வாக்காற் றனித்தனி சபித்தான் மாதோ. (ங)

உத்தம வெழில்கொ ழிக்கு முருக்கொள்சுந் தரன்சிறந்த
சித்திர வருணன் மேன்மை திகழ்மனோ காரி யன்றிச்
சுத்தமாம் வனப்பு வாய்ந்த சுவற்சகன் றாய வர்க்குப்
புத்தமு தனைய சித்தி ராதனென் புகழ்ப டைத்தோன். (ச)

ஈங்கிவ ரைவர் தம்மை யேகநேத் திரம்வி கர்ண
மூங்கைகான் முடஞ்ச ரீர முழுவதுங் கராள மாகித்
தாங்கருந் துயரின் மூழ்கக் கடவதென் றுரைத்தான் சாப
மேங்கியம் முனிவன் பாத மிறைஞ்சியே கேட்க லுற்றார். (ரு)

அழகினைப் பெற்ற தன்றி யறிவினைப் பெறுத யாங்க
ளுழலுமித் துயர நீங்க வுனதரு ளலது காணேந்
தழல்விழி யையன் செய்ய தாமரைத் தாளின் வாய்ந்த
நிழலினைப் பிரியா நெஞ்ச நிறைந்திடு முனிவ வென்றார். (சு)

என்றவ ருரைத்த லோடு மிரங்கிய வுளத்த னாகிக்
கன்றுழை யேந்து நாதன் கருணைசெய் தளித்த லால்யான்
றென்றிசைப் போதும் போது திகழ்ந்திடும் வயித்திய நாத
வென்றிசூழ் தலத்தின் முன்னம் விருப்பமுற் றிருந்தே னோர்நாள்.

அப்பெருந் தலத்தின் மேல்பா லற்புத மாகி யொன்றிற்
கொப்பிட லரிதா யாதி காவிரி யொளிரு நீவி
ரிப்பொழு தெய்தி மூழ்கி லெய்துமிச் சாப நீங்குஞ்
செப்பருந் திவ்ய தேகந் திருந்திடப் பெறுவி ரென்றான். (அ)

வரமுனி வரனை யேத்தி வயித்திய நாதஞ் சார்ந்து
சுரநதி யதின்வி ளங்கித் தூயநாந் தீர்த்த மூழ்கி
யுரமிகு பாவ நீங்கி யொளிசெய்நல் லுருவம் பெற்றார்
பரவுகந் தருவ தீர்த்த மென்றது முதற்ப கர்ந்தார். (கூ)

வேறு.

தெய்வ நாயகன் வயித்திய நாதன் செந்தளி ரடிபணிந் தேத்தி, யைவ ருந்துணை வியருட னலங்கு பொன்னுல கிலின்னமு தென்னத், துய்ய நல்லிசை பயின்றகந் தருவர்கள் சூழ்ந்த தம்முல கின்கண், ணெய்தி யின்பமுற் றெய்தரி தான பேரின்ப மேற்பெறப் பெற்றார். (க0)

வேறு.

கந்தருவ தீர்த்தமொரு பொழுது மூழ்கிற் கண்ணிழந்தோர் செவிடர்கைகான் முடம தானோர், சுந்தரமாந் தநுப்பெறுவர் செங்கோல் வேந்தர் துணைபிரியா நண்புசெய்யப் பெறுவ ரன்றிச், செந்திருமங் களம்பெறுவர் கல்வி வாய்ந்து திகழ்ந்திடுபுத் திரன்றன்னைப் பெறுவர் சீர்சா, லந்திமதி யணிந்தபிரான் கயிலை யென்னு மரியமால் வரையின்பம் பெறுவ ரன்றே. (கக)

வேறு.

பிறங்குதன் னுலகந் தன்னிற் பெருகெழின் மேன்மை பெற்றுச்
சிறந்தகந் தருவர் சாபந் தீர்ந்தது சொன்னே னிப்பாற்
கறங்குதெண் டிரைகொ ழிக்குங் கடலுடுத் திலகும் பார்மே
லறந்தழை மிருத சஞ்சீ வனநல முரைப்ப னம்மா. (கஉ)

கந்தருவர்சாபநீங்குசருக்கமுற்றிற்று.

ஆகூ திருவிருத்தம் - ௬0௩.

---

## மிருதசஞ்சீவனச்சருக்கம்.

நிருமல வயித்திய நாத னீள்புகழ்
பெருகுபூங் கோயிலின் பிறங்கு முத்தரத்
தொருகுரோ சந்தனி லுலகம் போற்றிடு
மிருதசஞ் சீவனத் தீர்த்த மேவுமே. (க)

இருடிகா சிபனதற் கிலகுந் தெய்வரோர்
பொருவருந் தர்க்கைமேற் பொருந்தி ரட்சகன்
வருபுகழ் வீரபத் திரன்வ ளர்ந்திடு
தருவருச் சுனமெனச் சாற்றுந் தொல்லைநூல். (உ)

ஈங்கிவர் தமைவலஞ் செய்தி றைஞ்சியே
யோங்கிய தருவினைப் பணிந்து யர்ந்திடுந்
தேங்கமழ் நறும்புனற் றீர்த்த மூழ்கியே
யாங்கமர் தருவணி நிழல கந்தனில். (௩)

சீரணி தாம்பிரத் திலகி வாய்ந்திடு
பூரண கும்பம்வித் தருமம் பொற்புறும்
வாரணி வனமுலை மடந்தை யாதியாய்த்
தாரணி தனிற்செயுந் தான முத்தமம். (௪)

பரவுசீர் விருச்சிக மாதம் பாங்குற
விரவிய பருவநீ ராடின் மேன்மைசூழ்
தரணியிற் சந்ததி விருத்தி யாந்தனந்
திரமுறப் பெற்றிடுஞ் செல்வ ராகுவார். (ரு)

ஆதிமத் தியார்ச்சுன நாத னென்றதிற்
சோதிசூ ழிலிங்கமொன் றிலகுஞ் சூழ்மனம்
பேதியா தன்புமேற் பெருகப் போற்றுவோர்
மேதினி புரந்துபே ரின்ப மேவுவார். (சு)

வேறு.

விடம்படு வேதை தீர்த்திடுங் கலுழன் விளங்குமித் தீர்த்தமீ தமுத, கடந்தனை வைத்து வயித்திய நாதன் கமலநாண் மலர்ப்பதம் பணிந்து, நடந்தன னெடுத்து வேகமாய் வினதை நண்ணிய பயந்தனை நீக்கத், தடந்தனி லமுத மிருத்தலா லமுத தீர்த்தமென் றுரைத்தனர் தக்கோர். (எ)

மலக்குரம் பையைநித் தியமென நினைந்து மாநிலந் தனிற்பழி பாவந், கலக்குநீள் கொடிய பாதகஞ் செய்யுங் காதகன் முதற்பல தீயோ, ரிலக்குமி முன்ன மியற்றுமித் தீர்த்த முழுகிடி னீங்குமெண் ணருஞ்சீர்க், குலக்குண மனைவி தன்னுடன் வாழ்வார் குறைவில்பேரின்பமேற் பெறுவார். (அ)

வேறு.

இருநிலந் தனிலுயி ரிறந்த யாக்கையை
யருமறை யவனெடுத் தழுந்தத் தோய்த்திட
வொருகணந் தாழ்ந்திடா துயிர்பெற் றுய்தலான்
மிருதசஞ் சீவன மெனவி ளம்பினர். (கூ)

தக்கசீர் பெறுதநு மாதஞ் சார்ந்தமுற்
பக்கநற் சதுர்த்தியிற் படிந்து மூழ்கினோர்
மிக்கநோ யொழிப்பரா வணியின் மேன்மையிற்
புக்கிடுஞ் சதுர்த்தியின் மூழ்கிற் போம்விடம். (க0)

வேறு.

வளங்கொண்மா நிலத்துளோர் மகிழ மான்மியம்
விளங்கிய மிருதசஞ் சீவ னந்தனைக்
கிளந்தனன் சனூர்த்தனச் சருக்கங் கேண்மைய
னுளங்கனிந் திடவகுத் துரைத்தல் செய்குவேன். (கக)

மிருதசஞ்சீவனச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௬கச.

---

## சனூர்த்தனச்சருக்கம்.

தேசுயர் காசிப கோத்தி ரத்தின்வாழ்
பூசுர னுன்மறை யுணர்ந்த புங்கவன்
வீசும்வண் புகழ்மிகும் வில்வ நல்வனம்
பேசுமூர் சனூர்த்தன னென்று பேருளான். (க)

மருக்கமழ் வில்வநல் வனத்தில் வாழ்ந்துதா
னிருக்குநாள் வயதொரெண் பதினெ ழிற்புகழ்
பெருக்கிடும் புத்திரன் பிறந்த னன்பரி
வுருக்கமு மிரக்கமு முரைக்கற் பாலவோ. (உ)

இந்தமா நிலந்தனி லிருக்கும் யாவருஞ்
சிந்தைகூர்ந் தழைத்திடச் செவ்வி வாய்ந்திடு
சுந்தர னெனப்பெய ரிட்டுத் தொல்புக
ழந்தண னருமறை யோதி வைத்தனன். (௩)

வளர்ந்தனன் வருடமீ ரெட்டின் வண்புகழ்
விளங்கிடு மந்நக ருறையும் வேதிய
ரிளங்கும ரர்கள்புடை சூழ வெய்தினன்
கிளர்ந்தெழு வனந்தனிற் கிருக நீங்கியே. (ச)

தொல்லைநான் மறையுணர் தூய வேதிய
னில்லறந் தனினித மியற்று மாகுதி
பல்கநற் சமித்தொடு பசுந்த ருப்பையு
மெல்லைகண் டொடித்தெறிந் தெடுக்கப் போந்தனன். (ரு)

நலம்பெறு கானகத் திருந்த நற்பலா
சுலந்திடு சமித்தினை யொடிக்க வேறினன்
புலன்கலங் கிடமரப் பொந்தி னின்றெழுந்
திலங்குமுள் ளெயிற்றராத் தீண்டிற் றென்செய்வான். (சு)

விடந்தலைக் கொண்டது புவியில் வீழ்ந்தனன்
றொடர்ந்துவர் தவரெலாஞ் சூழ்ந்து நோக்கியே
யடைந்தன னெனப்பதைத் தவன்பி தாவுட
னடந்தது பகர்ந்துதம் மனையை நண்ணினர். (எ)

வாய்புலர்ந் திரங்கியே மனைவி தன்னுடன்
சேய்கிடந் திடும்வனத் திற்சென் றெண்ணரி
தாய்மிகுந் திடுமருந் துயர மாழ்ந்துகண்
பாய்பெரும் புனல்பரந் தோடப் பார்த்தனன். (அ)

அந்திவான் பிறையணி யண்ண றன்பதஞ்
சிந்தைசெய் திருந்துபின் றேறி னுனிவன்
முந்தைநா ளரனிரு விழியை முள்ளினு
னெந்திடக் குத்தலால் விளைந்த நோவென. (கூ)

சேருமிப் பிறப்பின்முன் செய்த கோவதை
பாருளோர் துயருறப் பாம்பின் வாயின்முட்
சாரும்வன் கொடுவிட மாகத் தாக்கலா
லாருயி ரிறந்தன னெனவ றிந்தனன். (க0)

பண்ணிய பாவமீ தொழியும் பார்மிசை
வண்மைசேர் வயித்திய நாதன் வாசமாம்
புண்ணியத் தலந்தனி லென்று பூசுர
னுண்மையாய் விளங்கிட வுற்று ணர்ந்தனன். (கக)

வேறு.

நிறைபுகழ் வில்வ வனத்தினுக் கடுத்த நிருதிதன் றிசையினி னிலகண், டறைதரு குரோச மூன்றினில் விளங்கு மற்புத வயித்திய நாத, னுறைதருந் தானத் திலகுமுத் தரத்தி னொருகுரோ சத்தின் முன் னுரைத்து, நறைகமழ்ந் தொளிரு மிருதசஞ் சீவ னந்தனை நண்ணிட நயந்தான். (கஉ)

இல்லற மியற்றும் பாரிபின் வரமுன் னிறந்திடும் புதல்வனை யெடுத்தே, யொல்லையிற் போந்த மறையவ னனைய வொளிர்நறும் புனறனை நோக்கித், தொல்லைவல் வினையால் வந்திடு காயஞ் சுசிபெறத் தோய்ந்துசெல் குவனென், றல்லல்கூர் துயரத் துடன்முழு கினனுங் கடைந்தசே யுடலையுந் தோய்த்தான். (கங)

பயில்செழுந் தீர்த்த நறும்புன லுடலிற் பட்டவக் கணந்தனிற் புதல்வன், றுயிலொழிந் தெழுந்தோ னெனவெழில் கொழிப்பத் தோற்றினன் றூயமா மறையோன், வெயில்விரித் தெழுந்த பரிதியைக் கண்ட விரைகமழ் தாமரை யெனநன், மயிலியன் மனைவி முகமலர்ந் திடத்தன் வாண்முக மலர்ந்துபூ ரித்தான். (கச)

வேறு.

ஆதிமத் தியார்ச்சுன வண்ணல் சேவடிப்
போதினைப் பணிந்துளம் பொருந்து மன்பினாற்
கோதில்வண் டுருதசெங் குவளை நாண்மலர்
வேதியன் சாத்திவே ளூரின் மேயினான். (கரு)

கல்விசேர் புத்திரன் கற்பு வாய்ந்தெழின்
மல்குகா தலியுடன் வரங்க ணல்கிடு
நல்லசித் தாமுத தீர்த்த நான்மறைச்
செல்வவே தியன்வலஞ் செய்து மூழ்கினான். (கசு)

வேறு.

மன்னுமூ வலஞ்செய் தருள்பழுத் திருந்த வயித்திய நாதனை வணங்கி, யன்னையா யுலக மளித்திடுந் தைய லம்மைசெந் தளிரடி பணிந்தே, பின்னுமப் பாங்க ருறைகட வுளர்தம் பிறங்குபொற் றுளி ணையேத்தி, நன்மைசேர்ந் திலகு கூவிள வனத்தி னான்மறை வேதி யன் போந்தான். (கஎ)

வேறு.

அருந்திற லுலகினி லதிக வண்புகழ்
திருந்திய சனூர்த்தனச் சருக்க நற்சிறப்
பிருந்தவா றென்றுரைத் தனனி னிச்சொல்வேன்
வரும்பெருஞ் சூலதீர்த் தத்தின் மான்மியம். (கஅ)

சனூர்த்தனச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-சுகஉ.

## சூலதீர்த்தச்சருக்கம்.

கல்வியறி வினருள்ள மகிழ்ச்சி கூரக் கணிதநூல் பகுத்துணர்த் துங் கற்பந்தோறு, நல்வளஞ்சேர் மகிமைநிறை வயித்திய நாத னலந்தருபூங் கோயிலினுக் கனிலன் பாக, வெல்லையினிற் சுவேதார் க்க வனத்தின் மன்னி யிலகிடுமீ ரேழுலகி னினிய தாகிச், சொல் லரிய புகழ்நிறைந்த சூல தீர்த்தந் தூயவமு தெனவிளங்கிச் சூழு மாதோ. (க)

வேறு.

இத்தகு தீர்த்த மேவு மிருடிசுக் கிரனற் றெய்வ
நித்திய வயித்திய நாத னீடிரட் சகனே ரம்பன்
கொத்தில கியவி ருக்கங் கூறிடின் வகுள மென்பர்
சத்தமி விதிபா தஞ்சூழ் தநுமாதம் விசேட மாகும். (உ)

கவின்கொள்வா னவர்க டார காசுரன் பொருதும் போரிற்
குவிந்துமோ கிதராய் மூர்ச்சை யடைந்தனர் குலவுஞ் சிவன்
றவிர்ந்தனர் சிலர்க ளன்னோர் தமக்கருள் செய்வா னெண்ணி
நவின்றிட வரிய சூலப் படையினு லமைத்தா னுதன். (ஙு)

அனையகா ரணத்தாற் சூல தீர்த்தம தாயிற் றென்றுந்
தனையொழிந் தோடாச் சூலை நோய்தவிர்ந் திடுஞ்சா வாத
வினைகளும் விட்டு நீங்கும் வேண்டிய தனைத்து மேவு
நினைவரு முத்தி நல்கு நிறைந்தநீ ராடின் மாதோ. (ச)

வேறு.

சூலதீர்த் தப்பெருஞ் சிறப்புச் சொல்லிய
சோலமான் மியந்தனைக் கூறி னேனினிச்

சீலநல் கிடும்பெருஞ் சேட தீர்த்தமெக்
காலமு நிறைபுகழ் கருதிக் கூறுவேன். (ங)

சூலதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-சுஙஎ.

---

## சேடதீர்த்தச்சருக்கம்.

பொருத்தமாஞ் சூல தீர்த்தப் புறத்தின்விற் கிடைதா னென்றின்
மருத்துவின் றிசையிற் சேட தீர்த்தம்வான் கங்கை மானு
முருக்கிளர்ந் திலகுந் தூய வொளிமிகு மிருடி யென்போன்
சுருத்தமை தவஞ்செய் நன்மார்க் கண்டேய முனிவ னுகும். (க)

சிறந்திடுஞ் சேடன் மேவுந் தெய்வமா மிதனைக் காப்போன்
கறங்குதெண் டிரைசு ருட்டுங் கடறனை யுடுத்த பார்மே
லறந்தழை கல்வி நல்க வமைந்திடு புதனே யாகும்
பிறங்கிய விருக்க மென்றும் பெருங்கடம் பென்பர் மேலோர். (உ)

தோய்தயிர் நறுநெய் நென்மாச் சூழ்சருக் கரைதாம் பூல
மேய்நுணு கிழைநல் லாடை யிலங்குகம் பலநால் வேத
வாய்மையந் தணர்க்குத் தான மன்னுநீ ராடிச் செய்வோர்
காய்பசி யதனல் வாடார் காசினி புரந்து வாழ்வார். (ங)

வேறு.

பரவிய சேட தீர்த்தநீர் முழுகிப் பரிந்துவெண் ணீற்றினை யணிந்தே, யரவர சுகந்த மனுவினை யீரை யாயிர முருச்செபித் திடின்மேல், விரவிடு மநேக விதவிடந் தீரு மேவுகுன் மாதிநோய் நீங்குந், தரணிகண் முழுதுங் கோன்முறை செலுத்தித் தகுதிசேர் புகழ்படைத் திடுவார். (ச)

வேறு.

அதிபெறுஞ் சேட தீர்த்தந் தொடுகட லுலகின் மீதின்
வதிதருந் தநுஙன் மாத வளர்பிறைச் சதுர்த்தி மூழ்கி
னதிகபாக் கியங்க ளுண்டா மடுத்தபஞ் சமிநீ ராடி
னிதிமிகுஞ் செங்கோ லோச்சி நீடூழி காலம் வாழ்வார். (ரு)

நேத்திர மொருமூன் றுள்ள நின்மல னருளிச் செய்த
சாத்திரம் புராணம் வேதந் தகுதிபெற் றுணர்ந்த தூயோர்
சூத்திரன் சாலை யன்னந் துய்த்திட லாகா தோங்குந்
தீர்த்தநீர் முழுகிற் றீருஞ் செய்யுமப் பாவந் தேய்ந்தே. (சு)

மனைவிதன் சேட முண்டு வைத்திடு மகவின் சேடம்
வினைசெய்சூத் திரன்றன் சேடம் விதித்திடு சிராத்தச் சேடந்
தனைநுகர் பாவஞ் சேட தீர்த்தநீர் தன்னின் மூழ்கி
னினைவினிற் காணு தோடி நீங்குமக் கணத்திற் றானே. (எ)

கூறிடுஞ் சேட தீர்த்தங் கொடியபா தகங்கள் மூழ்கி
யேறுவோர்க் கொழிக்குஞ் சாந்தி ராயண விரத மெண்ணி
னூறுசெய் திடினுஞ் சேட நுகர்பவந் தீரா தோங்கி
வீறுமப் பவமுந் தீர்க்கு மெனிலதற் கிணைவே றுண்டோ. (அ)

துன்பமே வருதல் காட்டுஞ் சொப்பனந் தொடர்ந்து வந்து
வன்புலி பாயக் காணு மனப்பய மதங்கொள் யானை
தன்புழைக் கரத்தாற் பற்றித் தரையினி லடிப்பக் கண்டு
பின்பயந் தெழுதல் சேடன் பெயர்பெறுந் தீர்த்தந் தீர்க்கும். (கூ)

வேறு.

திருந்துவண் புகழ்சேர் சேட தீர்த்தமான் மியந்தெ ரிந்த
பொருந்திடப் புகன்றே னிப்பாற் பொருவருஞ் சிறப்பு வாய்ந்தே

யிருந்தவெண் டிசையின் மேன்மை யிலகிய சருக்கந் தன்னை
யருந்தவ னுரைத்த வண்மை யறிந்தன ப்கர்வ னம்மா. (கo)

சேடதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ_ திருவிருத்தம்-சுசஎ.

---

## எண்டிசைமகிமைகூறியசருக்கம்.

சிந்தைகூர் பலன்சேர் சித்தா முதச்செழுந் தீர்த்தந் தன்னி
லிந்திரன் றிசையி லிந்திர தீர்த்தநீ ரிலகுந் தென்பாற்
சந்ததி தனைய ளித்துத் தழைந்திடுஞ் சருவ தீர்த்தஞ்
சுந்தர மிலகு மேல்பாற் சூழ்தரும் பினாக தீர்த்தம். (க)

வேறு.

அத்திக் கொழிந்த வடதிசையி லமரு ஞான தீர்த்தம்வளர்
பத்திப் பிரத மெனுந்தீர்த்தம் பரவி யிடும்பா வகன்றிசையின்
முத்தி தீர்த்த நிருதியினின் முறைமை பெறுமா ருததிசையிற்
சித்தி தருமங் களதீர்த்தந் திருந்து மமுத மெனத்திகழும். (உ)

ஈச திசையிற் றுருவாச தீர்த்த மிலகி யிடுமிருநான்
காசை யினுமித் தகுதீர்த்த மமையுஞ் சித்தா முதமகிமை
பேச வெளிதோ விவைக்கிருடி பெருமை பெறுநற் சதக்கிருது
வாச மலர்வா ழயன்கபிலன் வளருங் கந்த வேண்மாதோ. (ங)

வேறு.

வயிரவக் கடவு ணந்தி வானவன் மாணி பத்திரன்
செயிரொழித் திலகும் வாய்மை திகழ்பரா சரனுந் தெய்வ
முயிரினை யடிமை கொள்ள வுரியவன் வயித்திய நாதன்
றயிரிய வனந்தன் காவற் பாலக னென்ப தக்கோர். (ச)

மலர்சுவே தார்க்க மன்னி வளர்ந்திடு விருக்க மாமிந்
நலமிகு தீர்த்த மூழ்கி நான்மறை யவர்க்குத் தானந்
திலதருப் பணம்பி திர்க்க டிருத்திபெற் றிடவே செய்வோர்
பலன்றனை யெண்ணி யாவர் பகுத்தறிந் துரைப்பர் பார்மேல். (ரு)

வேறு.

ஆரும் பிதிர்க்க ளமாவாசை யடுத்த பருவம் வளர்பக்கஞ்
சேரு மிருமூன் றலகுபெறு திதிமேன் மாதச் சிவநிசிசீர்
சாரு மகர சங்க்ராந்தி தகுமா வணிமா தப்பிறப்புப்
பாரு ளோர்கள் புகழயன மிரண்டும் பலன்சேர் தினமாகும். (சு)

எழில்சேர் தீர்த்த முழுகினரெண் சித்தி பெறுவர் வசுக்களெண்ம
ரொழியா வாஞ்சை யினராகி யுறுக்கிக் காம தேனுவினை
விழிநீர் ததும்பப் பிடித்திழுத்த மிகுதோ டத்தின் றெடக்கொழியும்
வழிவா னவர்தங் குரவனருள் வாக்கா லுணர்ந்து போந்தனரால். (எ)

போந்த வசுக்க ளெண்மருமப் புனித தீர்த்த மெட்டினும்போ
யாழ்ந்து முழுகு மக்கணமுன் னடுத்த பாவம் விடக்கண்டார்
சாந்தங் கமழு நறுங்கூந்தற் றையல் பாகன் றுளின்மல
ரேந்தி யிறைஞ்சிக் காதலுட னினிய துதிபற் பலசெய்தார். (அ)

பேச வரிய மகிமையினைப் பெறுமா முனிவ ரெழுவருநன்
னேச முடனே வலன்பெருகி நிறைந்த தீர்த்த மிதின்முன்னம்
வாசம் புரிகா ரணமதனுல் வழங்கு மவர்பே ரிஃதன்றித்
தேசமுழுதும் வசுக்கள்பெருந் தீர்த்த மெனப்பேர் திகழ்ந்தொளிரும்.

வேறு.

வண்மைசே ரெண்டிசை மகிமை கூறிய
வுண்மையாஞ் சருக்கமீண் டெடுத்து ரைத்தனன்

விண்ணுல காளுமிந் திரனை மேலொ
ணண்ணுசா பந்தவிர்ந் திடுந லன்சொல்வேன். (௪௦)

எண்டிசைமகிமைகூறியசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௬௫ள.

---

## இந்திரன்சாபநீங்குசருக்கம்.

இந்தி ரன்றுரு வாசமா முனியிடுஞ் சாபம்
வந்து வானுல கதுதனை நீங்கிமண் ணுலகிற்
சந்த நாண்மலர்ப் பொழில்புடை சூழ்தல மெங்குஞ்
சிந்தை வெந்துயர் கூர்ந்திடத் திரிந்தனன் மாதோ. (௧)

ஒருத லத்தினுந் தீர்ந்திடக் கண்டில னுரிய
குருவ நக்கிர கஞ்செய வுளங்குளிர்ந் தெழுந்து
மரும லர்ப்பொழில் சூழ்ந்திடும் வயித்திய நாத
னருமை யாம்பெருந் தலந்தனை யடுத்தன னம்மா. (௨)

அடுத்த வாயிரங் கண்ணினுக் கரியபே ரின்பங்
கொடுத்தி லங்குசித் தாமுத குணதிசை யதனி
லெடுத்து ரைத்திடு மியன்முறை மூழ்கினன் சாபம்
விடுத்தொ ழிந்தது விளைந்தது மயிர்ப்புள கிதமே. (௩)

மன்னு நற்புகழ் பெற்றிடு மாகமா மாதந்
தன்னின் மூழ்கியே சாபநீங் கிச்சத மகவான்
பின்னர் மண்டல மொன்றெழுத் தைந்தையும் பிரியா
துன்னி யேயருஞ் செபம்புரிந் துறைந்தனன் மாதோ. (௪)

வேறு.

அத்திமுகத் தண்ணன்முதற் கடவுளரை வணங்கியன்னோ ன
னைய தீரத், துத்தரதிக் கினைநோக்கி யுறைந்துசெபம் புரியுமிடத்

தமையோர் பாக, னெத்திசையும் புகழ்வயித்திய நாதனெழுந் தரு ளிமனத் தெண்ணு நின்ற, வுத்தமநல் வரமனைத்து மளிப்பனெனக் கருணைபுரிந் துரைத்தல் செய்தான். (ரு)

ஐயனுரைத் திடுமெழுத வாக்கதனை யுணர்ந்துமல ரடிமேற் றாழ் ந்து, பையரவப் பணிபூண்ட மார்பாயான் பகைவருடன் பொரு தும் போரில், வெய்யவசு ரரைவெல்லும் விறல்வரமும் யான்விரும் பி முழுகுந் தானம், வையகமிந் திரதீர்த்த மெனவழங்கும் வரமு மகிழ்ந் தருள்செய் யென்றான். (சு)

அடியேன்மற் றருச்சனைசெய் யைங்கரன்றன் கமலமல ரடி யை வாழ்த்திப், படிமேவுந் துவாரபா லகர்தம்மைப் பணிந்துபுகுந் தனது பாத, முடியால்வந் தனைசெய்வோர் மொழியரும்பூ ரணபல மு முதன்மை யாக, மிடிதீரப் பெறல்வேண்டும் விரும்பார்விட் பலம் பெறவே வேண்டு மென்றான். (எ)

புண்டரிகச் செழுங்காடு பூத்ததெென வாயிரங்கண் பொலிந்து தோன்றத், தண்டளிர்க்கற் பகநறுந்தா ரணிந்திலகு மகபதிதான் சா ற்று மாற்றங், கண்டிறைவன் கருணையினு லவையனைத்து மளித்த னன்பின் காதல் கூர்ந்தே, யண்டருல கத்தணைந்து பகைவரைவென் றரசாட்சி புரிந்தா னம்மா. (அ)

வேறு.

உந்திநீர்க் கருங்கட லுடுத்த பார்மிசை
யிந்திரன் சாபநீங் கியசரு ருக்கமென்
சிந்தையி லமைந்தன தெரிந்து கூறினேன்
வந்தவூர் வாசன்மான் மியம்வ குப்பன்மேல். (கூ)

இந்திரன்சாபநீங்குசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-சுசுசு.

---

## துருவாசர்பிராந்திதீர்ந்தசருக்கம்.

ஆதலினிந் திரதீர்த்த மெனவகில முரைத்திடுமற் றவனேச் சேறி, யேதமிகக் கொடுஞ்சாப மிட்டதுரு வாசமுனி யிலகு மஞ்சொற், பேதமுற வேசித்தப் பிராந்தியா யினனதனுற் பிறைசேர் வேணி, நாதனுறை தலந்தோறும் போந்துபுகழ் சேர்வயித்திய நாதஞ் சார்ந் தான். (க)

இசைநிறையு மகிமைபடைத் திலகுசித்தா முததீர்த்தந் தனிலீ சான, திசையதனின் மூழ்கியே தினன்பிடித்த பிராந்திதான் றீர்ந்த தற்மு, லசைவிலருந் தவம்புரியுந் துருவாச தீர்த்தமென வகில மெ ங்கு, நசைபெருகு மகிழ்ச்சிமிக வுரைத்தனர்மற் றஃதனைத்து நல்கு மாதோ. (உ)

கருத்தமைந்து காதல்கூர்ந் திலகுசித்தா முததீர்த்தக் கரைமே லாறு, கிருத்திகைப்பெண் ணிருந்தனர்மற் றவர்களறு வருங்கிளர் பூம் புனலின் மூழ்கித், திருத்தமிகு மனையசித்தா முததீர்த்தந் தனி லாறு தீர்த்தந் தங்கள், பொருத்தமுறும் பெயரதனுற் புகழ்பெறவே யமைத்தவரை் மகிழ்ச்சி பூத்தார். (௩)

கன்னனறுங் குதலைமொழிக் கார்த்திகைமா தர்களமைத்துக் கவினுந் தீர்த்தந், தன்னின்முழு கினரிட்ட காமியம்பெற் றிருப்ப ரது தனைக்கண் டோருஞ், செந்நெல்வயல் வளந்தருபார் முழுது மொரு குடைநிழற்றிச் செங்கோ லோச்சி, மன்னுபுக ழரசாட்சி செலுத்திநீ டூழிநாள் வாழ்வர் மாதோ. (ச)

வேறு.

வண்மைசேர் திடந்துரு வாச மாதவ
னண்ணிய பிராந்திதீர்ந் ததுங வின்றன

னண்ணலா ரங்கசந் தான தீர்த்தநல்
லுண்மையை யினியெடுத் துரைத்தல் செய்குவேன். (ரு)

திருவாசர்பிராந்திதீர்ந்தசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கூஎக.

---

## அங்கசந்தானதீர்த்தச்சருக்கம்.

பொங்கெழில் கொழிக்குஞ் செம்பொற் பொருப்பினுக் கரசியான
மங்கைதான் மகிழ்ச்சி கூரும் வயித்திய நாத மென்னு
மெங்கணு யகற்கீ சான திசையினி லிலகி யோங்கி
யங்கசந் தான தீர்த்த மாரமு தெனவி ளங்கும். (க)

வேறு.

இலகிய விருடி வசிட்டன்மேற் றெய்வ மெழில்பெறு சங்கர னிதனே, நலமிகக் காப்போன் மூவிலைச் சூல நாயக னத்திர தேவன், பலனருள் விருக்கம் வெள்ளின்மற் றிதன்கீழ் பானிறை கஞ்சபாத் திரம்பொன், குலமணி கரும்பொன் வெண்பரி தானங் கொடுத்திடி னென்றுகோ டியதாம். (உ)

அல்லணி களத்த வண்ணல்வா னவர்கட் கடைந்திடு சோகமோ கத்தை, யொல்லையிற் றீர்ப்பான் றிருவுளத் தெண்ணி யோங்கொளி வெள்ளியங் கிரியில், வில்வமூ லத்தின் மிருத்திகை யெடுத்து விரி * சர காண்டமா வனத்தி, னொல்லையி லன்னோர்க் களித்ததின் மிகுந் தே யிருந்திடு மிருத்திகை யதனே. (ங)

சீரண மாகி யவர்புவி விழுந்து சிதைந்திடு மங்கம்யா வையுஞ் சம், பூரண மாகச் செய்வதற் கிலகிப் பொற்புறு மூவிலைச் சூலத்,

---

* சரகாண்டம் - நாணற்கூட்டம்.

தோணி முனையா லகழ்ந்தொரு தீர்த்த மியற்றியம் மிருத்திகை யினை வைத், தாரணி யண்ணல் சேர்த்தலா லதன்பே ரங்கசந் தானமென் றுரைத்தார். (ச)

இனையநற் றீர்த்த மிருத்திகை யெடுத்தே யெழில்பெறத் திரட் டிவைத் ததனை, வினைகடீர்ந் திடவே விரும்பின ரருந்தின் மிகும் பெரு வியாதியே முதலா, மனையநோய் நீங்கு மஃதலாற் றீரா வினை யெலா மக்கணந் தீருஞ், சினவிடைப் பெருமான் றிருவடி சேர்ந்து திருந்துபே ரின்பமுற் றிருப்பார். (ரு)

சித்திபெற் றிடவே திரட்டிவைத் திருந்த திகழ்திருச் சாந்தி லொன் றதனைப், பத்தியில் லாத படிறருக் களித்தோர் பாழ்நர கதனிடை வீழ்வார், குத்திரம் பேசி யிகழ்பவர் கொடிய நரகினி லழுந் துவர் குளிகை, முத்தியைப் பின்ன ரளித்திடும் போக முழுவது முன்னளித் திடுமே. (சு)

புதல்வரைப் பெறுத பூங்குழன் மாதர் பொற்புறு தீர்த்தநீர் முழுகி, யுதவிசெய் திருச்சாந் துண்டையைக் கரைத்தே யுண்மை யா யருநதிடி னல்ல, பதமுத வனேக பாக்கியம் பெருகும் பரிவுறு புதல்வரைப் பெறுவார், கதமிகு பகையை வெல்லுவர் குளிகை கையினி லிருந்திடி னம்மா. (எ)

உறுபய ஞன குளிகையைக் கடல்சூ ழுலகினில் வாழ்பவ ரருந்தின், வறுமைதீர்ந் திடுந்துன் னிமித்தமாங் கனவும் வாய்ந்திடும் வலியவே தாளங், குறுகியே நடுங்கி யோடிடுங் கொடிய சூனியங் குடியிருந் திடாது, பெறுமிடம் பார்க்கு மரியபே ரின்பப்பேறுமேற் பெறுகுவர் மாதோ. (அ)

கொங்குலா வியபூங் குழன்மடந் தையர்கள் குளிகையை யருந் திடிற் றீர்க்க, மங்கலி யத்தைப் பெறுவர்பன் னிரண்டு வாரம தருந் திடிற் பெருசோ, யிங்கினி யிருக்கு மிடமிலை யென்றே யெழுந்துதா னடைக்குழூப் பிணிநீத், தங்கையி லதனை யைந்தின மெடுத்தே யருந் திடி னனைத்தையும் பெறுவார். (௯)

இன்பமே யளிக்கு மிடபநன் மாதத் தெழின்மிகு பருவநீ ராடி, மின்புனை வேணி வயித்திய நாதன் விரைமலர்த் தாளிணை வணங்கி, யன்பொடு ததியோ தனநிவே தனஞ்செய் தவரரு வினையெலாந் தீர்ந்தே, நன்புகழ் மிகுமங் கலம்பெறு குவர்மே னண்ணுவர் கயிலை மால் வரையை. (௰)

வேதமோர் நான்கும் பிரளயஞ் சூழ மேதகு தினம்பல முழுகி, யேதமுற் றிருந்து சிதைந்திடு மங்கத் துடனெழுந் தெண்ணரும் புகழ்சேர், சிதநீ ராடி வயித்திய நாதன் றிருவடி வணங்கியொன் பது நாட், காதல்கூர்ந் தருச்சித் தங்கம்வாய்ந் திலகிக் கவினுறக் களித்தன மன்னே. (௧௧)

சிதவான் புனல்சூ ழங்கசந் தான தீர்த்தநீ ரந்தனி லுள்ளங், காதல்கூர் தண்ணீர்ப் பந்தல்வைத் தவர்பூங் காமிக வைத்தவர் மறையோர்க், காதர வாகு மன்னசத் திரம்வா ழகரமன் புடனமைத் தளித்தோ, ரேதநீங் கிடவே யெண்ணில்பல் கோடி குலங்கரை யேற்றுவ ரெளிதின். (௧௨)

வேறு.

செங்கதி ரவனைக் கண்டகா ரிருள்போற் செறிந்திடு பாவநீக் கிடுநல், லங்கசந் தான தீர்த்தநன் மகிமை யறிந்தன புகன்றன னி

ப்பாற், பொங்கிய வெழில்சேர்ந் திடுசிவ தன்மன் பொருந்திய பிரம ரட் சசுதா, னிங்கொழிந் தோடு மான்மிய மதனை யெடுத்துரை செய்குவன் மாதோ. (கரு)

அங்கசந்தானச்சருக்கமுற்றிற்று.

ஆ_ திருவிருத்தம்-சுஅச.

---

## சிவதன்மன்பிரமரட்சசுநீங்குசருக்கம்.

அங்கசந் தான தீர்த்தமுன் னினரு மளவிலா வின்பமே பெறுவா, ரிங்கிதன்மகிமை தனிலொரு கதையா னிசைத்திட வியம்புவன் கேண்மின், றங்குபூ ருவத்தின் வயித்திய நாத தலந்தனிற் பிறந்தவன் றரைமேற், பொங்குமா மறையோ தியபரத் துவாசன் புகழ்பெறு கோத்திரத் துதித்தோன். (க)

அகலிடந் தனிற்சூழ்ந் திலகுமா சார மனைத்தையு மறிந்தவனன்றிச், சகலசாத் திரமுந் தெரிந்தவ னெழுதாச் சதுர்மறை முழுதுணர் பெரியோன், புகலுவ ரவன்பேர் சுமதியென் றன்னோன் பொருந்தும்வை சாகமா தஞ்சேர், பகலினீ ளிரவி னிருள்கடிந் திலகு பருவநாட் பரிவுகூர்ந் தெழுந்தான். (உ)

திலகவே தியன்மே லங்கசந் தான தீர்த்தநீ ராடியே வெள்ளி, லிலகுமூ லத்தி லெந்தெழுத் தினையு மியல்பெறச் செபம்புரிந் திருந்தா, னலகைபோற் பிரம விரட்சசு றுகர வடுத்தலி னச்சமுற் றன்னோ, னலமிகு மனைய நறும்புன லிறைத்தா னனைந்ததம் முனியுட லம்மா. (ங)

அக்கணம் பிரம முனியுட னீங்கி யணிமணிக் குண்டலங் கிரீட, மிக்கநன் மணஞ்சூழ் கற்பகத் தெரியல் விரைகமழ் சாந்தநல் லா

டை, திக்கெலாம் விளங்குந் திவ்விய தேகமிசைதிகழ்ந் தொளிசெயச்சேணற், புக்கிளம் பரிதியெனவிமா னத்திற் பொற்புறத் தோன்றினன் மாதோ. (ச)

அருமறை யுணர்ந்த சுமதிமா மறையோ னதிசய மிகுதவிர்ந் துளதோ, வருநெறி யறிவ னெனவவன் கமல மலர்முக நோக்கிநீ யார்நின், பொருவரு குலம்யா தெவ்வுழை யிருந்து போந்தனை போக்கரும் பாவம், பெருகிடப் பிரம ரட்சசா மாறும் பிரிந்தொழிந் ததும்பக ரென்றான். (ரு)

வேறு.

திகழ்சவு ராட்டக தேச மீதினிற்
புகழ்பெறு பூசுரர் குலத்திற் போந்துளே
னிகழ்பெயர் வளர்சிவ தன்ம னென்றுதா
னிகழ்செயா துலகுளோ ரெடுத்துக் கூறுவார். (சா)

சிந்தைவே றாகியே திரிந்து நான்மறை
யந்தணர் செய்கட னனைத்தும் விட்டியா
னிந்தனை பேசி நன் னெறியொ ழித்தனன்
வந்தனை செய்சிவ பூசை மாறினேன். (எ)

வினைவச மென்கொலோ விரும்பி யான்பெறுந்
தனையர்க ளாயுள்சி ரணம தாகியே
யனைவரு மிறந்தன ரரிய கற்புள
மனைவியு மிறந்தனண் மண்ணி ழந்தனன். (அ)

திருந்துசெங் கோன்முறை செலுத்து மன்னவ
னருந்தன மனைத்தையு மபக ரித்தன
னிருந்தபி லொழிந்தன யாவுஞ் சோரர்தாம்
பொருந்துநள் ளிரவினிற் கொண்டு போயினர். (கூ)

எள்ளின ருறவுகொண் டிருந்த யாவருந்
தள்ளின ரூரினிற் றலைமை பூண்டவர்
வெள்ளிடை விழுந்தியா னிறந்து வெந்நர
குள்ளன வொழிந்திடா தழுந்தி யூறினேன். (௧௦)

வேறு.

எண்ணருங் கால நரகினிற் கிடந்தே யேழினன் கரையின்மே லதன்பின், மண்ணினிற் பிரம விரட்சசா யினன்முன் வாழுநாட் சிவநிசி யதனி, லண்ணல்கண் மணிமா லிகையினை மறையோர்க் கபுத்திபூ ருவமதா யளித்த, புண்ணியப் பலனு லினையதீ ரத்திற் போந் துனைப் பிடித்திட நின்றேன். (௧௧)

தீர்த்தநீ ரள்ளித் தெளித்தலா லிலகு திவ்விய தேகம்யான் பெற்றே, னார்த்திரீங் கினனின் னருட்கிட னுனே னையனற் சிவகணங் குழுமிப், பார்த்துநின் றனரென் வரவினை வெள்ளிப் பருப்பதஞ் செல்குவ னென்றுன், வேர்த்திடா தம்பொற் கவரிசா லசைத்தார் விண்ணவர் பூமழை பொழிந்தார். (௧௨)

தெண்ணிலாத் தவழுந் திருமலை யன்னோன் சேர்ந்தபின் றிருந்தும்வான் புகழ்சூழ், மண்ணுல கதனிற் சுமதிமா மறையோன் வளங்கெழு தீர்த்தமா மகிமை, யுண்ணிறை காதல் பெருகிட வுரைத்தா னுயர்செழுந் தீர்த்தநீர் கண்டோ, ரெண்ணில்பல் யாகப் பலன்பெறுகுவர்மே லெழுந்துமூழ் கினர்பல னெவிதோ. (௧௩)

வேறு.

அரிய மாகிலப் பரப்பெலா மலைந்தலைந் தோடித்
திரித ரச்செயும் பிரமரட் சசுசிவ தன்மன்

பிரியு மான்மியச் சருக்கமீண் டுரைத்தனன் பெருமை
யுரிய நற்றிருச் சாந்துண்டை யுண்மைமே லுரைப்பேன். (கசு)

சிவசன்மன்பிரமரட்சசுநீங்குசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - சுகஅ.

---

# திருச்சாந்துண்டைசெய்யுமுறைமை கூறியசருக்கம்.

இலகுநற் றினத்தில் வலஞ்செய்து முழுகி யெழில்கொள்வெண் ணீறணிந் தெழுதா, நலமிகும் வேத முழக்கொலி திகழ நலங்கொள்வாத் தியமெழுந் தியம்ப, வலகிலா மகிமை யங்கசந் தானத் தடத்தமை மிருத்திகை யெடுத்தே, திலகபாத் திரத்தில் வைத்துமே லையன் றிருத்தமாஞ் சந்நிதி யதனில். (க)

எழில்பெற வனைய பாத்திரந் தனைவைத் திலகுமைந் தெழுத்தையுச் சரித்தே, யொழிவிலோர் பதினா யிரமுருச் செபஞ்செய் தொளிமிகு விபூதிகுண் டத்திற், பொழிதரும் விபூதி யெடுத்ததிற் சேர்த்துப் புண்ணிய தீர்த்தநீர் வார்த்து, விழிமகிழ் திருச்சாந் துண்டைசெய் தமைத்தாண் மீதுசாற் றுவதுநல் விதியாம். (உ)

உத்தம வுருக்கொண் டிருந்திடு முமைதன் னுளிமல ரடிதனிற் சாத்தி, வைத்திடு திருச்சாந் துண்டையை யெடுத்து மரத்தினாற் செய்தபெட் டியினைச், சுத்திசெய் ததனில் வைப்பது விதிமேற் சுபதினந் தனிலதை யெடுத்துப், பத்திமீ தூரு மன்பர்கட் களித்தாற் பலித்திடும் போகமுத் தியுந்தான். (ங)

உரமிகுங் குன்மங் காசநோய் பெருநோ யோங்கிமே லிடுஞ்சனி வாதம், பரவும்வெண் குட்டஞ் சுரந்தலை வலிநீ ரிழிவுபா ரிச

தெழும் பிளவை, விரவிடுந் தீரா வினையெலாந் தீரு மிக்கபே ரின்பமு மளிக்கும், கரமதிற் றிருச்சாந் துண்டையை யெடுத்துக் கனிவுட னருந்தினர்க் கன்றே. (சு)

எண்ணிடு நியம மின்றியே குளிகை யெடுத்தருந் தினர்க்கெலாம் பலித, முண்மையா யிராது கொடியவெம் பாவ மொழித்திடு முடல்புள கிதமா, நண்ணும்வே தாளம் வந்தணு காது நலமிகு சித்தியுண் டாகு, மண்ணலார் திருச்சாந் துண்டையை நியம மாகவே யருந்தினர் தமக்கே. (ரு)

தேசுறு குளிகை மகிமையை முழுதுஞ் செப்புதற் கரிதரி தெவர்க்கும், வீசும்வண் புகழ்சே ரங்கசர் தான வைபவம் வியாசர்தன் னிடத்தி, லாசுதீர்ந் திடயா னுணர்ந்தன னதன்பே ரவனியிற் புகன்றவர் கேட்போ, ரீசுர னெனவே மான்மழுக் காள கண்டமுக் கண்ணுமெய் துவரே. (சு)

வேறு

சொழித்திடு மகிமை வாய்ந்து குலவிய திருச்சாந் துண்டை
வழிச்சிறப் பெடுத்துச் சொல்லுஞ் சருக்கமீண் டுரைத்தேன் மாறுச்
செழிப்புறு சரகாண் டத்திற் றிருவவ தாரஞ் செய்யு
மெழிற்றிருச் சருக்கந் தன்னை யினியுரை செய்கு வேனே. (எ)

திருச்சாந்துண்டைசெய்யுமுறைமைகூறியசருக்கமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-எ௦ரு.

---

## திருவவதாரச்சருக்கம்.

குழைத்துவின் படருங் கோடுசூழ் தருக்கள் குலவிய நைமிசா ரணியத், திழைத்திட வரிய தவம்புரி முனிவ ரிருந்திடு நாப்

பணி னிலகித், தழைத்தகண் டிகைவெண் ணீற்றொளி நிறைந்த சவு னக முனிவர னெழில்சே, ருழைக்கரத் தண்ண லுரைத்திடு புராண முணர்முனி வனைத்தொழு தரைத்தான். (க)

அய்யகே ளெமக்குச் சிவபெரு மான்றன் னருள்புரி சரிதமாத் தொகுத்தே, யுய்யுமா றுரைத்த காதையில் வயித்திய நாதனென் றுமையொரு பாகர், கெய்துகா ரணமு முலகமீன் றளித்தாட் கில கும்வா லாம்பிகை யெனும்பேர், வையகந் தன்னில் வந்தகா ரண மும் வகுத்துரை செய்யெனப் புகன்றார். (உ)

அவ்வுரை செவிக்கின் னமுதமாய் நிறைபே ரானந்த மாகியே நீங்காச், செவ்விவாய்ந் திருந்து தெளிந்தநூ லுணர்ந்து திகழ்ந்திடு சூதமா முனிவன், கவ்வைவெண் டிரைசூ ழுலகினுக் கிதமாய்க் கை தனி லதிரக சியமா, மிவ்வகை யெடுத்து வினவமுன் னியற்று புண் ணிய மென்கொலோ வென்றே. (ங)

முனிவரை வியந்து வயித்திய நாத முதல்வன்மான் மியமுழு வதும்யா, னினிதறிந் திலகு தலப்பெரு மகிமை யிதுவொளிர் தீர்த்த மற் றிதுமேற், புனிதமா மூர்த்தி மான்மிய மிதுவென் றறிந்துபூ தல த்துள வனத்திற், றனியிருந் தனேகந் தவம்புரிந் திடினுஞ் சாற்றுத லரிதரி தாமால். (ச)

தன்பெரு மகிமை தானறி யாத தற்பர மறிவனோ வறியே, னென்றனக் கமைந்தே யிருந்திடு மறிவுக் கெட்டின துரைசெய்வே னிதுதான், முன்பெருந் தவஞ்செய் வியாசன தருளான் மொழிகுவ னென்பதே யன்றி, யின்பவா ரிதியா மையன்மான் மியமா லயனு மின் னமுமறிந் திலரே. (ரு)

வேறு.

பூரு வந்தனிற் ருரகன் புரிந்ததண் டனையான்
மேரு நேர்புய மெலிந்தனன் மகபதி விண்ணோர்
யாரு மோலமிட் டெழுந்தன ரிரசிதக் கிரியைச்
சாரு முன்னரிற் படுந்துயர் சாற்றரி தாமால். (சு)

அனைய ருற்றிடு மெலிவுகண் டபயமீந் தனன்மின்
புனையும் பொன்னிதழ்க் கொன்றைவே ணியன்புகல் பிறிதொன்
றினையி லாதவ ரிருந்தன ரிதற்குமுன் னசுர
னினைவ ருந்தவம் புரிந்துநீள் வரநிறை நாளின். (எ)

அண்ண றன்வடி வனந்தமென் றறிந்திலன் மனத்தி
னெண்ணி யேசிறு பிரமசா ரியைமிக ரிருந்த
* வண்ண மற்றவன் வாங்கின வரங்களில் வடிவார்
கண்ணு தற்பிரான் புதல்வனைத் தவிர்வது கருதான். (அ)

இறந்தி டாவரம் வாங்கின னெழுந்துபோர் புரிந்தான்
மறங்கொள் கண்ணினன் செம்பனு தியரன்றி வலிய
திறந்தி கழ்ந்திடு படைத்தலை வர்களுடன் றேவர்
புறங்கொ டுப்பது கண்டுபுன் னகைபுரிந் தனனே. (கூ)

ஈது நிற்கமற் றையன்வா னவரிட ரொழிப்பான்
றுது சூழ்மலர்க் குழலுமை தனைமணம் புரிந்தே
யோது தற்கரும் பற்பல நாட்புணர்ந் துறைந்தான்
யாது செய்வமென் றிருந்தொரு சூழ்ச்சியெண் ணினரால். (கo)

எண்ணும் வானவ ரங்கியங் கடவுளை யேத்தி
நண்ணு மெம்மனோர் துயரம தொழிப்பது நாடி
யுண்ணி றைந்திடு காதலா னினையுணர்ந் தனம்போய்க்
கண்ணு தற்பிரான் புணர்ச்சிசெய் யுறையுள்கா ணுதியால். (கக)

* வண்ணம் - வடிவு.

அன்ன வேலையில் வெள்கியே யம்பிகை பிரிவா
ளின்ன வாறுசெய் யென்றன ரென்செய்வா னெழுந்து
நின்ம லன்வரும் வீரியம் விடுமுன நின்முன்
பொன்ன வாஞ்சுணங் கிளமுலைப் புறம்பகன் றனளே. (கஉ)

இதமு யிர்க்கெலா மளித்திடு மிறையவ னிணையில்
கதமி குந்திடக் கண்சிவந் தெரிகவின் வாடும்
வதன நோக்கியே வியோகநீ வரச்செயு மதனாற்
சிதறி றங்கொளும் வீரியந் தாங்கெனச் சீறி. (கஙு)

அய்யன் கொண்டிடுங் கோபவெந் நெருப்பினுக் கஞ்சி
வெய்ய செந்தழ லவனெடுத் தனனுடல் வெதும்பி
யுய்யு மாறில னாகிவா னவர்க்குரை செய்தே
துய்ய கங்கையில் விடுத்தனன் சூர்கிளை தடிய. (கச)

திங்கண் மூன்றின்மேற் சரவணத் தொதுக்கின டிகமு
மங்கண் மாநில மதுதனிற் காவிரி வடபான்
மங்கு றேய்பொழிற் சூழ்சர காண்டத்தின் மன்னும்
பொங்கு * நூபுர நதிபுகழ் படைத்ததென் றிசையில். (கரு)

ஆரும் வண்புகழ்க் கங்கைதா னதுக்குமஞ் ஞான்றிற்
சாரும் வெண்டிரை யாற்றனித் தனிபிரிந் தம்மா
சீரு றுந்திரு வுருவமோ ராறதாய்த் திகழ்ந்தே
யாரு மின்னதென் றறிவரு மெம்பிரா னிருந்தான். (கசு)

ஏறு சீர்பெறுஞ் சிற்றுரு வாகியே யிருந்த
வாறு மோர்வடி வாகவக் கார்த்திகை மாத
ருறு காதலிற் காத்தன ருமையுட னமலன்
கூறு தற்கருங் கூடன்மா நகர்குறித் தெழுந்தான். (கஎ)

---

* நூபுரநதி - கொள்ளிடம்.

புரந்த ரன்முதற் கடவுளர் புடைநெருங் கிடமேற்
பரந்து பாரிடஞ் சூழ்ந்திடப் பல்லிய மொலிப்ப
வரந்த ருஞ்சர காண்டத்தின் வரும்பொழு தம்மா
சுரந்து தன்முலை பெருகுபால் கண்டுமை சொன்னாள். (கஅ)

ஆர ணம்முணர்ந் தறிவரும் புராதன வடுத்த
கார ணந்தனை யறிகிலேன் சிலீமுகங் கறுத்துப்
பூர ணக்குட நிறைந்துமேற் பொழிந்தெனத் தீம்பால்
வார ணம்பயி லிவ்வுழை வருவதென் னென்றே. (கக)

வேறு.

பனிவரை யீன்ற மாது பகர்மொழி யுணர்ந்து நாதன்
குனிசிலை நுதலாய் கேணின் குமரன்மூ விரண்டு பெண்க
ளினிதுகாத் திடவெ மூஞ்சீர்ச் சரவணப் பொய்கை யின்கட்
புனிதநற் குழந்தை யாகிப் பொற்புறத் தவழ்தல் செய்தான். (உ0)

சாற்றருங் கொடிய னான தாரகா சுரனை வென்று
கூற்றினுக் கிரைகொ டுப்ப வளர்தலாற் கொங்கை விம்மி
யேற்றமாய்ச் சுரந்து தீம்பா லெழுந்தது குமர னுண்ண
வேற்றடங் கண்ணாய் நல்கென் றெருமொழி விளம்பல் செய்தான்.

குளிர்புனற் றனித்த வழ்ந்த குழந்தையைக் கண்டு செய்ய
தளிர்புரை கரத்தாற் றூங்கித் தனஞ்சுரந் தொழுகு தீம்பா
லொளிர்நுத லளித்தா ளுச்சி மோந்தன ளுயுத்தந் தன்னிற்
பிளிறிவெம் பகைவர் காட்டப் பிறங்கெழிற் புயந்தை வந்தாள். (உஉ)

இந்திரன் முதலா யுள்ள விமையவர் தம்மை நோக்கிச்
சுந்தர வாக்கா லம்மை யொருமொழி துயரந் தீர
மந்தர கிரியை மானுந் தாரகன் வலிமை மாற்றுந்
தந்திரக் குழந்தை வேலான் றன்னருள் பெறுமி னென்றாள். (உங)

வேறு.

பொன்னுலகந் தனிபுரக்கும் புரந்தரன்விஞ் சையருரகர் பொற்பு வாய்ந்த, கின்னரர்கந் தருவர்முனி வரர்மிடைந்து புடைசூழ்ந்து கிளர்ந்தி யார்க்கு, முன்னவனுக் குபதேசஞ் செயுமுருகன் முளரிமலர்ப் பாதம் போற்றி, மன்னினரன் னையுமையன் வாவும்விடை தனிலேறி மகிழ்ச்சி பூத்தாள். (உச)

வேறு.

தன்னிக ரரிய மேன்மை தகுசர காண்டந் தன்னிற்
சென்னியா றுள்ள நாதன் திருவவ தாரஞ் செய்யு
நன்மைசேர் சருக்கந் தன்னை நவின்றன னிப்பா லென்று
மன்னிய சிறப்பு வாய்ந்த வரம்பெறு சருக்கஞ் சொல்வேன். (உரு)

திருவவதாரச்சருக்கமுற்றிற்று,

ஆ திருவிருத்தம்-எகூ௦.

---

## வரம்பெறுசருக்கம்.

தொல்லை நான்மறை துதித்திடு மண்ணலுந் தூய
வல்லி யங்குழ லுமையுமீ ராறுதிண் புயமுஞ்
செல்வ நாண்மலர் திகழ்தரு முகங்களோ ராறும்
வல்ல னாகிய குமரனைச் சிந்தைவைத் தெழுந்தார். (க)

அண்ணல் சிந்தனை செய்திட வளர்ந்தன் னனைய
னெண்ணில் பல்லுயி ரளித்திடு மிறைவிதன் னுடனே
கண்ணு மாயிடை யிருந்திடு நற்புகழ் படைத்த
புண்ணி யத்தலங் கண்டுமேற் றென்றிசை போந்தான். (உ)

பொன்னி மாநதித் தென்கரை பொற்புற விருந்த
தன்னை நேரருந் தலப்பெரு மகிமைசாற் றரிதான்
முன்னநீ யெனையு மயூரமாய்ப் பூசைசெய் முறையான்
மன்னி யோங்குமா யூரமா நகரென மாதோ. (௩)

ஒருக ணப்பொழு திலகுமித் தலத்தினி லுறைவோர்
வருபி றப்பில ருருத்திர ருவர்மா ருது
பெருகு காவிரி யிடபதீர்த் தம்படி பெரியோ
ரருமை சாற்றரி திடபவா கனர்களா குவரே. (௪)

என்று நாதன்வாய் மலர்ந்துரை செய்தன னிரண்டு
குன்றெ னத்திக ழிளமுலைக் கோமள வல்லி
மன்றல் சேர்மல ரெடுத்துமா யூரநா யகனை
யன்று பூசைநன் னலம்பெறச் செய்தன ளம்மா. (௫)

புனித மாந்துலா மாதநாண் முப்பதும் பொன்னி
யினிய தீர்த்தநீ ராடியெம் பிரான்றனை யிறைஞ்சிப்
பனிம லர்க்குழ லாள்பரம் பரனுட னெழுந்து
கனிவு கூரவாஞ் சியநகர் கண்டுள மகிழ்ந்தாள். (௬)

அங்கண் மாநிலந் துதித்திடு மங்களாம் பிகையோர்
பங்கி னுன்பதங் கார்த்திகைப் பரிதிநாட் பணிந்து
கொங்கு சேர்மல ராலருச் சனைசெய்து குளிர்நீ
ரெங்க ணும்பொழிந் திலகுமம் மாதமாங் கிருந்தாள். (௭)

கற்ப நூறது கண்டசா யாவன மிலறைஞ்சி
வெற்ப ளித்திடு மன்னைவெண் காடனை வணங்கிப்
பொற்பு வாய்ந்திடு பூந்தரா யண்ணலைப் போற்றி
யற்க ளத்திறை யுடனருச் சுனநக ரணைந்தாள். (௮)

மலர்ந்தி டுங்கழு நீர்நறு மலரினு லம்மை
யிலங்க ருச்சுன நாதனைப் பூசைசெய் தெழுந்து
நலன்கொ ளிந்திரன் வழிபடு நாதனுண் மலர்த்தா
ளலங்கல் கொண்டருச் சனைசெய்து மகிழ்ந்தன ளம்மா. (கூ)

கொண்டல் சூழுமண் ணிப்படிக் கரையொடு குறுக்கை
யண்டர் நாயகன் பதாம்புயம் வணங்கியன் புடனே
வண்டு வார்குழ லாள்சுவே தார்க்கால் வனத்திற்
கெண்டை நீள்விழி மகிழ்ந்திடக் கிளர்ந்துசூழ்ந் தனளே. (க0)

போது சூழ்குழற் கார்த்திகைப் பூங்கொடி மாதர்
பாது காத்திட வளர்முரு கேசனைப் பரவி
யோது மெய்ப்புகழ் வானவ ருடன்பொரு தொழியா
வாது செய்திடு தாரகன் றன்வலி மாற்றி. (கக)

புரந்த ரன்புகழ் பெறப்புரந் தருள்புரி யென்றே
வரங்கள் பற்பல வளித்துநீ வளர்ந்திடு தலத்திற்
பரந்து வைகினர் நினைத்தவர் பாவநீங் கிடுவர்
கரங்கு வித்துனைக் காண்பவர் கண்ணுத லாவார். (கஉ)

அட்ட சித்தியு மாலயன் பதங்களு மன்றி
யிட்ட காமியம் யாவையும் பெறுகுவ ரென்றே
கட்டு வார்குழல் கனிவுகூர்ந் துரைசெய்தென் முலைப்பான்
மட்டி லாதுமேற் பெருகியே வாவிநண் ணுதலால். (கங)

திலக நல்குசித் தாமுதத் துதித்திடு கிருமி
யிலகு மேனைய யாவையு மிமையவ ராகி
யலகி லாதபே ரின்பமேற் பெறுமென வளித்தா
ணலனு யிர்க்கரு ளண்ணலு நல்வரங் கொடுத்தே. (கச)

அயிலி லங்கிடும் வேற்படை யளித்தனன் மேன்மை
பயிலுஞ் சண்முகப் பிரான்பரம் பரன்பதம் பணிந்தே
மயிலை வெள்கிடச் செயுமெழி லன்னையை வணங்கிக்
கயிலை நேர்சர காண்டத்திற் கவின்பெற விருந்தான். (கரு)

வேறு.

விண்ணவர் துயரந் தீர்ந்துபொன் னுலகில் வீற்றிருந் தெழில்பெற விளங்கும், வண்மைசேர் திலகு வரம்பெறு சருக்க வளமெடுத் தியம்பின னிப்பாற், கண்ணகன் புவியிற் றலப்பெரு மகிமை காட்டிய சருக்கவாய் மையினை, யுண்ணெகிழ் மகிழ்ச்சி கூர்ந்திட வறிந்த வாறெடுத் துரைத்தல்செய் குவனால். (கசு)

வரம்பெறுசருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்-எசகூ.

---

## தலமகிமைகாட்டியசருக்கம்.

ஏடக மதுக்கமழ்ந் திலகு கூந்தலாள்
பாடகச் சேவடி படியிற் றோய்ந்திட
வாடக நகர்தனிற் போந்த ரும்பெறல்
வீடகங் கனிந்தருள் பிரானை வேண்டினாள். (க)

அருவரை யளித்தபெண் ணரசி யாய்மலர்
முருகவிழ்த் தளிகண்மொய்த் தெழுந்த சோலைசூழ்
தரும்மா நகருறை தரும நாயகன்
திருவடி யருச்சனை செய்து போற்றினாள். (உ)

கந்துக புரந்தனைக் கண்ணுற் றன்புடன்
சுந்தரப் பசுபதி யீச னைத்தொழு
தெந்தையோங் காரமா நகரை யெய்தியே
சந்திர சேகரன் சரணம் போற்றினாள். (௩)

விருப்பமீ தூரவெற் பரசி பொற்புறு
திருப்பனந் தாளுறை சிவனை யேத்தியே
யிருட்பொலி கண்டனே டெழுந்து சார்ந்தனண்
மருக்கமழ் பொழிற்றிரு மங்க லக்குடி. (௪)

பொற்புறு பூதவ னேசன் பொன்னடி
நற்புது மலர்சொரிந் தேத்தி நல்லெழில்
விற்புரை நுதலினாள் விளங்கு கோடிகா
வற்புத வமலனை யடிப ணிந்தனள். (௫)

மாவடு வெனநலம் வாய்ந்த கண்ணினா
ளாவடு துறையுறை யண்ண லைத்தொழு
தேவடுத் திடுமிடை மருதி னெம்பிரான்
பூவடு பொன்னடி பணிந்து போற்றினாள். (௬)

குடந்தைமா நகருறை குளிர்வெண் டிங்கள்சேர்
மடந்தைபா கனைவலஞ் செய்தி றைஞ்சிவண்
டடர்ந்தபூம் பொழின்மிகு திருவை யாறனைப்
படர்ந்தபே ரன்பினாற் பணிந்து போற்றினாள். (௭)

பாங்கர்சூழ் தலங்களும் பணிந்து பைந்தரு
வோங்கெழிற் றிரிசிர புரத்து றைந்திடுந்
தேங்கமழ் கொன்றைவே ணியன்றன் சேவடி
மாங்குயின் மொழியினாள் வணங்கி நின்றனள். (௮)

திலகவா ணுதலதன் மேற்சி றந்திடு
மலர்சொரி வனங்கொள்வாட் போக்கி மாமலை
யிலகுமீங் கோய்நல்வெண் ணுவ லெம்பிரா
னலமிகு பொன்னடி நயந்து போற்றினன். (கூ)

பொன்னிமா நதியிரு புறத்துஞ் சூழ்ந்துமிந்
தன்னைநே ரருஞ்சிவ தலங்கள் யாவையு
மன்னைபோந் தேத்திமற் றனேக மாந்தல
மன்னுதற் பரனையும் வணங்கிப் போற்றினள். (க0)

இருவர்தே டரியவெம் பிரானி தந்தருந்
திருவிளை யாடல்செய் கூடல் சேர்ந்துள
முருகிட மலர்விழி மகிழ வொண்ணுதல்
பெருகுகா தலிற்றலப் பெருமை யுன்னினள். (கக)

வேறு.

வழிமதுக் கமழும் பொன்னிதழ்க் கொன்றை மலரணி வள்ள லொன் றுரைத்தான், கொழிதமிழ்க் கூட லுறைந்துசுந் தரனுங் கோலம்யான் கொண்டினி திருபப, னெழில்கொழித் திலகு மங்கயற் கண்ணி யிடத்தமர்ந் திந்நகர்ப் புரந்தே, செழியர்கோ னரசு செலுத்தென வம்மை திருவுளம் பெருமகிழ் கூர்ந்தாள். (கஉ)

கவின்மிக வளர்கல் யாணநற் கோலக் காட்சிகண் டிமையவர் முதலாம், புவிதனி லுறைவோர் பொருந்துபே ரின்பப் புணரியின் முழுகியே மகிழ்வார், செவிதனக் கமுதாய்த் துதிதரு தலாத்திற் சேர்ந்திடு பிருகுவா ரத்திற், குவிமுலை மாதர் மைந்தர்கள் வணங்கிற் குலவுகா மியமிகப் பெறுவார். (கரு)

ஈதலா துனைநல் விருச்சிக மாத மிலகிடு தறுவினிற் பூமி
காதலன் வார மிரவிவா ரத்திற் கண்டுபோற் றினர்பல னெடுத்தே
யோதரி தட்ட சித்தியும் பெறுவ ருத்தம மாமெனக் கைந்து
பூதலந் தன்னிற் றலம்புக ழோங்கிப் பொற்புறுங் கூடல்கே தாரம்.

திகழ்திரு வானைக் காநிறை மகிமை சேர்திரு வாஞ்சியந் திருந்தும்
புகழ்மிகும் வயித்திய நாதமிவ் வைந்துட் புண்ணிய நகரமாங் கூட
லகமகிழ் தருமக் கூடன்மா நகரி னதிகமாம் வயித்திய நாத [ல்.
மிகபர மிரண்டுந் தருமெனப் புகன்று னெழுந்தது துந்துபி விண்மே

மலர்மழை வானோர் பொழிந்தன ரம்மை யையனு மகிழ்ந்து
றைந் ததன்பி, னலகில்பல் புகழ்சேர் கணம்புடை நெருங்க வரும
றை முழக்கொலி யன்றி, யிலகிய முழவ மதிர்ந்திட வானோ ரேத்
தொலி கடலென முழங்க, நலமிகு கயிலை சார்ந்தரி சுமக்கு நவமணி
யாசனத் திருந்தார். (கசு)

வேறு.

கவின்பெறு முயர்தலப் பெருமை காட்டியே
நவின்றிடு சருக்கமீ தினிந டுங்கிடக்
குவிந்துவந் தெழுந்துளங் கொதிப்ப வெஞ்சினந்
தவிர்ந்திடாப் போர்புரி சருக்கங் கூறுவேன். (கஎ)

தலமகிமைகாட்டியசருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் - எசுங.

---

## போர்புரிசருக்கம்.

இனைய வேலையிற் றாரகா சுரனெனுங் கொடியோ
னனைம லர்ப்பொழிற் கற்பக நாட்டுறை மகவான்
றனைவெ ருக்கொளத் தறுவளைத் தடுசர மாரி
துனைவில் வான்பொழிந் தெதிர்ந்தெனச் சொரிந்தெதிர்த் தனனே.

அளவி றந்திடு மசுரவெம் படையெழுந் தனேக
வளம லிந்திடும் பொன்னுல கழித்தர மகளிர்
களப குங்கும மணிந்திடு கொங்கையிற் கண்ணீ
ரிளகி வீழ்ந்திடச் செய்தலா லிரங்கிவாய் புலர்ந்தார். (உ)

சுந்த ரத்தரு வளைத்தழற் கணைபல தொடுத்தா
னிந்தி ரன்வரு மசுரன்மார் பிணிலிடு கவசஞ்
சிந்தி வீழ்ந்தது செக்கர்வான் பிறைமுகப் பகழி
பொந்து பட்டிடத் துளைத்துரப் புறத்துரு வியதே. (ங)

வேறு.

தத்துந்திரை யெறியுங்கட றனையொத்திடு தீயோ
ரத்தந்தனில் வடிவேல்சுடர் வாளம்பு பிடித்தே
சித்தந்தடு மாறித்திசை தோறுஞ்சுரர் மடியக்
குத்தென்றனர் வெட்டென்றனர் கொல்லென்றன ரம்மா. (ச)

வரமுற்றிய வசுரத்தலை வர்கள்பொற்புறு வானோர்
புரமுற்றெரி கதுவத்தனி பொருந்தும்புனை மௌலிச்
சிரமற்றன ருரமற்றனர் திகழ்மற்புய வலியக்
கரமற்றன ரலைமொய்த்திடு கடலிற்கிரை யானோர். (ரு)

குடலைக்கழு கொடுபற்பல கொடிபற்றி யிழுத்தே
கடலுக்கிடும் வலையொப்பிட வடருற்ற கறித்த
படருற்றிடு மசுரர்ப்படு குருதிப்புனல் பரவித்
திடர்சுற்றிய தெனவுற்றிடு சிரமொய்த்தது முடுகி. (சு)

இத்தன்மைய ரன்றிப்பொரு திடுதேவரு மசுரர்
தத்தந்தலை வருமுற்றனர் சரமாரி பொழிந்தார்
மொத்துந்திரை யெறியுங்கட லெனமூண்டெழு தீயோர்
சித்தந்தடு மாறச்சுரர் தெய்வப்படை தொட்டார். (எ)

வாசங்கமழ் தருநீழலில் வாசஞ்செயு மிமையோர்
பாசங்களை பிறைவாய்திகழ் பாணங்கள் விடுத்தா
ராசங்கயி லாவாயுத முசலங்க ளெடுத்தே
மோசஞ்செயு மசுரன்றலை வருமொய்ம்பொ டெறிந்தார். (அ)

சுரர்தொந்த வுயுத்தஞ்செய்து தொடர்தீயவர் தம்பா
லரமங்கைய ரிருகொங்கையும் வழிகண்புன லகலப்
பரசும்பல படையும்படு களமெங்கு மதிர்ந்த
முரசுங்கவிழ் தரவற்றது முன்வைத்திடு துவசம். (கூ)

இரதத்துட னிரதத்தலை வர்கண்முட்டின ரிலைவேல்
கரபத்திர மதனுலிடு கவசத்தை யறுத்தே
யுரமுற்றுறு கணைதைத்தொரு விடவிட்டனர் புவிமேற்
சிரமிற்றுட லுருளப்பொரு சிலைபற்றி விழுந்தார். (க0)

புரவிப்படை யொடுபெற்பல புரவிப்படை பொருதி
யிரவிற்றிரி தீயோருயி ரியமற்கிரை யிடுமேற்
பரவிக்கிரி தனையொத்தெழும் படுமாமத கரிசக்
கரவிற்கர வனையோர்தலை காலாலிட றியதால். (கக)

தோலாவர மகிழ்வுற்றுறு துயர்செய்திடு கொடியோன்
காலாள்பரி கரிதேரிவை களுமற்றன கண்டே
மேலாகிய துயரத்தொடு விண்ணோர்க ணடுங்க
வாலாலமெ ழுந்தோடிடு மதுபோல நடந்தான். (கஉ)

வேறு.

மலர்தலை யுலகிற் றவம்பல புரிந்து மந்திர வேள்விக ளியற்றி, யிலகுபுண் ணியத்தாற் பொன்னுல கதனி லெய்திய வானவ ருடனே, குலகிரி போலுந் தாரகன் பகைமேற் கொண்டுபோர்க் களங்

தனிற் சேனை, பலவிறந் ததனுற் சுக்கிரன் பாதம் பணிந்துபற் பல துதி செய்தான். (கங)

சிலைவளைத் தனந்தங் கணைகளைத் தொடுத்துத் திகழும்விண் ணுருஞ்சியே வளர்ந்த, மலைகளைப் பிடுங்கி யெறிந்துகோ ழரைமா மரங்களை முறித்தெதி ரெறிந்து, கொலைபுரி யயில்வேல் விடுத்துவா னவர்தங் கொடுஞ்சம ரிற்பல ரிறந்தார், நிலைகலங் கினராய்க் கணை யுட றுளைப்ப நின்றனர் சிலரெனப் புகன்றான். (கச)

உணவினைத் தேடி விளிந்தனர் சிலர்மற் றுண்ணுநீர் வேண்டி னர் சிலர்மே, லிணரெரி தோய்ந்த கண்ணின ராகி யீன்றிடு தந்தை யைத் தாயைக், குணமிகு புதல்வர் மித்திரர் தம்மைக் கூவினர் சிலர்சில ரென்றே, நிணமொழு கிடும்வேற் றாரகன் பின்னு நின்றி வை யெடுத்தெடுத் துரைத்தான். (கரு)

பணைத்திடு பராரைத் தருவிற்குப் பலம்வேர் பதிந்திடல் பற வைகட் கிறகு, துணைத்தெழு கொங்கை மாதர்கட் குலகிற் றொல்லை நூல் கற்பெனச் சொல்லு, மணைத்திடாக் குழந்தைக் கழுகைபுற் பசுவிற் கரசர்கட் கடர்ந்திடு படைநே, ரிணைததிட வரியா யிறந்த தாற் படைமே லென்செய லாவதென் றிரந்தான். (கசு)

பிருகுசஞ் சீவி மந்திரஞ் செபித்துப் பெரும்படைத் தலைவரை யெழுப்பி, யொருதுளி யிரத்தம் புவிவிழி லசுர ரொன்றுபல் கோ டியா யெழுந்து, பொருதிட வளித்தான் வானவர் குழுமிப் புகழ்பெ று சரவணப் பொய்கை, வருமுரு கேசன் மலரடி போற்றி வந்தனை செய்தனர் வகுப்பார். (கஎ)

வேறு.

சீர்நி றைந்திடு தேவ ரசுரரும்

போர்பு ரிந்த சருக்கம் புகன்றனன்

சார்கொ டுந்திறற் சூரகன் றன்சிரம்
பார்வி ளங்க விழுதல் பகர்வன்மேல். (கசு,

போர்புரிசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - எஅக.

---

## தாரகாசுரசங்காரச்சருக்கம்.

பொற்பமர் பசும்பொன் னுலகில்வா ழிமையோர் புரந்தரன் பொருதிற விழந்தே, யற்பக னீங்காத் துயரமீ தூர வடர்பெருங் காற்றினு லடிபட், டிற்றிடும் பராரை விருக்கமெண் ணரிதா யெங்க ணுங் கிடப்பது போன்று, பற்பலர் வீழ்ந்த பெருங்களம் பார்த்து வந்துதாள் பணிந்துமுன் னிரங்க. (க)

ஆறுமா முகவெம் பிரானுய ரபயங் கொடுத்தணி மணிமுடி சூடி, யேறுகச் சருளு மையன தருளா லிலங்குசே னுபதி யாகிக், கூறுபல் கோடி யசுரரைக் கொன்று கொலைபுரி தாரகா சுரனே, வேறுவே றனேகங் கணைதொடுத் திலகும் வேற்கிரை கொடுப்பனென் றெ ழுந்தான். (உ)

வலம்புரி முழங்கப் பேரிகை யதிர மலர்மழை பொழியவா னவர்தங், குலந்தலை யெடுப்பப் புலோமசை பசும்பொன் குலவிய மங்கல நாணன், னலம்பெற வனேகங் கணம்புடை சூழ நவிலுமெ ண் டிசைகளுக் கிறைவ, ரலங்கல்வேற் குமர நாயகன் திருநோக் களித்திடும் பணிசெய வன்றே. (௩)

அனற்பொறி சிந்துங் கண்ணின ராகி யசுரவெம் படைபல சூழத், தனக்குநே ரிலையென் றெண்ணியே யிறுமாந் திருந்திடு தார

கன் மருங்கிற், சினத்துமுப் புரத்தை யெரித்தவெம் பெருமா னளி
த்திடு தெய்வநா யகன்றன், வனப்புறும் வெற்றிக் கொடியொடும்
வந்து வலன்றரும் பாசறை வதிந்தான். (௪)

இதத்தினை யளிக்கும் வலம்புரி யோசை யெழுந்தது செவிப்
புகும் பொழுதிற், கதத்தொடு சிவந்த கண்ணின னாகிக் காரணம்
யாதென வினவ, மதப்பெருங் கொடிய செம்பனு முதன்மை மந்திரி
சங்கரன் சுதனற், பதத்தினை வானோர்க் களித்திட வேண்டிப் படை
யெடுத் தனனெனப் பகர்ந்தான். (௫)

கணப்பொழு தேனுந் தாழ்த்திடத் தகாது கருதுதி நின்னுயி
ருண்டு, நிணத்தினை யெயிற்றிற் கிரையிடுங் கால நேர்ந்ததெதிர்
நின்றன னென்றே, வணக்கமோ டினைய மாற்றமு முரைத்தான்
வாம்பரி பூட்டிய தேர்மே, லிணக்கமில் கொடிய னேறினன் கவச
மிட்டுவில் லெடுத்தன னெதிர்த்தே. (௬)

அந்தரத் தமரர் சூழ்ந்திட நின்ற வையன்மேல் வைந்துனைப்
பகழி, சிந்தினன் றெய்வ வான்படை யெடுத்தான் றேவர்தங் கோ
மக னுன, விந்திர னுடனே செம்பன்வந் தெதிர்த்தா னிலங்கிய தனஞ்
சய னுடனே, வந்துபோர் புரிந்தான் றெம்பன்வா லெயிற்றுக் கயிட
பன் மறலிமுன் மலைந்தான். (௭)

நிருதிதன் னுடனே முரனுடற் றினன்முன் னின்றிடும் வருண
னோ டெழுந்து, கருமுகில் சூழ்ந்த தென்னமே காட்சன் கணைபல
தொடுத்தனன் சரபன், பொருதினன் வருகாற் றிறையுடன் காலன்
புகன்றிடு குபேரனோ டெதிர்த்தான், சுருதியாய்ந் திடுமீ சானன்
முன் வெகுளி சூழ்சுர தெற்பன்விற் குனித்தான். (௮)

ஓதரும் புகழ்மேன் மண்டலக் கிறைமுன் னூற்றனன் காலக னிலகு, பாதலத் ததிபன் றன்னுடன் கால நேமிபற் பலபடை தொடுத்தான், காதக னுன சம்பரன் சபரன் கண்டகன் கணக்கிலாக் கொடிய, பாதக மிகுந்த சண்டனீள் சுசண்டன் பாரவிற் றனித்தனி குனித்தார். (கூ)

அசரன் முதலா மெழுவர்கள் சூலந் தோமர முதற்பல படைகள், வாசவ னீரே ழுலகினுக் கதிபர் தங்கள்மேற் றொடுத்தெதிர் வளைத்தா, ரீசனூர் புதல்வன் புன்னகை புரிந்தே யிவர்களைக் கடற்கிரை கொடுத்தான், பேசருங் கொடிய தாரகன் பேழ்வாய்ப் பிளந்திதழ் கடித்தெதி ரெழுந்தான். (கo)

வேறு

அரனூர் மகனு கியவை யன்மலர்க்
கரமீ திலெடுத் தனன்விற் கடுநேர்
சரமா ரிபொழிந் தனனன் னவைதைத்
திரமூ டுருவிப் புறமோ டியதே. (கக)

தாவில் வலிபெற் றிடுதா ரகனுஞ்
சேவின் புறுவோ னருள்செம் மல்புயத்
தேவின் சிரமைந் துபுதைத் திமையோர்
கோவின் குலிசத் தையொடித் தனனே. (கஉ)

சூலப் படைதோ மரமா தியெடுத்
தேலக் குழல்பா கனெழிற் புதல்வன்
கோலத் திருமார் பில்விடுத் திருள்கூ
ராலத் தைநிகர்ப் பவடர்ந் தனனால். (கங)

வேறு.

மங்குன் மீது மறைந்துபின் வந்துநின்
றங்கை விற்குனித் தாயிரம் வெங்கணை
சங்க ரன்புதல் வன்றட மார்பினிற்
பொங்கு சோரி பொழிய விடுத்தனன். (கச)

மாயஞ் செய்து வலியவில் வாங்கியா
காய நின்று கணைக டொடுத்தனன்
சேயன் பாகிய தேவர் பதைத்துயிர்
சாய வேதரை மீதில் விழுந்தனர். (கரு)

படைத்த லைவர் பலரிறந் தார்கள்போ
ரிடைக்க ணின்றயி ராவத மெண்ணில்சீ
ருடைப்பெ ரும்வலி மாறியொ டுங்கியே
துடைப்ப ருந்துய ரத்தொடு சோர்ந்ததே. (கசு)

வெய்யன் றேரொடு சாரதி வீழ்ந்திட
வையன் வாளி தொடுத்தன னன்னவன்
கையி லேந்து சிலைவெங் கணையுடன்
வைய மீது குதித்தெதிர் வந்தனன். (கஎ)

தொல்லை நான்மறை தேடருந் தூயவ
னல்லை நேரசு ரன்றனை யங்கையில்
வில்லை நாணுட னிற்றிட வெங்கணை
யொல்லை விட்டுயிர் பார்மிசைத் தள்ளினன் (கஅ)

இரக்க நீத்த கொடியவ னென்னும்வல்
லரக்கன் வாளெடுத் தண்ணன்முன் வந்தனன்
சிரக்கம் பஞ்செய்து சீற்ற மிகுந்திடக்
கரத்தி ரள்வலி காட்டி யுடற்றினன். (கசு)

தரணி நின்று பொருதிடு தாரக
னுருமி ரண்டு பிளவுபட் டோதநீர்
பரவி யேறும் பரவை படிந்திட
வரன ளித்த வயிற்படை யேவினான். (உ0)

வேறு.

எண்ணரிய விமையவர்தந் துயர நீங்க விந்திரன்பொன் னுலகுபுரந் திடச்சு வேத, வண்ண வயி ராவதமும் புகழ்சேர் சங்க மாநிதியும் வளர்பதும நிதியும் வாசத், தண்மலர்க்கற் பகதருவு மகிழ்ச்சி கூரத் தாரகா சுரன்வதையாஞ் சருக்கஞ் சொன்னே, னண்ணலசரீரிவாக் களித்த தூய வருமைமிகு சருக்கமே லுரைப்ப னம்மா. ()

தாரகாசுரசங்காரச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்-அ0உ.

## அசரீரிவாக்களித்தசருக்கம்.

எண்ணில்வா னவர்தமக் கிரங்கி நோக்கிய
தண்ணளி மலர்விழிச் சண்மு கப்பிரான்
வெண்ணிலாத் தவழ்ந்திடும் வெள்ளி மால்வரை
யண்ண லை யகங்குளிர் தரநி னைந்துபின். (க)

தொடுத்திடும் பிருகுசெய் சூழ்ச்சி யையவந்
தடுத்ததஞ் ஞானமோ கிதர்க ளாகியே
படுத்தன ரிமையவர் பரவை மீதுயிர்
விடுத்துறழ் தாரகன் விழுந்த தோர்கிலார். (உ)

நமரிவ ரிவரென நாடித் தேடுநற்
றமர்துணை யின்றியே தனிகி டந்திடு
மமரர்தம் மூர்ச்சையைத் தீர்ப்ப தம்மைபங்
கமர்கன லொழுகுகண் ணுதலே யாகுமால். (ஙு)

என்றுநிச் சயஞ்செய்திவ் வுலக மீதினில்
வென்றிசேர் காசிகே தாரம் வேதம்வர்
தன்றருச் சலெசெயும் வனமை யாறுடன்
றன்றும்வெண் ணுவல்சீர் சூழும் வாஞ்சியம். (ச)

இந்தமா நகரெலா மெழில்கொ ழித்தநல்
லந்திவெண் பிறையணி யண்ண லார்மகிழ்
சுந்தரத் தலமெனத் துணிபு ணர்ந்துதன்
சிந்தையி னினைந்தெதிற் செல்கு வேனென. (ரு)

ஒருமொழி புகன்றன னுலக மீதினிற்
குருபர னுகிய குமர நாயகற்
கருமையொன் றெளிமையொன் ருவ துள்ளதோ
திருவிளை யாடலோ தெளித றேர்கிலேன். (சு)

எண்ணுமப் பொழுதச ரீரி வாக்கெழுந்
தண்ணனீ திருவவ தாரஞ் செய்திடும்
புண்ணியத் தலந்தனிற் போந்து நாதனை
யுண்மைசே ரிருதய கமலத் துன்னியே. (எ)

திருத்தமா நலன்கொள்சித் தாமு தத்தடப்
பெருத்ததீ ரந்தனிற் பெருகும் வானவ
ருருத்தமைச் சேர்க்கமே லூரம்ப டைத்தொளிர்
மருத்துவின் மனுச்சொலஞ் ஞான மாய்ந்திட. (அ)

கயிலைமால் வரைவளர் கண்ணு தற்பிரா
னயிலிணை வேல்விழி யணங்கு தன்னுடன்
பயில்பெரு மகிமைபற் பலப டைத்திடுஞ்
சயிலநேர் விடையுகைத் தவணிற் சார்குவன். (கூ)

என்றவக் கணந்தனி லிமய மீன்றவ
டன்றிருப் புதல்வனுஞ் சண்மு கப்பிரா
னன்றிசேர் வயித்திய நாதஞ் சார்ந்தெறு
மொன்றிய மனுவினை யுளத்தி லுன்னினான். (கo)

ஆருயிர் நாயகன் குறிப்ப றிந்துசூழ்
மாருதம் வானவர் துன்ப முற்றவன்
பாருறு மவர்முதற் பலரை யும்மெடுத்
தேருறை தீர்த்ததீ ரத்தி லெய்தியே. (கக)

வாரமீ தவர்தமைச் சேர்த்து வைத்தபின்
னூரமு தானசித் தாமு தப்புனற்
சீரணி குமரவே டெளித்து ரைத்தனன்
மூரணி புகழ்சிவ கவசந் தன்னையே. (கஉ)

அழுந்திய விண்ணவர்க் கிரங்கி யன்புகூர்ந்
தெழுந்துமுன் னிருடியர் கயிலை யெய்தியே
கொழுந்துவெண் பிறைபுனற் குலவும் வேணியன்
செழுந்தளி ரிணையடி சேவித் தையகேள், (கங)

பொன்னுல கழிந்தது பொருந்தும் வானவர்
மன்னிய பிருகுசெய் மனுவிற் பற்பல
வின்னல்கூர் வியாதியுற் றனரெ ழுந்திட
வுன்னரு ளன்றிவே றொன்று காண்கிலேம். (கச)

என்றுநின் றிரந்தன ரபய மீந்தனன்
கொன்றைநாண் மலரணி யையன் கூறுமீ
தன்றியுங் கயிலைவிட் டகன்றி டாமன்முன்
னின்றன ரருள்பெருங் கால நேர்பெற. (கரு)

கயிலாநா யகன்சிவ கணங்கள் சூழ்தரக்
குயின்மொழி வரமிருத் திகையுங் கொண்டுமேற்
றயிலபாத் திரஙற்சஞ் சீவி தன்னுடன்
பயில்வயித் தியனெனப் பரிந்தெ ழுந்தனன். (கசு)

வேறு.

எய்திவெண் ணீறு முத்திமண் டபக்கூ விளவடி மிருத்திகை யெடுத்துத், துய்யஙற் றயிலந் தொட்டுயி ரளிக்குந் தூயசஞ் சீவி யைப் பிழிந்து, கையிஞ லையன் பூசினன் வானோர் கணப்பொழு தினிற்பிரு கியற்றும், வெய்யநோ யொழிந்து திவ்விய தேகம் விளங்கவே யெழுந்தன ரம்மா. (கஎ)

வேறு.

மிக்கமயக் குறுமோக வஞ்ஞானந் தீர்ந்திமையோர் வேறு ருது
தக்கசரு வாங்கபூ ரணராகி யெழுந்துதயா பரனே போற்றி
செக்கர்வா னந்தனில்வந் துதித்தசிறு பிறையணிந்த செல்வ போற்றி
புக்கவிட முண்டளித்த வருட்கடலே போற்றியென வேத்திநின்றார்.

வேறு.

கண்ணும் பசுந்தே னொழுகிதழி நறுமா மணம்வீ சிடும்வேணி
யண்ண லளித்த வசரீரி வாக்கின் மகிமை கூறினனுய்ந்
தெண்ண வரிய மேன்மைவளர்ந் திலகு தேவ ரருச்சனைசெய்
யுண்மை யான சருக்கமான் மியமேல் விளங்க வுரைசெய்வேன். ()

அசரீரிவாக்களித்தசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - அ௨க,

## தேவராருச்சனைசெய்சருக்கம்.

அலகிலா மகிமை பெற்ற வமரர்க ளடியேம் வாச
மலரினாற் பூசை செய்து மகிழ்ச்சிகூர் விழாவி யற்ற
நலமிகு கருணை செய்ய நாதனே வேண்டு மென்று
ரிலகிய குமுத வாக்கா லிறைவனன் றெனவ ளித்தான். (க)

உத்தமன் பின்னு மன்னோர்க் கொருமொழி யளித்தல் செய்தா
னித்தலந் தன்னி னீங்கு மியற்றுமுன் வினையால் வந்து
நித்தியம் விடாது காயுஞ் சுரமுறைச் சுரநி கழ்ந்து
பித்தமே லிடுஞ்சு ரம்வாய் பேசருஞ் சுரமும் பின்னர். (உ)

துன்னிய சன்னி வாதத் தோடநேத் திரநோய் நீங்காச்
சென்னிநோய் சுவாச காசஞ் செவித்துளைக் குறும்பி மூலங்
குன்மநோய் சுவேத குட்டங் குலைவலி கயநோய் மேக
மன்னிய வகுரித் துன்பம் வடிக்குநீ ரிழிவு மன்றி. (ங)

நகந்தனி லுறுநோய் தந்த நலிவுநோய் மார்ப டைப்பு
மிகுந்துய ருறுநோய் பில்லி சூனிய வேதை கண்டோ
ரகந்திடுக் கிடவே பேழ்வாய் திறந்திடு மலகை வந்து
புகுந்துசுற் றிடுநோய் புள்ளூர் புகுந்திடிற் பயந்து போமே. (ச)

என்றெடுத் துரைத்த மாற்றம் யாவையு முணர்ந்து துள்ளுங்
கன்றுழை மழுத்த ரித்த கரமுமுக் கண்ணும் வெண்ணீ
றொன்றிய மேனி வாய்ந்த வொளியுமன் புருகக் கண்டு
நின்றுபூ நீர்சொ ரிந்து நிமலனைப் பூசை செய்தார். (ரு)

பக்குவ மான வன்னம் பழமிள நீர்பா னீய
மிக்கபா யசந்தாம் பூல விதவகை நிவேத னஞ்செய்
தக்கர வணிந்த வண்ணற் கணிபெறு தீப மேந்தித்
தொக்கவிண் ணவர்க ளாரா தனைசெய்து துதித்தல் செய்தார். (சு)

வசந்தகா லத்தி லங்கு திருவிழாச் செய்து வானத்
திசைந்ததுந் துபிமு ழங்கப் பல்லிய மியம்ப மாத
ரசைந்துநன் னடனஞ் செய்ய வணிகொடென் மலயத் தென்ற
லுசந்திடும் வெப்ப மாற்றி யுறுபதஞ் செயவ மைத்தார். (எ)

தருப்பணங் கவரி தால விருந்தம்வெண் டாள மாலை
திருத்தமா முறைதொ டுத்துத் திகழ்ந்தவெண் குடைவி ளங்கு
முருப்பொலிந் திலகு மற்று முளவுப சாரஞ் செய்தே
விருப்புறு சீத ளஞ்சூழ் மிகுபணி பலவுஞ் செய்தார். (அ)

வேறு.

அருள்பழுத் திருந்த வைய னநுமதி பெற்று மேலாந்
தெருள்வலி யுளராய்த் தேவர் கோன்முத லிமையோர் செவ்விப்
பொருண்மிகுந் தொளித யங்கும் பொன்னுல கதனைச் சேர்ந்தே
யிருணிறத் தசுரர் செய்தீங் கினையொழித் திலகி னரால். (கூ)

வேறு.

இலகிய விரதந் தவம்பல புரிந்தே யேழுல கமும்புகழ் நிறைய
வலகிலா மகிமை பெற்றிடுந் தேவ ரருச்சனை செய்திடு சருக்கப்
பலவள மதனைப் பகர்ந்தன னுள்ளம் பரிந்துவா லாம்பிகை யம்மை
குலவிய மலரா லருச்சனை செய்யுஞ் சருக்கமேற் கூறுவன் குறித்தே.

தேவரருச்சனைசெய்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - அ௯க.

---

## வாலாம்பிகையருச்சனைசெய்சருக்கம்.

அஞ்சிறைத் தும்பி யின்னிசை தொடுப்ப வணிகொள்பூந் தாதி
றைத் தலரு, மஞ்சரி நெருங்குஞ் சோலையின் மருங்கு வள்ளவாய்க்
கமலநாண் மதுவார்ந், தெஞ்சலில் சுனைகள் பற்பல மல்க விறை

வனு மிலகுமம் பிகையும், விஞ்சையர் முனிவர் விண்ணவர் சூழ வெள்ளியங் கிரியில்வீற் றிருந்தார். (க)

தெண்ணிலாத் தவழுஞ் சிறுபிறை யணிந்த தெய்வநா யகன் சிவ கணங்க, ளெண்ணரும் பூத கணம்புடை சூழ விலகுமா ணிக் கம்வைத் திழைத்து, வண்ணநல் லெழில்வாய்ந் திருந்தவா சனத்தின் மன்னிவீற் றிருக்குமப் பொழுதி, னுண்ணிறை காத லுமையுடன் முத்தி மண்டப மொளிசெயப் போந்தான். (உ)

விளங்கிழை முத்தி மண்டபச் சூழல் வியப்புறு தென்றிசை சார்ந்து, கிளர்ந்தபூ வுலகிற் செலநினை பொழுதிற் கெழுமுதன் னெழிலினை நோக்கி, யளந்திடி னென்னநேர் மகளிரும் புருட ரைய நின் றனைநிகர் சொல்ல, வளம்பெறு மவரு மிலையென வியந்து மகிழ்ந்திறு மாந்தனள் வகுத்தாள். (ந)

அற்றைஞான் றையன் மறைந்தனன் புகழ்சே ரற்புத வடிவுள ராகி, நெற்றியிற் கண்ணு நான்குதிண் புயமு நீறணி மேனியு நீண்ட, கற்றைவார் சடையு நீலகண் டமுமான் மழுவும்வாய்ந் திலே ளத் திரமும், பெற்றவ ராகி யனேகர்கண் ணுற்றுர் பெய்வளை பார்த்ததி சயித்தாள். (ச)

திலகவா ணுதலாள் கண்ணினுக் கெதிர்பின் றுேன்றினன் றிரு ந்துநல் லெழில்கூர்ந், திலகிடு மிமய மால்வரை யளித்த விளங் கொடி யாரிவ ரென்று, ணிலமிசை வயித்திய நாதநற் றலத்தி னெ ழிழ்மது மலரினுற் பூசை, நலமிகச் செய்த பேரென நவின்று னயந் தருச் சனைசெய நினைந்தாள். (ரு)

அண்ணலே யனைய தலத்துனைப் பூசை செயவரு ளென்றனை ளளித்தான், வண்ணவார் கூந்த லிலகுகோ மளவா லாம்பிகை யுருவமாய்த் தொளிசே, ரெண்ணில்பன் மணிலைத் திழைத்தபொன் விமானத் தேறின ளுருத்திர கணங்கள், விண்ணவ ரமா மக ளிர்க ளனேகர் மிடைந்திரு புறத்தினு நிறைந்தார். (சு)

முழவொலி யாழி னிசையொலி வேத முழக்கொலி யமுதமூற் றிருக்குங், குழலொலி மணிமே கலையரம் பையர்பூங் குயிற்குரற் பாடலி னெலிமென், மழலைவாய்ப் பசும்பொற் சதங்கையி னெலி தா மரையடிச் சிலம்பொலி யெழுந்து, தொழவரு மன்பர் துதித் திடு மொலியெண் டிசைதொறுஞ் சூழ்ந்தது தொடர்ந்தே. (எ)

மரகத மயில்பொன் மலையினிற் றங்கி வந்தென விமானத்திற் போந்து, விரவுமா னந்த வொளியுரு வாகி விளங்குகே தாரமாந் தலத்திற், கரமலர் குவித்து நின்றுகண் ணருவி பாய்ந்திடக் கனிந்துள முருக, வரவகங் கணக்கே தாரநா யகனை யருச்சனை புரிந்தன ளம்மை. (அ)

திங்கள்வா ணுதல்வாய்ந் திலகுமம் பிகைவெண் டிரைநுரை யொடுசுழித் தோடுங், கங்கைசூழ் காசி மாநக ரதனிற் கவுன்மதம் பாய்கடுஞ் சீற்ற, வெங்கரி யுரிவை போர்த்திடுங் கருணை விசுவநா தனையருச் சனைசெய், தங்கண்மா நிலத்தின் மகிமைசேர் நைமி சாரணி யந்தனிற் போந்தாள். (கூ)

கற்பகா லங்கள் பற்பல கண்டு கழித்தருந் தவம்புரிந் தழியாப், பொற்புறும் வேள்வி செய்தகத் திருளைப் போக்கிமெய்ஞ் ஞானசூ ரியன்போன், றற்புத வடிவம் வாய்ந்திருந் திடுமெம் முனிவர ரனே

கருக் கருள்செய், தெற்பணி பூண்டங் கெழில்கொழித் திலகு மிறை வனை யருச்சனை செய்தாள். (கல)

குலவிய குருக்கேத் திரத்திலி தமர்ந்த கொன்றைவே ணியன் றனை வணங்கி, யலகில்வண் புகழ்சேர் திருச்சயி லத்தி லங்கண னிணையடி பணிந்து, பலதுதி வேத வாக்கிய மதனுற் பரவிநீ ணதி பல கடந்து, நலமிகுந் திடுபொன் முகலிசூழ் மலைவா னண்ணுகா ளத்திவந் தனளால். (கக)

செம்பொன்மால் வரையின் றெடுத்திடுஞ் செல்வி திகழ்தணி மலைதனில் விளங்கு, மம்பிகா பதியை யரியகா ளத்தி லையயனைப் பூசைசெய் தெழுந்து, கம்பைமா நதிசூழ் காஞ்சிமா நகரைக் கண்டு கண் களித்தருள் பழுத்த, வெம்பிரா னேகாம் பரனைநாண் மலரா லெழில்பெற வருச்சனை செய்தாள். (கஉ)

அருணைமால் வரையை வலஞ்செய்து வணங்கி யருள்கொழித் திருந்திடும் விருத்த, கிரியுறை யிறைவன் பொன்னடி பணிந்து கிளர்மறைச் சிலம்பொலி கலிப்ப, வரிவிழி மாது கண்டுளங் களிப்ப மன்றுளே நடம்புரிந் திலகுங், கருணைநா யகனைத் தாமரை மலர்ச் செங் கைகுவித் தருச்சனை செய்தாள். (கங)

அள்ளிலை நெடுவேற் கண்ணுமை திருச்சிற் றம்பல மகன்று தென் றிசைசூழ், கொள்ளிடங் கடந்து காழிமா நகரிற் குலவுபொற் றுேணிவீற் றிருக்கும், வள்ளலைப் பிரம புரீசனைச் செழுந்தேன் மல ரினு லருச்சனை செய்து, வெள்ளெருக் கிலகும் வனந்தனைக் கண்டு மிகுமகிழ் கூர்ந்தனள் வியந்தே. (கச)

நறுமணங் கமழ்பூஞ் சோலையு நளின வாவியு நவமணி யிழைத்து, நிறுவுபே ரொளிசூழ் விமானமும் விசும்பி னிணிலை யிலகுகோ

புரமு, மெறும்படைத் தெழுந்தே யுயர்ந்தபொன் மதிலு மெழில் கொழித் திருக்குரால் வீதி, யுறுபெருஞ் செல்வ மாடமா ளிகையு முமையுள முருகிடப் பார்த்தாள். (கரு)

வேறு.

உளத்தின்மகிழ் கூர்ந்தவள்புள் ளிருக்கு வேளூ ருயரெல்லை மருங்கினிலைனத் தெனவென் றுன்னி, யளப்பரிய பரிசனஞ்சூழ்ந் திடவி மான மதினின்று மிறங்கிவளர் வாலை யாகி, வளத்தினுட னிருந்தசித்தா முதநீ ராடி மன்னுமொளி நீறணிந்து மணங்கு லாவி, விளக்கமிகு குங்குமநன் னுதலி னிட்டு மேகலைதண் டிகைதரித்து விரைந்து போந்தாள். (கசு)

வேறு.

பெற்றிமிகு சந்திரகாந் தத்தகடு பரந்தபிரா காரஞ் சூழ்ந்து, பொற்றெடியா லயம்புகுந்து விளங்குபே ரானந்தப் பொலிவு தோன்ற, நெற்றியிற்கண் படைத்திருந்த நிமலன்வயித் தியநாத னிணைத் தாள் போற்றி, யுற்றபெருங் காதலுடன் விதிமுறையாற் பூசைசெய வுன்னி நின்றாள். (கஎ)

நலன்செய்மணங் கமழ்தருமஞ் சனந்தயில மான்பால்வெண் டயிர்நல் வாசங், கலந்திடுகுங் குமங்கோரோ சனையிளநீர் கனிதேன் செங் கரும்பின் சாறு, டிலங்குசருக் கரைநறுநெய் யிளவெந்நீ ரின்னமபி டேகத் துள்ள, நலங்குதிர வியத்தொடுசேர் தனக்குழம்பு திருமுடிமேற் சொரிந்து பின்னர். (கஅ)

ஒற்றுடை சாத்திவெண்ணீ றணிந்திழைவாய்ந் திடுமாடை யுடுத்துத் தோண்மேற், பொற்பூண நூல்சாத்திக் கதிர்மகுடந் தரித்து மணிக் கலன்கள் பூட்டி, நற்போதி னெடுவில்வ நறுந்தொடைய

லலங்கரித்து நயந்து தூப, மெற்போன்று சுடருமணித் தீபமெடுத் திலகுநிவே தனங்க ளெல்லாம். (கக)

பற்பலபொற் றளிகையினிற் பரிந்தமைத்துப் பெருந்தீப மெ டுத்துப் பாங்க, ருற்றிலகு சோடசநல் லுபசாரத் துடன்பூசை யுரி மை யாக, விற்பொருவு நுதலுமையாள் செய்துவளர் வேதபாக் கியத்தா லைய, னற்செவிக்கி னமுதமெனத் துதிசெய்தாண் முழ வொலிநான் மருங்கு மல்க. (உ0)

வேறு.

ஐயன்வாய்ந் திடுபே ரன்பினுற் செய்யு மருச்சனை யுவந்தெ ழில் கொழிக்கு, நெய்தவழ் கூந்த லம்பிகைக் கிலகு நித்திய யௌ வன மளித்தா, னெய்துதற் கரிய விடதுபா கமுமீந் தனனெழின் மகிழ்ச்சிகூர்ந் திருந்து, வையகந் தன்னில் வருமவர் விழையும் வரந் தர விளங்கின ளம்மா. (உக)

வேறு.

அளவில்பல் லுயிர்க்கெலாம் வரம ளித்திட
வளரும்வா லாம்பிகை பூசை மான்மியத்
துளவள முரைத்தன னுலகு ளோர்க்கரு
டெளிதரு திருவிழாச் சிறப்புச் சொல்வன்மேல். (உஉ)

வாலாம்பிகையருச்சனைசெய்சருக்கமுற்றிற்று.

ஆ திருவித்தம்-அ௫ரு.

---

## திருவிழாச்சருக்கம்.

பொற்புறுபூங் கமலமிசை யினிதுறையு நான்முகனிப் புவன வீதி, னற்புகழ்பெற் றிடுவேத முதலெந்நூல் களுநவிலு மகிமை நன்

புற், றற்புதமா கியவயித்திய நாதமணேந் தெண்ணரிய வமரர் சூழப், பற்பலபல் லியமுழங்க வையனிணை யடிக்கமலம் பணிந்தான் மா தோ. (க)

வேறு.

ஆரணந் தேடிக் காணு வையனே போற்றி மூல
காரண போற்றி யுன்னுங் கற்பனை கடந்தாய் போற்றி
தாரணி தன்னிற் றோன்றாத் துணையதா யிருந்தாய் போற்றி
வாரணி செம்பொற் கொங்கை மங்கைதன் பங்கா போற்றி. (உ)

வேறு.

பரிவுமிகப் பணிந்திணைய துதிசெய்து கண்ணருவி பாய நின்று, புரிகருணை யுனதுமலர்ப் பொன்னடியை யருச்சனைசெய் துலகம் போற்றுந், திருவிழவு செயவென்றான் றெய்வநா யகன்றிருவாய் மலர்ந்து செம்பொன், விரிசிறகோ திமமூரும் வேதன்முகந் தனை நோக்கி விளம்ப லுற்றான். (ஙு)

மலைவளர்கா தலிவயித்திய நாதமகி மையையுணர்ந்து வணங்கி மேலா, நிலைமையெனை யிணையதோர் தலத்திலருச் சனைநியமம் புரிந்து செய்யத், தலைமைபெறும் வேதவாக் கியமதனாற் றுதிசெய்து தகுதி யோங்கு, மிலைநெடுவேல் விழிகளிப்ப வரம்வாங்கி யெழுந்து மகிழ்ந் தியற்றும் பண்பால். (ச)

நின்மனத்தன் புறும்வரம்யா னெவ்வாறு தாத்தகுநீள் வெள்ளி வெற்பும், வன்மைபெறு சூலமுமிப் பொழுதுவிட்டு விடுவன்மகிழ்ந் தன்பர்க் கீந்த, நன்மைபெறும் வரந்தன்னைத் தள்ளியான் விடநினை யே னயந்து மாது, தன்மைவியந் தவளருள்பெற் றினியதிரு விழாச் செய்யத் தக்க தென்றான். (ரு)

வள்ளலளித் திடுமினிய வாக்கதனைச் செவிக்கமுதாய் மன்னி யோங்கு, முள்ளமகிழ்ச் சியினுடனே யம்பிகையைப் பணிந்துதுதித்

தன்னுன் சிந்தை, கொள்ளவிழைத் திடும்வரம்யான் றருகுவன்கே ளென்றனள்பூங் கொன்றை வாய்ந்த, வெள்ளநதி யணிவயித்திய நாதனையான் பூசைசெய்ய விழைந்தே னென்முன். (சு)

அனையவரந் தரத்தகுவ தன்றுநா னிதம்பூசை செய்த லானீ, நினையும்வரந் தருவனென வுரைத்தமொழி தவருது நினக்கஃ தீந் தே, னனையவிழு மலரெடுத்தே நலன்சேருந் திருவிழா ஞான்றி னையன், றனையிலகு மருச்சனையான் செய்வனிடை யூறுதவிர்ந் துய் ய வென்முள். (எ)

இடபவா கனக்காட்சி தருமைந்தாந் திருவிழா வினிலி லங்கு, படவரவந் தரித்தபிரான் றனைப்பூசை செயின்யாவும் பலிக்கு மை ந்து, தொடர்வுபெறு சிவபூசை நூனதோ டமுந்திருந் தூயன் றன் னை, யுடலின்மயிர்ப் புளகமுறத் தரிசித்தோர் பலனெண்ணி யுரைப் பார் யாரே. (அ)

ஈனமுறு நானம்வரச் சிவபூசை பண்ணுகிற தில்லை யென்று ஞானநா யகனையுல குறுதிபெற நன்னியமம் புரிந்தேன் முன்ன மானதினல் வருமைந்தாந் திருவிழா வினிற்பூசை செய்வே னுய்ந்த போனகமற் றுளவுபசா ரமுஞ்சைவா கமம்புகலும் விதியாலென்முள்

ஆயநறு மலரெடுத்தே யண்ணலிணை யடியிலருச் சனைசெய் போதிற், றூயமணங் கமழ்தூபஞ் சுடரெழுந்தீ பமுநிவே தனமுஞ் சூழ்ந்து, காயநில முறப்பணியு முபசாரங் கடந்தவப சாரம் யாவும், பாயும்விடை யண்ணலைந்தாந் திருவிழாத் தரிசனஞ்செய் பலனு னீங்கும். (கo)

தக்ககுருத் துரோகமுதற் சகலபா வமுந்தீருந் தன்வா யூறு, மிக்ககோ ழையையுமிழ்தல் வைதல்கோ பித்தல்வே றென்று பே சல், புக்கவா சையிற்பூசா காலமதிற் புதல்வனைப்பா ராட்டுந் தோ

டங், திக்கினைவிட் டோடுமைந்தாங் திருவிழாத் தரிசனஞ்செய் தவர்கட் கென்றான். (கக)

அம்பிகைசெங் குமுதவாய் மலர்ந்துரைத்த மொழிசெவிக்கின்னமுதாய் வாய்ந்த, செம்பதும மலருறையு நான்முகனன்னனுக்கிவைவின் னப்புஞ் செய்தே, யும்பர்தொழு மன்னவன்றன் னருள்பெற்றுத் திருவிழா வுபசா ரங்க, ணம்புபெருங் காதலினூற் செய்தனன்மற் றவைதெரிந்து நவில்வார் யாரே. (கஉ)

பொன்னுலக மகிழ்ந்துபூ வுலகில்வந்தே யிருந்ததெனும் பொற்பு வாய்ப்ப, நன்மைபெறு சங்கநிதி பதுமநிதி நவிலரிய மகிமைசூழ்ந்து, மன்னிவளர்ந் தோங்குசிந்தா மணிதேனு கற்பகமற் றுளவுமன்றிப், பன்னுபுக ழளகேசன் படைத்தநிதி யமும்பரந்து நிறைந்த பாங்கால். (கரு)

ஒளிசெய்சுதை தீற்றியெழில் கொழிக்குமணி மாடமுயர்ந் திடுமா காய, வெளிமுகடு தொடும்வீதி விளங்குமணிச் சுவர்த்தலமிங்குலிகச் சேறு, தெளிகுழம்பு தோய்த்தெழுது சித்திரம்பொற் புறுந்தெற்றி தோறுந் தென்றல், குளிர்நிலவி னுடன்வீசக் கோதையராடவர்மகிழ்ச்சி கூர்ந்து நின்றே. (கச)

விரவுமொளி வயிரநெடுங் கானிறுத்தி மாணிக்க விட்டஞ் சேர்த்த, மரகதப்பந் தரிற்பவள மணித்தொங்க லூற்றிமா செறிந்து வாய்ந்த, தரளமணி யெழின்மாலை தொடுத்திளநீர் கமுகரம்பைத் தாறுதூக்கிப், பரவுநெடு வீதியணி பெறவாயி லிருபுறம்பண் புறவே செய்தார். (கடு)

வெள்ளிபசும் பொன்னமைந்த விளங்குபூ ரணகும்பம் வீதிதோறு, மள்ளிலைவேல் விழிமாதர் மணிமேடை யலங்கரித்து வைத்தா ரள்ளித், தெள்ளுபனி நீர்க்கலவை தெளித்தனர்பொன் னிறங்

கொள்சிற குளர்ந்து செங்காற், புள்ளலம்பு வாவிதிகழ் செங்கமலப் போதுபரிர் திறைத்தார் மாதோ. (கசு)

அண்ணல்வயித் தியநாதன் திருவிழாப் பெரியகொடி யேற்ற மாலோன், வெண்ணிலவு சொரிந்திடுசுக் கிலபக்கப் பங்குனிமா தத்தின் மேவி, நண்ணியகார்த் திகையாகு மிடபவா கனக்காட்சி யதிதி நாளா, முன்மைபெறு மாயிலிய மிரதமா முத்தரநற் றீர்த்த மாமால்.

என்றெழுதிப் பத்திரிகை யெடுத்துமருத் துவர்செங்கைத் தலத்தி லீந்து, வென்றிமிகு மிந்திரன்கந் தருவர்முனி வரரியக்கர் விண்ணோர் சித்த, ரன்றியுல கீரேழி னுறையுமவர்க் கினியமங் களமா யாரும், வன்றிறல்சேர் வாகனத்தின் வரத்தக்க தென்றுரைத்து வருமி னென்றான். (கஎ)

வேறு.

இலகுபத் திரிகை தன்னி லெழுதிய துணர்ந்து செம்பொ
னுலகிலுள் ளவர்க ளண்ட கோளகை யுறைவோர் மற்றும்
பலப்பல வுலகில் வாழ்வோர் பருப்பதத் தினிலி ருப்போ
ரலகிலா மகிழ்ச்சி பொங்கி யெழுந்திட வெழுந்தா ரன்றே. (கக)

குணகடல் கிழக்கு வாய்மை குலவும்வா ளொளிபுத் தூர்மேற்
கிணைதரும் வடபாற் றென்பா லிலகுபன் மணிகொ ழித்தே
யுணவினித் தமுதாய் வாய்ந்த வுபயகா விரியி னுப்ப
ணணையுநான் கெல்லை சூழ்ந்தா ரதன்புற மருங்கு நின்றார். (உ0)

எங்கணு மன்ன சாலை யெண்ணிட வரிதாய் வந்தோர்
தங்கிடற் குவகை பொங்கத் தனித்தனி சமைந்த சாலை
யங்கணன் றனக்கி யைந்தே யணிபெறும் யாக சாலை
மங்கள கரம்வி ளங்க வளஞ்செழித் திருந்த மன்னோ. (உக)

பஞ்சம சுத்தி மற்று முளவனு கூலம் பார்த்துக்
கஞ்சநாண் மலரோ னுள்ளக் கனிவொடுங் கொடிதா னேற்றி
யெஞ்சலி லுபசா ரங்க ளெழில்பெற வியற்றி யண்ணல்
செஞ்சர ணம்ப ணிந்து திருவிழா விளங்கச் செய்தான். (உஉ)

வலம்புரி முழங்க வேத மறையவ ரோத வான்மீ
திலங்குதுந் துபிக லிப்ப வேழிசைப் பாட லோங்க
நலங்கொண்மத் தளந்தொ னிப்ப நடம்பயின் மாத ரம்பொற்
சிலம்பொலி பரம்பத் தாளங் கணீலெனத் திகழ்ந்த தெங்கும். (உ௩)

வேறு.

சிங்கமுகக் கொடியாளிக் கொடியிடபக் கொடியன்னக் கொடி செஞ் சூட்டுப், பொங்குசின மிகுங்கோழிக் கொடியலகைக் கொடி மகரக் கொடியிப் பூமி, யெங்கும் விளங் கிடுங்கீர்த்திக் கொடியுடனே யெடுத்திலகப் பிடித்தார் விண்ணோர், பொங்கியிடு பூமாரி பொழிந்த னர்யா வருமகிழ்ச்சி பூத்தார் மாதோ. (உ௪)

மயில்விசிறி மயிற்பிச்சங் கண்ணாடி சுருட்டிசா மரையீ யோட்டி, வெயிலுமிழ்ப்பூச் சக்கரவா ளக்குடைசூழ் வெண்கொற்றக் குடைமா ணிக்கங், குயில்பசும்பொற் குடைவெள்ளிக் குடைமுத்துக் குடைபவளக் குடைசெ றிப்ப, வயில்விலகி யிடுமீட்டி படைவான்மு னனந்தந்தீ வர்த்தி யார்ந்த. (உ௫)

வேறு.

அல்லியங் கமல மேவு மயன்பரிந் தியற்று மேலா
நல்வர மளிக்கு மைந்தாந் திருவிழா வினின லஞ்சேர்
மெல்லிய லுமைபே ரன்பால் விதிமுறை பூசை செய்தாள்
செல்வவே ளண்ணல் பூசை செய்துவேல் வாங்கி னானால். (உ௬)

அருமையாய் வீதி தன்னி லலங்கரித் திடுந்தே ரூர்ந்து
வருவது தரிச னஞ்செய் மகிழ்ச்சியைப் பெற்று வாய்ந்த
பெருமைசேர் பருவந் தன்னிற் பெரும்பய னளிக்கு மையன்
திருவுளப் பாங்காய் வாய்ந்த தீர்த்தநீ ராடல் செய்தான். (உஎ)

அலகில்பல் புவனத் துள்ளோ ரனைவரும் விருப்பங் கூர
நலமிகு முகமன் கூறி நவமணி சொரிந்து செம்பொ
னிலகிய விமான நல்கி யேனைய பலவுஞ் செய்தே
மலரவ னன்னோ ருள்ள மகிழ்ந்திட விடைகொ டுத்தான். (உஅ)

வந்திடு மனந்த கோடி முனிவர்விஞ் சையர்கள் வானோ
ரிந்திர னிலகு மீரே மூலகினி துறைவோர் யாருஞ்
சுந்தர வயித்திய நாதன் றுணையடிக் கமலம் போற்றிச்
சிந்தையின் மகிழ்ச்சி கூர்ந்து திருந்துதம் முலகஞ் சேர்ந்தார். (உகூ)

எண்ணிலா வுயிர்கட் கெல்லா மிலகுபே ரின்ப மெய்த
வண்ணலுக் கமைந்த தூய திருவிழாய்ச் செய்தே யண்ண
றண்ணளி கூர்ந்து நல்கும் வரம்பல வேற்றுச் சார்ந்த
வெண்ணிறக் கொடியின் போத மேவினன் பிரம லோகம். (ங0)

வேறு.

பிரமன்வா னவர்கள்பே ரின்ப மெய்திட
வருதிரு விழாச்செய்நன் மகிமை கூறினே
னருள்பொழி குமரநா யகன ருச்சனை
புரிதரு சருக்கமற் பொற்பு ரைப்பன்மேல். (ஙக)

திருவிழாச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-அஅச.

---

## குமரநாயகனருச்சனைசெய்சருக்கம்.

அய்யனளித் திடுமினிய வசரீரி வாக்கதனை யன்பு கூர்ந்து
அய்யசர காண்டவனந் தனிவிருந்தான் சுருதியிசை மல்கச் சூழ்ந்து
செய்யசய சயவென்னுந் திருந்துபே ரிசைபல்கத் திகழ்பூ மாரி[தோ.
வையகம்பொற் புறநல்க மன்னியயா ழொலியெழுந்து முழங்க மா

பொற்புமிகு குமரநா யகனிலகு குணதிசையைப் பொருந்து மேலா, நற்புகழ்மங் களம்பெறுதற் குரியர்விழை குவரென்றே நய ந்து நோக்கிப், பற்பலநன் முழவினெலி பரந்திடப்பே ரன்புநெகிழ் பரிவு கூர்ந்தே, யற்புதமெய் திடவிருந்தா னண்ணலும்வெண் கபி லையகன் றவணிற் சார்ந்தான். (உ)

பங்குனியின் முதற்பக்கம் பயின்றதிதி பதினொன்றிற் பரிதி கீழ் பாற், செங்கதிர்பொற் புறவுதயஞ் செயுங்கால மிலகுசெவ்வாய்க் கிழமை சேரும், பொங்குபுகழ் பெறுதினத்திற் பொருந்தியவா யிலி யநாட் புனிதன் மேவ, வெங்குமெழில் பெறத்தழைந்தே யிருக்கு நிம்ப தருமூல மிலகிற் றன்றே. (௩)

இலகிடும்பச் சிமதிசைபார்த் தெதிர்முகம்பொற் புறவிறைவ னிருந்தான் மேன்மை, குலவியசித் தாமுதநற் குளிர்திரப் பாங்கரு ருள் கொழிக்கு மம்மை, பலன்விழைவோர்க் கினிநோக்குந் திசை வடபா லெனநினைந்தோ பரிவு கூர்ந்து, நலமிகுதென் றிசைநோக்கி நல்வரந்தந் திடநயந்தே யிருந்தா ளம்மா. (ச)

வருகுரவர் தமைக்கண்டு மகிழ்ந்துதிரு மஞ்சனமு மலரும் வா சம், பெருகுநிவே தனமும்வகை பெறவமைத்தே நிறைதருபே ரன் பா லையன், திருமுடிமே லபிடேகஞ் செய்துசெழு மலரணிந்து

திகழ்நல் லன்ன, முருகுநறு நெய்யொழுகு முபகரண மளித்தொ ளிசெய் தூப மேந்தி. (ரு)

அண்ணலருள் பொழிமுகமண் டலமிலகக் கொடுத்தமைந்த தீப மேலோ, ரெண்ணிடுமீ ரெண்வகைநல் லுபசாரம் யாவையுஞ் செய் திலகும் வாக்காற், பண்ணமைந்த துதிசெய்து பணிந்துபர வசமாகிப் பண்ணும் பூசை, யுண்மைதனே யுவந்தையன் விழைந்தன நல் கினனுலக மகிழ்ச்சி யோங்க. (சு)

அம்பிகையு முச்சிமோர் தன்புகூர்ந் தனள்பசுந்தே னவிழுந் தூய, செம்பதும மலர்போலுந் திருவடியை வணங்கிமுரு கேசன் சேவூ, ரெம்பெருமா னேயெனது நாத்துதிப்பக் கரமலர்கொய் தெடுத்துச் சாத்த, நம்பிடுமென் பர்க்கருள்செய் தாளிணையென் முடிவணங்க நாள்க டோறும். (எ)

எனதுவிழி யருண்மேனி யினைத்தரிசித் திடநாசி யிலங்குங்கொன்றை, வனமலரி னறுமணமின் புற்றிருப்பச் செவிநினது புகழின் வாய்மை, யனவரதங் கேட்பவரு ளளித்திடவேண் டினனென்று னைய னல்கித், தனதுதளிர்க் கரத்தினுற் றைவந்தான் மகிழ்ச்சிமிகத் தழைந்தே பல்கால். (அ)

எழில்கொழிக்குஞ் சரகாண்ட நிம்பவனத் தமர்ந்திடுநின் றனையெஞ் ஞான்றம், வழிபடுமென் பினரிட்ட காமியமும் பெறவரங்கண் மகிழ்ந்து நல்கிப், பொழிமதுரத் தமிழ்ச்சங்கப் புலமைதெரி யறிவுடைய புதல்வர்ப் பேறு, மொழிவரிய பொன்னுலக முதன்மேலாம் பதவிமுழு வதுநல் கென்றுன். (கூ)

நின்னைமுனம் பணிந்துருகி நின்றுதுதி செய்துநின தருள் பெற் றப்பா, லென்னவணங் கினர்தமக்கித் தலவாசஞ் செயும்பல

மற் றிலகு மேன்மை, பன்னவளர்க் திடுபுரா ணங்கேட்கும் பலன் பலிக்கும் பணியார் தங்கட், கன்னியமப் பலனீங்கி விலகியிடு மிஃ தண்மை யாகு மென்றே. (க௦)

நீர்தாங்குஞ் செஞ்சடில நிமலனுரைத் தனன்பசுந்தே னிகழுங் கொன்றைத், தார்தாங்கு மன்னவன்ற னன்புறுசண் முகப்பெரு மான் றயங்கு செம்பொன், வார்தாங்கு களபமுலை வள்ளிதெய்வ யானையிரு மருங்குஞ் சூழப், பார்தாங்கற் கரியவிமை யவர்குழாம் பணியவீற் றிருந்தான் பாங்கால். (கக)

வேறு.

அய்யனைக் குமரநா யகன ருச்சனை
செய்திடுஞ் சருக்கமான் மியச்சி றப்பினை
யுய்தர வுரைத்தன னொளிருஞ் செஞ்சுடர்
வெய்யவன் பூசைசெய் சருக்க மேற்சொல்வேன். (கஉ)

குமரநாயகனருச்சனைசெய்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - அகூசு.

---

## ஆதித்தனருச்சனைசெய்சருக்கம்.

அலகில்சீர் மகிமை வாய்ந்த தக்கனுக் கதிதி யென்றே
யிலகெழில் படைத்த கன்னி பிறந்தினி திருந்தாள் வாய்மை
குலவுகா சிபனுக் கன்னோன் கொடுத்தன னவள்வ யிற்றிற்
பலகிர ணங்கள் சூழும் பரிதிவா னவனு தித்தான். (க)

அன்னவன் பாரி சாயா தேவிமற் றவட னக்குப்
பின்னொரு காலங் தோட்டாப் பெற்றிடும் பேதை தன்னை
நன்மண மனைய வெய்யோன் செய்தன னவடன் னூம
மிங்கில மெங்குங் காந்தி மதியென வெடுத்து ரைப்பார். (உ)

முருந்துறழ் மூரல் வாய்ந்த விருவரின் முதன்மை பெற்று
வருங்குல மடந்தை சாயா தேவிநன் மகிழ்ச்சி கூர்ந்தே
யிருந்திடும் பதும பீடத் தினிலொரு ஞான்று தோட்டாத்
தருங்கருங் குழலி ருந்தாள் கண்டனள் சாயா தேவி. (௩)

கோதித்துளம் பதைப்பக் கோபங் குதித்திடுங் கண்ண ளாகி
யுதிக்குமா தவன்முன் னின்றே யுரைத்தன ளவளெ னச்கு
மதித்திடு சமான மாக வெண்ணியா னிருக்கும் வாய்ந்த
நிதிப்பது மாச னத்தி லிருந்தன ளென்ன லென்றே. (௪)

மான்பொரு விழியாள் பின்னர் வனப்பிழந் தவன்கொ டேரி
கூன்குரு டெனினுந் தக்க குலமடந் தையர்வி சேடந்
தேன்படு மொழிய ளென்னுஞ் சிறந்தில ளிழிகு லத்த
ளூன்பொதி யவளைத் தீண்டி னுறுகுல நரகில் வீழும். (௫)

அன்னவள் புதல்வர் தம்மாற் சுவர்க்கமுங் கிடையா தாகு
மென்னுயிர் நாதா வன்னாட் கிழிந்ததண் டனைசெய் யாயேன்
மன்னுமென் னுயிர்வி டுப்ப னென்றவள் வாராய் மின்னே
பன்னிநீ யவளென் ருசி யாகவே பார்ப்ப னென்றான். (௬)

விதிநெறி விசாரி யாது தண்டனை செய்தால் வேடன்
வதிதரு குலத்தில் வந்து பிறப்பன்வாழ் மனைவிக் கென்றும்
பதிகடிந் திடுதல் வேறு படுத்திருந் திடுத ருசர்க்
கதிகதண் டனைய டித்தன் முண்டனந் தாசிக் காமால். (௭)

நீசபத் தினிக்குச் செய்யுந் தண்டனை தள்ளி நீக்கல்
வாசவார் குழலா யன்ன டனைமனத் தினினி னைந்து
பேசுவ தில்லை யென்று பெருகுதன் கிரணந் தம்மால்
வீசினன் வெதும்பித் தோட்டா வின்முனம் விழுந்து சொன்னாள். ()

கருகிய மேனி கண்டு கதிரவற் கெதிரே நின்று
மருகவென் மகண்மேற் காதல் விடுத்திட வந்த வாறு
தெரிதர வுரையா யென்றான் சிறிநீ யிழிந்த சாதிக்
குரியவ னின்னோ டென்ன வுரைப்பதென் றுயிர்த்து ரைத்தான். ()

இயங்கிய கோப நீங்கி யிழிந்தயா னிலகி வாய்ந்த
வுயர்ந்தவர் தம்மைச் சேரி னெழிந்திடுங் களங்க மென்று
சயம்பெறச் சொல்வ தோராய் போலுமென் றனன்ற டங்கண்
வயங்கிழை யுனது மாதை வருந்தியான் கேட்ட துண்டோ. (கo)

எழுந்திடு முயரம் பெண்ணை மூன்றதின் மேலி ருந்து
முழுந்துருள் பொழுதி னின்றன் கைவிர லாழி யூறுஞ்
செழும்புன னிழலிற் பார்த்துத் திகழ்தரு கணையா லெய்ய
விழுந்தவவ் வாழி கண்டு கொடுத்தனை வியந்து நின்றே. (கக)

ஆதலின் விலையாய்க் கொண்ட பொருளென வாயி னுணின்
பேதையென் றிகழ்ச்சி பேசி யிடுமெது பொறுது கண்ணின்
மீதழற் பொறிகள் சிந்த வெகுண்டுதன் சாணை வாயிற்
கோதுறக் கடைந்தான் மேனி யெழிலெல்லாங் குலைந்த தம்மா. (கஉ)

என்செய்வான் பரிதி நின்பெண் ணெனக்கதி மோக மாகு
மன்புவைத் திடுவ னென்று னவ்வுரை செவியிற் கேட்டு
முன்புநான் முகன ளித்த முரண்மிகு சாணைச் சுற்றைத்
தன்கையா னிறுத்தி விட்டான் றரிக்கில னெந்து மீண்டான். (கங)

வருந்திய துயரங் காந்தி மதியிரு கண்ணு னோக்கி
யருந்தவ மியற்றும் வானோர் குரவனை யடுத்து நின்று
முருந்துறழ் முத்த மூரற் குமுதவாய் முகம லர்ந்து
திருந்துபைங் கிளியின் வாய்ந்த திகழ்மொழி யொன்று ரைத்தாள்.

முன்னரென் பிதாவுக் கென்னை யிகழ்ந்தது முழுதுஞ் சொன்னே
னன்னவன் கூர்மை வாய்ந்த சாணையி னகத்தி லுய்த்து
மன்னிய வொளிம ழுங்கக் கடைந்தனன் வருத்தந் தீர
வுன்னரு ளன்றி வேறொன் றுளதுகொ லிரவிக் கையா. (கடு)

என்றுநன் மொழிகேட் டாசா னிலகிய வயித்திய நாதந்
தன்னினீங் கிடுமென் றுன்றன் பாரியோ டெழுந்து தாதார்
பொன்னிதழ்க் கடுக்கை வேய்ந்த வயித்திய நாதன் பொற்றாள்
பன்முறை பணிந்து தீர்த்தம் படிந்தருச் சனைபு ரிந்தான். (கசு)

பொருந்திய கன்னி மாதம் புகழ்மிகு மாக மாதம்
வருந்திநாண் மூன்று செய்த பூசையின் வாய்மை தன்னைத்
திருந்துபே ரருள்ப டைத்த தேவநா யகன்ம கிழ்ந்தே
யருந்திற லெழிலு நல்கி யரியநல் வரமு மீந்தான். (கஎ)

இன்னருத் துளிப்ப வூதி விளரிவண் டெழுந்து பாடு
நன்மலர்க் குழலாள் காந்தி மதியுட னுள்க டோறு
மன்னுபே ரின்ப நல்கும் வயித்திய நாதன் பாதந்
தன்னையன் பொடுப ணிந்து தனதால கதனைச் சார்ந்தான். (கஅ)

மனமிறு மாந்து தோட்டா மஃளொரு ஞான்று வாய்ந்த
தினகரன் பாரி சாயா தேவியா சனத்தி ருப்பத்
தனதுளங் கொதித்தே யன்னு டனித்திருந் ததுவுந் தீர்த்து
வினவிநல் லுரிமை செய்து விளங்கினன் விண்ணின் மீதில். (சகூ)

வேறு.

கறைவிளங் கியமணி மிடற்றுக் கண்ணுத
லிறைவனுக் கிரவிநாண் மலரெ டுத்துநற்

றுறைவழா தருச்சனை செய்தல் சொல்லின்ன்
மறையருச் சனைசெய்த வண்மை சொல்வன்மேல். (உ0)

ஆதித்தனருச்சனைசெய்சருக்கமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௬௧௬.

---

## வேதமருச்சனைசெய்சருக்கம்.

இலகு சோமக னென்றுரை பெற்றிடு
மலகி லாற்ற லுடைபவ னுய்ந்தபொன்
னுலகில் வாழிமை யோர்துய ருற்றிடத்
திலக நான்மறை சேர வெடுத்தனன். (க)

வஞ்ச னைசெய் தெடுத்தபின் மாகட
னஞ்சு போலொளிர் சேற்றி னடுவினி
லஞ்சி யேக்கமு றப்புதைத் தானயர்ந்
தெஞ்சி வானவர் யாவும் விடுத்தனர். (உ)

அரவ ணிந்திடு மையனை யன்னவர்
பரவித் தோத்திரஞ் செய்தனர் பைந்துழாய்
விரவு மார்பன்ற னைவியன் கங்கைதன்
சிரம ணிந்தவன் சிந்தனை செய்தனன். (௩)

வைய முண்டிடு மாயவன் பாய்விடை
யையன் றன்னை நினைந்த துணர்ந்தடல்
செய்யுஞ் செங்கண் மகரம தாகியே
வெய்ய சோமகன் வீழப் பொருதனன். (௪)

குருதி சோர விழுந்தபின் கூறருஞ்
சுருதி தேடி யெடுத்துச் சரந்தருள்
பெருகு காதலிற் பேதுற னீக்கியே
திருவி னுயகன் செவ்விபெ றச்செய்தான். (ரு)

மறைக ளுன்கும் வயித்திய நாதன்ற
னறைம லர்ப்பதம் போற்றி நவிலுநன்
முறைமை யாக முதிர்ந்திடு மன்பினு
னிறையும் பூசைசெய் நேசம தென்சொல்வேன். (சா)

ஏல வாச வெழிற்றிரு மஞ்சனங்
காலந் தோறுங் கனிந்தபி டேகஞ்செய்
தால முண்டிடு மையனுக் கற்புதச்
சாலி யன்ன நிவேதனந் தானல்கி. (எ)

மற்று முள்ள வகையுப சாரமு
ஈற்றி றம்பெறச் செய்தெழி னல்வரம்
பெற்ற மூர்ந்த பிரான்றரப் பெற்றதால்
வெற்றி வேத புரியென்பர் மேன்மையோர். (அ)

வேறு.

நாதனை நறுமல ரான யந்துநால்
வேதம்வந் தருச்சனை புரியு மேன்மைசே
ரோதருஞ் சருக்கமீண் டெடுத்து ரைத்தனன்
பூதலம் வருகுசன் புகழ்ச்சி மேற்சொல்வேன். (கூ)

வேதமருச்சனைசெய்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்-கஉரு.

## அங்காரகனருச்சனைசெய்சருக்கம்.

பொற்புறுந் தவஞ்சூழ் சூதமா முனிவன் புகழ்மிகு நைமிசா
ரணிய, வற்புத முனிவ ரகமகிழ்கூர வமையுமங் காரகன் மகிமை,
நற்றிறம் பெறவே யுரைத்தன்மே யினன்மே னவிலருங் காதன்மீ
தூரச், சொற்சுவை யினிய பொருட்சுவை யுணர்ந்தோர் துதித்தனர்
குவித்தகை யெடுத்தே. (௧)

தயங்குபூ ருவத்தி னன்னெறி முதிர்ச்சி தருமிரா தந்திர மென்
று, நயம்பெறு கற்பந் தனிற்பனி வரைசூழ் நலன்மிகு தாழ்வரை
யதனிற், பயன்றர வுமைதன் னுடன்மகிழ் கூர்ந்து பரிவுறு திருவிளை
யாடல், வியன்பெறச் செய்யும் விழைவின னாகி விமலன்வெய் யோ
னைநோக் கினனே. (௨)

அங்கியங் கடவு ணடுவினின் றரிய தவம்புரிந் திடுமெவர் போ
ன்று, வெங்கதி ரவன்றன் வெயில்கொதித் திடுமெவ் வேலையின் விழி
த்துமே னோக்கி, யெங்கணா யகன்வீற் றிருந்தனன் முகத்தி னெழு
ந்துவேர்த் திடுந்துளி யொன்று, பொங்குமாழ் கடலின் வடவைவான்
கனல்போற் புவிதனில் விழுந்தது மாதோ. (௩)

உத்தம மான நிலமகள் வாய்ந்த வுபநிட வாக்கிய மதனான்,
மத்தகாண் மலர்சேர் வள்ளலைத் துதித்தென் வருத்தம தறியவே
றுளரோ, வத்தனே தாங்கற் கரியதாய்த் தாபாக் கினியதி குரூரமா
யடர்ந்த, தெத்துணை கொண்டு தீருமே னிரட்சி யிரட்சியென் றிரங்
கிநின் றனளே. (௪)

இவ்வகை புவிமா துரைத்தலு மினிநீ யிரங்குத றவிரெனப் புக
ன்று, னவ்விசே ரண்ண னவிலுமப் பொழுதி னல்லெழில் சிவந்த

வண் ணமதாய்ச், செவ்விதாய்க் கருமை தீர்ந்திடு குன்றி நிறமுடைத் திகழ்கதி ரவன்போற், கவ்வைநீர்க் கடல்சூழ் புவியினின் றெழுந்து கறைமிடற் றண்ணலைப் பணிந்தான். (டு)

மாந்தளிர் மேனி யையனன் னவனை மகிழ்ந்துவாய்ந் திருந்திடு குருரஞ், சாந்தநீ செய்து புவிக்கனு கூலந் தனைப்புரி தயங்குமங் களமுண், டாந்தகு முபய காவிரி யதனுக் கமைந்திடு நாப்பண்வார் கடலிற், கேய்ந்தமேற் றிசையின் வயித்திய நாத மெனுந்தல மியல்பெற விளங்கும். (சு)

பூசுரர் மனையி னித்தியாக் கினிசெய் புகைநறு மணங்கமழ்ந் திலகுந், தேசுநல் கிடுமெப் புண்ணிய தலத்தைத் தெரிசனஞ் செய்தவக் கணத்தி, னேசமுற் றுளத்தி னினைந்தன யாவு நிலைமையா யளிக்குமென் றுரைத்தான், பேசரு மகிழ்ச்சி கூர்ந்துதென் றிசையைப் பெட்புமீ தூரநோக் கினனே. (எ)

எண்ணரி தாகி யிருந்திடுந் தலங்கள் யாவையு மினிதுற வணங்கிப், புண்ணிய கங்கை நதியினீ ராடிப் புதுமல ரால்விசு வேசன், வண்மைசேர் பாதாம் புயந்தனி லிலகு மகிழ்ச்சிகூர்ந் தருச்சனை புரிந்து, தண்ணளி முரல்பூந் தருவளர் வயித்திய நாதமா நகர்தனைச் சார்ந்தான். (அ)

தீந்தரு வினைநோ யொழிந்திட விளங்கித் திகழ்ந்தசித் தாமுத தீர்த்தந், தோய்ந்துநன் னிறப்பட் டுடைதரித் திருந்து தூயநீ றணிந்திழை யினிதா, வாய்ந்தமுப் புரிநூ லணிந்திடு மார்பின் மன்னுமுத் தரீயமின் றசைய, வாய்ந்துசே ருருத்தி ராக்கநன் மாலை யற்புதவொளிசெயப் புனைந்தான். (கூ)

கனிவுட னெழுந்து சிந்துர முகக்கற் பகவிநா யகன்றனை வண ங்கிப், பனிமதி யணிந்த வயித்திய நாதன் பதாம்புயங் கண்டுகண் களித்தே, புனிதமஞ் சனம்பஞ் சாமுதம் பஞ்ச கௌவியம் பூங்கனி யிளநீ, ரினியநல் லபிடே கந்தனக் கமைந்த திரவியம் யாவையு மெ டுத்தே. (க0)

அளப்பருங் காத லுடனபி டேகஞ் செய்துநல் லாடையா பர ணம், வளத்தொடு சாத்தி நிவேதன மளித்து மந்திர விதிமுறை வழாது, விளக்கிய தூப தீபமுங் கொடுத்து மேதகு சகத்திர நாம, மிளக்கமுற் றிடுகூ விளங்கரத் தேந்தி யினிதருச் சனைபுரிந் தன னே. (கக)

திவ்விய மான வன்னநெய் யொழுகித் திகழ்ந்திடு மபூபநற் கனிமற், றிவ்வகை யனேக விதநிவே தனமற் றினிமைபெற் றிடநித மளித்து, நவ்விசே ரண்ண றனைப்பணிந் தெழுந்து நலம்பெறு துதி பல செய்தான், கவ்வைசூழ் கடலின் விடநுக ரமலன் கண்ணின் முன் னெழுந்தரு ளினனே. (கஉ)

பூமக ளினிய புதல்வநின் றனக்குப் பொற்புற வேண்டிய வர ங்க, ளேமமெய் திடயாந் தருகுவங் கேளென் றிசைத்தன னண்ண லே நினது, தாமரை மலர்பொற் றாளினை நினையுஞ் சிந்தைதந் தரு ள்புவி தனின்மே, லாமணி பெறுநற் கிரகநின் றதுக மாகுமா திக்க நல் கென்றான். (கங)

அன்னது மன்றி வேண்டின னினைய தலந்தனின் மாதமீ ரா றின், மன்னிய செவ்வாய்க் கிழமையி லினிய மகேசுர பூசைபண் ணினர்தா, நன்மைசேர் சகல பாக்கியம் படைத்து நலம்பெறு புத

ல்வனைப் பெற்றுப், பின்னர்வெண் கயிலை சேர்ந்துபே ரின்பம் பெறும்வர நல்குநல் கெனவே. (கச)

வேறு.

அங்கா ரகன்வேண் டியவரங்க ளனைத்து மளித்தே பெருங்கருணை, யெங்கோன் விளங்கி யிருந்தனன்மற் றெழில்சேர் சித்தா முதவடபாற், செங்கோ கனக முகமலர்தென் றிசையை நோக்கி யிடவுறைந்து, கொங்கார் மலரா னிதம்பூசை புரிந்து மகிழ்ச்சி கூர்ந்தனனே. (கரு)

இன்னோன் புகழ்சேர் மான்மியமற் றின்ன மொன்று பகர்வனெனப், பன்னூன் முறைகண் முழுதுணர்ந்து பதினெண் புராணங் கரைகண்ட, தன்னே ரரிய சூதமுனி வரன்சூழ் நைமி சாரணிய, நன்மா முனிவர் செவிக்கினிய வமுத மொழியா னவில்கின்றான். ()

வேறு.

இலகிய சுவேதவிந் தெழுந்த தெம்பிரான்
மலர்முகந் தனிலொரு கற்பம் வண்மைசேர்
நிலமிசை விழுந்திட நிமலன் செய்தன
னலர்குச னுதிரமே னியினு தித்தனன். (கஎ)

நடுங்கினர் வானவர் நாதன் பார்த்தவன்
கொடுந்தழ லுருவினி லுதிரங் கூருவ
தொடுங்கிடச் செய்குவ னென்று ரைத்துமே
லடுந்திறற் குசன்கருத் தனைமயக் கூறினான். (கஅ)

மங்கள வாரநின் மகிமை யிவ்வுல
கெங்குளோர் களுந்துதித் தேத்த நல்கினேன்
செங்கைகூப் பினர்க்குநின் குரூரந் தீர்த்துநீ
பொங்கிய புகழொடு பொலிக வென்றனன். (கக)

வேறு.

என்னருந் துயரங் கூர விருந்தசெங் குட்டந் தன்னாற்
கண்ணினு லொருவர் பாரார் கடல்விட முண்ட கண்ட
வண்ணலே நின்னையன்றி யடியனேற் கானு முண்டோ
நண்ணுமிக் குட்டந் தீர நல்வழி யருள்செய் யென்றான். (௨0)

மங்கள வுருவ மான வயித்திய நாதஞ் சேர்ந்து
பங்குனிச் செவ்வாய் தன்னிற் பரந்திடு மமுத மென்னும்
பொங்குபூம் புனலின் மூழ்கிப் புராதனன் வயித்திய நாதன்
பங்கயச் சரணங் கண்டு பணிந்திடிற் றீரு மென்றான். (௨௧)

ஆறணி யண்ண லோது மனைத்தையு முணர்ந்து மேலாம்
பேறரு டலத்தைச் சார்ந்து பிறங்கிடு மகிமை கண்டு
கூறரும் வீர பத்திரக் குரிசிலை வணங்கி மற்றும்
வேறுவே றிறைஞ்சிச் சித்தா முதப்புனல் விதியாற் றோய்ந்தான். ()

வண்மைசேர் மாசி மாதப் பிறப்பினிற் றீர்த்த மூழ்கித்
திண்ணிய படிமே லேறும் பொழுதினிற் குட்டந் தீர்ந்தே
யெண்ணரும் பசும்பொன் மேனி யெய்தினன் குசன்பின் வாய்ந்த
புண்ணியக் கவச மொன்று புகன்றுய ரீசா னத்தின். (௨௩)

ஓடையொன் றியற்றித் தூய வொளிசெய்செங் கழுநீர் வைத்துக்
கோடைஞான் றினுநீங் காது குளிர்மணங் கமழும் பூவா
லாடைவெம் புலித்தோல் பூண்ட வண்ணலுக் கேற்கும் வண்ண
மாடியே சாத்தி நின்று நலம்பெறத் துதிக்க லுற்றான். (௨௪)

கமலநான் முகனுங் காணுக் கண்ணுதற் பிரானே போற்றி
யமலனே போற்றி யெங்க ளையனே போற்றி நீங்காத்
தமலமை தொழிப்போர்க் கென்றுந் தயைபுரி பரனே போற்றி
* துமலறீர்த் துயிர்க்குத் தோன்றாத் துணையதா யிருந்தாய் போற்றி.

---

* துமலல் - தும் அல்லல்; தும் - துகள்.

சுருதிதே டரிய நாதா தூயனே போற்றி யென்றே
வருதுதி பலவுஞ்செய்து வள்ளல்பூங் கோயில் வாய்ந்த
நிருதிதென் றிசையிற் சித்தா முதநிறை வடபா னீங்கா
தருகுதென் முகம தாக வமர்ந்தினி திருந்தான் பன்னாள். (உ௯)

வேறு.

திறஞ்சே ரினிய செபந்தவஞ்செய் திலதர்ப் பணநெய் யாகுதி
சென், நிறஞ்சே ரங்கா ரகன்றன்னை நினைந்தே யளியா தவர்க்கம்மா,
விறந்தே யிடுமப் பலனதனு லினைய தலத்தி னியல்பெறுநல், லறஞ்
சேர்ந் திருந்தோர் மற்றெவர்வந் தவர்க ளெவர்க்கு மஃதாமால். ()

அண்ணல் வரம்பெற் றினிதுறையு மங்கா ரகனுக் கிப்பலனென்[யிடு
றெண்ணியளிப்போர்க் கெண்ணருநல் லெழின்மங் களம்வந் தெய்தி
நண்ணும் புகழ்பொன் னவமணியுங் கொழிக்கு மன்னோ னன்மகிழ்ச்
பண்ணு மதனு லவர்நினைவின் படியே யனைத்தும் பலித்திடுமே. [சி

வேறு.

அற்புத மிகவங் காரகன் பூசை செய்திடுஞ் சருக்கம்யா னறி
ந்த, நற்பெரு மகிமை யுரைத்தன னிதன்மே னுதனைக் கலைமதி விதி
யாற், பற்பல மலர்கொண் டருச்சனை புரிந்து பணிந்துவாய்ந் திடுது
தி புகன்ற, பொற்புறு சருக்க மான்மிய மதனைப் புவிக்கிதம் பெறப்
புக லுவனே. (உ௯)

அங்காரகனருச்சனைசெய்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கஉ௬ச.

---

## சந்திரனருச்சனைசெய்சருக்கம்.

எண்ணிலா மகிமை பெற்ற தக்கனுக் கிருபத் தேழு
பெண்ணெழில் கொழிக்க வந்து பிறந்தன ரனையர் தம்மை

விண்ணின்மீ தியங்குந் தூய வெண்மதிக் களித்தா னன்னான்
கண்மணி யெனவி ளங்கு ரோகிணிக் கன்பு செய்தான். (க)

ஏனையர் துயரங் கூர்ந்தே யிருந்தனர் சின்னாள் பின்னர்
வானின்வெண் ணிலவு காலு மதியினை நீங்கி வந்து
தேனினு மினிமை வாய்ந்து திகழ்ந்திடு சொல்லாற் றந்தை
தானிதம் பெறவே கேட்பச் சாலவு முரைத்தா ரந்தோ. (உ)

பொன்னிளங் கொம்பு போன்ற புதல்வியர் நடந்த யாவு
முன்னர்நின் றுரைத்த போது முதிர்ந்திடு சினத்த னாகி
வெங்நெருப் பெனவே கண்கள் சிவந்திட விண்ணின் வாழு
மன்னவன் றனைச்ச பித்தா னடுத்தது கயநோய் வந்தே. (௩)

குமுதவாய் விள்ள வெள்ளை நிலவுகொப் பளிக்குந் தூய
வமுதமே னியிற்க ளங்க மடுத்தது கண்டு பார்மே
னமதுநோய் நலிவு தீரு மெத்தலத் தென்று ணைந்தே
தமதுநே ரரிதாய் மன்னும் வயித்திய நாதஞ் சார்ந்தான். (௪)

எய்தரு மகிமை பெற்றே யிருந்திடுந் தீர்த்த மூழ்கி
வைதிக விதிவ ழாது சந்திவந் தனஞ்செய் தாய்ந்த
அய்யநீ றணிந்து தூய கண்டிகை தரித்துத் துத்திப்
பையர வணிந்த நாதன் பதமலர் பணிந்து போற்றி. (௫)

வேறு.

பூசைக் கமைந்த மஞ்சனமும் புதுமா மலரு நறுஞ்சாந்துந்
தேசிற் பொலிந்த தீபமுஞ்செஞ் சாலி யினிய திருவமுது
மீசற் கேய்ந்த பரிசினு லமைத்தே யிளகி யுருகுமன
நேசத் துடனே பூசைவிதி நியம மாக நிதஞ்செய்தான். (௬)

அய்ய னவன்முன் னெழுந்தருளி யடுத்த சாபந் தனைநீங்கச்
செய்து திகழ்பூ ருவபக்கந் தன்னிற்கலைகள் செழித்தோங்க
வெய்து மபர பக்கமதி லிறங்கப் பருவந் தனிலிலகித்
துய்ய கலையீ ரெட்டுமிறைந் துலகு துதிசெய் திடவளித்தான். (எ)

பெண்ணிற் கமைந்த கற்பினராய்ப் பெருகு மெழில்வாய்ந் திடுமினிய
வொண்ணித் திலநன் னகைமாத ரிருபத் தேழு பேருமுள
நண்ணப் பனிமா மதிவாய்ந்த நலஞ்சேர் போகந் தனைநுகரச்
கண்ணெற் றியினிற் படைத்தமணி கண்ட னருள்செய் தனனம்மா.

மருந்தாம் வயித்திய நாதனுமாம் வள்ளல் கலைமா மதிக்கருள்கூர்ந்
திருந்தே வரால் கினன்வலன்செய் தினிய துதிபற் பலசெய்து
திருந்து முலகு தனைச்சேர்ந்து செந்தா மரைவாண் முகமலர்ந்து
பொருந்து மனைவி யனைவர்களும் புகழ்சே ருரிமை பெறச்செய்தான்.

வேறு.

குளிர்தரு மமுத கிரணமா மதியின் கொள்கைமான் மியந் தனை யெடுத்துத், தெளிதர வுரைசெய் தனனிதன் மேற்செங் கதிரவன் மண்டலத் தினிற்போந், தொளிபெற வருவ னென்றெழுந் தயர்ந்து பரந்துவீழ் சடாயுவி னுஃசி, ரளிதரு மன்பர் முகமலர்ந் திலகு மகமகிழ் கூர்தரப் பகர்வேன். (௰)

சந்திரனருச்சனைசெய்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கூசுச.

---

## சடாயுவருச்சனைசெய்சருக்கம்.

திருந்திய நான்முக னளித்த செவ்விசேர்
பெருந்தவ நாரத முனிவன் பேசரு

மரும்பகை கடிந்திடு மம்ப ரீடன்வந்
திருந்தபே ரவைமகிழ் கூர வெய்தினன். (௧)

பொன்முடி தரித்தர சுரிமை பூண்டிடு
மன்னவ னருக்கியங் கொடுத்து வந்தனை
நன்னெறி பெற்றிடச் செய்தன் னல்வர
வென்னவெங் குலஞ்செயுந் தவமென் றேத்தினன். (௨)

இகல்புரி யைம்புலப் பகைக டிந்திடு
மகதியாழ் முனிவரன் மன்னன் வாய்மையும்
புகன்மொழிப் பரிவையும் பூரித் தன்னவ
னகமகிழ் தரப்பல வாசி கூறினன். (௩)

தரணியோர் குடைநிழ றனிற்பு ரந்திடும்
புரவல னிகபரப் பேறு பொற்புற
நரர்சுரர் தமக்கெலா நல்கு நற்றலந்
திரமுற வையனே யருள்செய் யென்றனன். (௪)

பூவிரித் தோங்குபூம் பொழின்மி குந்திடுங்
காவிரி வடகரை தனிற்கண் டோர்கள்கண்
மேவரி தாம்மகிழ் கூர்வர் விண்ணவர்
யாவரும் புண்ணியத் தலமென் றேத்துவார். (௫)

சித்தநன் மகிழ்பெறச் செய்யுஞ் செவ்விசேர்
முத்திமா நகர்தனிற் சடாயு முக்கிளைக்
கொத்துவாய்ந் திருந்தகூ விளமெ டுத்துளம்
பத்திகூர் சிவார்ச்சனை பண்ணும் வாய்மையால். (௬)

௧௩

தாரணி சடாயுமா நகர மென்றுதான்
பேரணி பெறவுரைத் திடுமெ னப்பெரு
காரண முணர்ந்தநா ரதவ ருந்தவன்
சீரணி வேந்தனுக் களித்தல் செய்தனன். (௭)

மன்னவ னெழின்முனி வரனை நோக்கியித்
தன்மைசேர் சடாயுவின் றந்தை யாவன்மே
னன்மைதாங் குலவரன் முறைமை யாதெனப்
பன்னரு நன்மொழி பரிந்து கூறினான். (௮)

தக்கனற் புதல்வியாம் வினதை தன்னையெண்
டிக்கெலாம் புகழ்படைத் திலகு காசிபன்
மிக்கான் மனைவியாய்க் கொடுத்த னன்மிகு
பக்குவ வணங்கரு ணனைப்ப யந்தனள். (௯)

பின்னர்நற் கருடனைப் பெற்றெ டுத்தனன்
முன்னவன் மூதறி வுள்ள சேணிலைய
நன்மணம் புணர்ந்தன னலமி குந்திடு
மன்னவ னிருபுதல் வனைய ளித்தனள். (௧௦)

சகுதிவாய்ந் திலகுசம் பாதி யென்பவன்
மிகுதிறம் படைத்துமுன் பிறந்த மேன்மையான்
புகழ்பெறு சடாயுவென் றுலகம் போற்றிடு
மகிமையா னவன்றனக் கிளைய வள்ளலே. (௧௧)

சூழ்தரு மிவர்சொலற் கரிய நண்புடன்
வாழ்பெரு நாளினிற் கயிலை மால்வரைத்
தாழ்சடஞ் சாரலின் றேறி ஞர்தடுத்
தாழ்கட லெனக்கிளர்ந் தார்க ளங்குளார். (௧௨)

பையவெய் தவர்தமைப் பார்த்தி யாங்களிப்
பொய்மயக் குறுபிறப் பொழிக்க வெண்ணினேக்
தெய்வரா யகன்றரி சனஞ்செய் வோர்களைச்
சைவரா யிருந்துநீர் தடுத்த னீதியோ. (கங)

என்றபின் வாசலி னிருந்த யாவரும்
வன்றிறற் கழுகினுக் கிலகு ஞானம்வந்
தொன்றியே புண்ணிய பாவ வுண்மையை
நன்றுணர்ந் தறியுமோ வெனநகைத்தனர். (கச)

கன்மம்விட் டிருந்திடுங் கழுகி னுக்கர
னன்மைசேர் ஞானநல் குவதுண் டாங்கொலோ
வென்னபுன் மதியென விகழ்ச்சி கூறியே
யன்னவர் போவெனப் புகன்ற கற்றினர். (கரு)

பத்திகூர் தரவவர் தமைப்ப ணிந்துநன்
முத்திசேர் நெறிதனை மொழியு மென்றிரந்
தெத்தனை யோதுதி செயத தெண்ணரி
தத்துணை நெறியுணர்ந் தளித்தன் மேயினர். (கசு)

வேறு

புகழ்பெற நிதஞ்செய் கன்மநன் கியற்றிப் புகலுதற் கரும்பிர வஞ்சந், திகழ்சிவாக் கினையா னடப்பதென் றெண்ணு மவன்சிவ ஞானியா குவன்மே, னிகழ்தரு மவன்ற னுளத்தினன் னெறிசேர் கிட்டைக் கிவேகமில் பறவை, யிகழ்தரக் கடவ தலதுனை யினை யோ னுடன்புக விடேமென விசைத்தார். (கஎ)

அய்யனுக் கினையைச் செலுத்திடு மவர்க ளறிந்திட வமர்ந்து சம்பாதி, மெய்யதாம் பட்சி சாதியா னவனும் வேதநன் னெறி தனைக் கேண்மின், வைதிக மறையோர் தமக்குமெய்ஞ் ஞானம்

வரும்வழிச் சிவார்ச்சனைப் பலனுஞ், செய்யவே லரசர்க் கந்தணர் தமைச்சே விப்பது ஞானசா தகமாம். (கஅ)

ஒழிந்திடும் வணிகர்க் கந்தண ரரச ரொளிர்மலர்ப் பாதசே வையினுன், மொழிந்திட வரிய ஞானசா தகமா முறைமையி னுதித் தருத் திரர்க்குச், செழுந்திரு ஞான சாதக மூவர் சேவையி னுல்வரு முனிவர்க், கெழுந்துசெய் யரிய தவத்தினுன் ஞான மெய்திடுஞ் சா தக மாகும். (கசு)

நலன்கொள்கந் தருவர்க் கின்னிசைப் பாடல் ஞானசா தகம தாஞ் சித்தர்க், கிலங்குரன் மவுனங் கின்னரர்க் கெழில்வாய்ந் திருந் தபூ மாலைகட் டுதனற், பலன்பெறும் வித்தியா தரர்க்குவாத் தியங் கள் பகுத்திசை பெறவடித் திடுத, னிலம்புக ழினைய வேயிவர்க் கெ ன்று நிலைமையாம் ஞானசா தகமாம். (உ0)

பொருந்திடும் பட்சி சாதிமே லெழுந்து பொற்புறச் சாய்ந்து தாழ்ந் துயர்ந்து, திருந்தும்விண் மீதில் வட்டமிட் டேறிச் செல்வது தெய்வரா யகற்கும், வரும்பெரு மகிழ்ச்சி கூர்தரச் செய்யு மாதலான் ஞானசா தகமா, மரும்புக ழிலகு மவரவர் சாதி தருமமே யனைவரும் விழைவார். (உக)

என்றுகின் றுரைப்ப விருந்திடு மவர்க ளெழுந்துநீ பறந்திடும் வேக, நன்றுணர்ந் தறியக் காட்டிய பின்னர் நாதனைத் தரிசனஞ் செய்ய, வென்றிசூழ் விடையாந் தருகுவ மென்று மேலுமொன் றுரைத்தனர் பானு, வன்றிற லிலகு மண்டலம் புகுந்து வருமள வெனவகுத் தம்மா. (உஉ)

வியந்துநீ யெழுந்தே யிளையவ னுடனே செல்லுழி வலிமையை விட்டுப், பயந்துவீழ்ந் திடின்மேற் செய்வதென் னென்முர் பரிந்துசெய் விரதம்விட் டிடுவோ, னயந்தரு புராண நூடணஞ்செய் வோ

னண்ணிடு நரகம்யான் புகுவன், றுயர்ந்திடும் பாவ மெய்திடக் கடவ னென்றுறு தியையுரைத் தனனே. (உ௩)

தரித்திடுஞ் சபதங் கூறியே தரையைத் தன்னெழின் மூக்கினுற் கீறி, விரித்துவன் சிறகை யுளர்ந்திரு வருஞ்சூழ் வேகமாய்ப் பறந்தனர் கதிரோ, னெரித்திடுங் கிரணந் தாங்கரி தாகி யிளையவ னிலகிய கந்த, புரிச்சர காண்ட வனத்தின்மந் திரப்பொற் குண்டமேற் புகழ்பெற விழுந்தான். (உ௪)

வன்றிறன் மகிமை சிற்சில வாகத் தாழ்ந்திட வருந்திமே லெழுந்தே, யொன்றரை முகூர்த்தந் தன்னிலா காய வெளிகடந் தோடிமேற் பானு, தன்றழ லொழுகு மண்டல மணித்தாய் நெருங்குமவ் வளவையிற் றழைந்து, வென்றிசூழ் சிறகு வெந்துசம் பாதி விந்திய வரைதனில் விழுந்தான். (உ௫)

வேறு.

மணிமந் திரவவு டதகுண் டமு * மிளை யவள்வண் புகழமு தமதாக, வணதண் புனலொளிர் தடமும் பிறையர வணியும் பரனையுமிமவான்றன், கணிதம் பெறுதவ மதின்வந் திடுமுறை தனையும் வளர்முரு கனையுஞ்சூர்,தணியுந் தெளிவுறு பொழுதின் னறிகுத றருமின் பமுமிக வுளதாக. (உ௬)

வேறு.

கண்டபின் குண்டந் தனிற்றின மூன்றிற் கவினுறு படிவம்வாய்ந் தெழுந்தே, தண்டகா ரணிய மிதுவென வுணர்ந்து தமனிய வுலகினி லுறையு, மண்டர்போற் றிடுநல் வயித்திய நாத வண்ணலை யருச்சனை புரியு, மண்டுகா தலினுற் றீர்த்தநீ ராடி வந்தமூ வலஞ்செய்து பணிந்தான். (உ௭)

---

* இளையவள் - வாலாம்பிகை.

அதிகமா மகிமை பெறுரூப சார நிறையவே தாகம முறைத்த
விதிமுறை வழாது விருச்சிக மாத மேவுபிற் பக்கவட் டமிநாட்
கதிபெறப் பூசை செய்தருள் பெற்றுக் கவின்பெறு தண்டகா ரணிய
முதிர்கனி யருந்திச் சஞ்சரித் தின்ப முற்றினி திருந்தனன் மன்னே.

அத்தகு புகழ்சூழ் தண்டகா ரணிய மதுதனிற் றசரத னெழில்சே, ருத்தம மான மந்திரத் தலைவ ருடன்பதா திகள்புடை சூழ, முத்தவெண் குடைநீ ழலிற்கலை வளைத்து முதிர்சின விலங்கினம் வெருவப், பத்திவாய்ந் திருந்த பெருவலை கட்டிப் பலவித வேட்டைதான் செய்தான். (உகூ)

விரிசுடர் வெயிலின் வெப்பமீ தூர வுண்ணுநீர் வேட்கையால் வருந்திப், பரிசன முழுதுஞ் சோர்ந்திடப் பராரை விருக்கநீ ழலிற்றுயின் றனன்பாங், கரியபுற் றினைக்கா வாலுதைத் தனனு லரவுகண் சிவந்திட வெழுந்து, புரிசினங் கொண்டு வருவது கண்டு பொருப்புவிட் டெழுந்தனன் சடாயு. (௩௦)

திரண்டுகூர் வாய்ந்த மூக்கினு லரவு தீண்டுமுன் கொத்தியே யழுத்தி, யிரண்டுதுண் டமதாய்க் கடித்தெறிந் தனனவ் வேல்வையிலரண்டெழுந் தரசன், முரண்டரு காலன் பிடிக்கவந் திருந்தா னென்றடு சணையெடுத் தனன்முட், புரண்டிடச் சடாயு விரைந்துநன் மொழியாற் புகன்றன னடந்தன யாவும். (௩௧)

உரைத்தபி னினிய கனியளித் தெழுந்தே யுண்ணுநீ ரெடுத்துயான் வருவன், வரைப்புய மன்ன நின்கலை தீரப் பருகிநீ வாழுமூ தூரைத், திரைக்கடல் போலுந் தானைகள் சூழச் செல்லினித் தமையனுங் காத, லரைக்கணப் பொழுது மறந்திடா திருக்க வருள்புரி யென்றுபோற் றினனே. (௩௨)

குலமுறை மையுற்றான் வந்திடும் வரவுங் கூறினன் மகிழ்ச்சி
கூர்ந் தரச, னிலகிய வெழில்சேர் மார்புறப் புல்லி யினியதீங் கனி
புன லருந்திப், பலதுதி பகன்று சடாயுவை மறவாப் பரிவொடு தன்
னக ரணைந்தா, னலமிகு மனைய சடாயுவவ் வனத்தி னூட்பல வுறை
ந்துசஞ் சரித்தான். (௫௫)

வேறு.

உளத்தினில்வாய்ந் திருகியபே ரன்பாற் சங்கை யொளிர்புனற்
கோ தாவரிநீ ராடி யுண்மை, விளக்கிய நம் பலனளிக்க மேவும் பொ
ன்னி வெள்ளநீர் தோய்ந்துசிறை யிரித்து வார்ந்து, வளத்தினைநன்
முனிவரர்கள் வாசஞ் செய்யு மகிமையினை யினையதென வகுத்தி
யார்க்கு, மளப்பரிய தண்டகா ரண்யந் தன்னி லைம்பதினு யிரம்வ
ருட மிருந்தா னம்மா. (௫௬)

இனையநலந் தருவனத்தி லிராமன் சீதை யிலக்குமணன் மூவ
ரும்வந் தனரிலங்க, மனையர்தமை முனிவரர்க ளாசி கூறி யாச்சிர
மந் தொறுந்துதித்தா ரிலங்கை யாளும், வனைகழலசூ ழிராவணன்மா
ரீசன் கூட வரவிரத மேறியவர் வாசஞ் செய்யு, நினைவரிய மகிமை
நிறை தானப் பாங்கர் நீடுபெருந் தேர்நிறுத்தி நின்று பார்த்தான். ()

செஞ்சொல்விடு மாரீசன் சீதை கண்முன் சிறந்தபொன்மான்
வடிவெடுத்துத் திகழ நின்றான், சஞ்சமலர்த் திருவனையாள் காதல்
கூர்ந்து கணவனுடன் பிடித்துவரப் புகன்றாள் கையில், வெஞ்சிலையு
மடுகணையு மெடுத்து நீங்கா விருப்பமுறு மிலக்குமணன் றன்னை மே
வும், வஞ்சியிடைச் சீதைதனைப் பாதுகாத்து வைத்துநில்லென் றெ
ழுந்துவரு மான்பின் போந்தான். (௫௮)

அகப்படும்பான் மையதாகி யனேகந் தூர மகன்றபின்வெங்
கணைதொடுத்தா னுசீ தாவென், றிகத்தினொடு பரத்தினையு மளிக்கும்

வாய்மை யிராமன்வாக் கதுபோலக் கூப்பிட் டெய்த, மிகப்பெரிய கணையுடனே வீழ்ந்த தந்த வெய்யகுரற் சீதைசெவி மேவும் போ திற், றிகைத்துமிகப் பயந்துசேல் விழிநீர் பாயத் திறல்செயிலக் கும ணனைச்சீக் கிரம்போ வென்றாள். (௬௭)

தடுத்துரைத்தான் கொடுமைமொழி புகன்றா ளப்பாற் றமைய னிருந் திடமிடந்தான் றேடிச் சென்றா, னடுத்துநின்ற விராவணன் சந் நியாசி வேட மதுகொண்டு வந்துபிட்சை யருந்தக் கேட்டா, னெடுத்தனன்பின் றன்னுருவ மிராமா வென்றா ளென்செய்வா ளவ ன்பற்றி யெடுத்துத் தேரை, விடுத்தனன்றென் னிலங்கையதில் விரைவிற் செல்ல வெய்துயிர்த்தா டவினையை வெல்வார் யாரே. ()

அரக்கன்மடி யினிலிருந்து வருந்திச் சீதை யழுதகுரற் சடாயு செவிக் கனலிற் செம்பை, யுருக்கிவிட்ட தெனக்கேட்ப துணர்ந்து தன்கண் ணெழுகனலிற் சிவந்திடத்தே ரோடா வண்ணம், பருப் பதம்போ னின்றுதடுத் தான்ப ரந்த பாலிநதித் தீரமதிற் பாவி தள் ளிச், செருக்கினொடு பெண்ணைநெடுங் கரையிற் சேர்ந்தான் சிற்ற மிகக் கொத்திமுடிச் சிதறச் செய்தான். (௬௯)

வாம்பரித்தேர் வண்டில்பொடி பட்ட தோங்கு மணிக்குடை யின் றலைகீழாய் விழுந்து மண்மே, லாம்பிகவிழ்ந் திருந்ததெனக் கிடந்த தம்மா வடல்கிளர்சா ரதியுமிறந் தனன்வில் லம்பு, தூம்பு படு தூணியுந்தூ ளாகச் செய்தான் சுழன்றெழுந்து சிறகைவிரித் தடித்தான் றூயா, டேம்பியழு திடப்பதகன் றரையில் விட்டுச் சிறகுகா லிரண்டுமெறுத் தெறிந்தான் மாதோ. (௭0)

கொடியகணை கழுத்துருவி யோட விட்டான் குண்டலம்போற் சடாயுவிழுந் தனன்கோ தண்ட, நெடியவன்றன் னருந்ததிக்கற் பனையா டன்னை நீண்டகரத் தாலெடுத்தோர் நிமிடப் போதின்,

மடியில்வைத்து விரைந்தெழுந்தா காச மார்க்க மாகவிலங் கையை யணைந்து வளர சோக, வடிநிழலின் வைத்தனன்மேற் பறவை வேந் தற் கடுத்ததம்ப ரீடனுக்காங் குரைப்ப தானுன். (சக)

வேறு.

சிந்தை தளர்ந்து சீதைதனைத் தேடி யிராம னிலக்குமணன், வந்து பாலி நதிகடந்து மணிநீர்ச் சுனைகள் பரந்திருந்த, கந்த வரை யில் வாம்பரித்தேர் கணைவில் லொடிந்து படுகளம்போன், றிந்த வித ம்வீழ்ந் திருந்தனகண் டிறகு சிதைபட் டதுங்கண்டார். (சஉ)

ஒழுக வுதிர முயிர்த்துடலி னுயிருண் டில்லை யெனக்கிடந்த, கழுகி னுருவங் கண்டிவனோ காலன் வேட மாறிவந்து, கொழுதி வரிவண் டரற்றுநெடுங் கூந்தற் சீதை தனைப்பிடித்தே, முழுதுந் தின்று ளிவனுயிரை முடிப்ப னென்று கணைதொடுத்தான். (சங)

அன்ன வேலைத் தசரதனுக் கிளையோ னியானென் றுரைத்த தற்கு, முன்ன நடந்த செயலனைத்து மொழிந்து சீதை தனையிலங் கை, மன்னுங் கொடிய விராவணன்றன் மடியி லெடுத்து வைத்து வந்தா, னின்னல் கூரப் பொருதிவீழ்ந் தேனென் றிவையும் புகன் றனனால். (சச)

வேறு.

அன்னநல் வாய்மை மொழிசெவிப் புகுத வன்புமீ தூர்ந்துள முருகி, யுன்னுயிர் விடுஞான் றுற்றதான் மனத்தி னெருசிறு துயராமு நினையேன், முன்னைநீ பூசை புரிந்திடும் வயித்திய நாதமா நகர்தனின் முதன்மை, மன்னிய சித்தா முதவட பாலின் வயித்திய நாதன்வாழ் தென்பால். (சரு)

அற்புத மான விபூதிகுண் டத்திற் கணித்துநற் சிதைதனை யடு க்கிப், பொற்புவாய்ந் திடுமுத் தரக்கிரி யையினைப் புரிகுவ னென்ற

னன் பூமி, யிற்குறை காலைப் பரப்பியே தலையைத் தொங்கவிட் டிற ந்தனன் சடாயு, மற்புய வலிமை யுடையவ னெடுத்து வந்துபின் னம்முறை செய்தான். (சக)

குலவிய மகிமைப் புகழ்பல படைத்துக் குணங்குடி யிருந்திடு மீரே, முலகுபோற் றிடுஞ்சித் தாமுதப் புனலின் மூழ்கியுத் தரக்கிரி யையினை, நலமுறச் செய்த விராமன்வெள் ளெருக்கி னீழலி னற் பிதிர் பிண்ட, மிலகுதர்ப் பணமும் வேதநன் மனுவா லெழில்பெற வியற்றினன் மாதோ. (சஎ)

அனைய நியமஞ் செய்துமுடித் தரவு மதியுந் தண்புனலும்
புனையும் வயித்திய நாதனடி பணிந்தன் புருவா கிப்பூசை
தனையாய்ந் தரிய வேதவிதி தவறு திலக்கு மணனோடு [தான்.
நினையு மவைதாம் பெறவியற்றி நெடுங்கா னகத்தென் றிசைபோந்

வேறு.

இலங்கெழிற்சீ தையைத்தேடி நடந்திராம னினியதிரு வணை யியற்றி யிலங்கை சேர்ந்து, வலன்கொள்கணை தொடுத்திரா வண னைக் கொன்று வந்தடுத்த வீபூடணனுக் கிலங்கை வாழு, நலன்கொ ண்முடி சூட்டியருந் ததிக்குக் கற்பு நல்கியிடுஞ் சீதையுடன் விமான மேறிக், கலந்துரிமை மிகுமிலக்கு மணன்பின் சூழக் கனகமதி லயோத்திசென்று காதல் கூர்ந்தான். (சக)

வேறு.

அற்க ளத்திறை தன்னை யருச்சனை
பொற்பு றச்செய் சடாயு புகழ்த்திற

நற்சருக்க நவின்றனன் காலவன்
சொற்றி றங்கொள் சருக்கமேற் சொல்லுவேன். (௩0)

சடாயுவருச்சனைச் சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧0௪௪.

---

## காலவச்சருக்கம்.

நீலமே னியன்றனை நிதமும் போற்றிடுங்
காலவ னெனும்பெய ரிருடி காதையைச்
சாலவே சூதமா முனிவன் றன்மைசேர்
சீலமா முனிவரற் குரைத்தல் செய்தனன். (௧)

விழுமிய கேள்வியன் மேன்மை பெற்றிடு
மெழுபது கோடிக ளுடனி ருந்தனன்
வழுவறச் சந்திவந் தனமி யற்றினன்
பொழுதுவீண் போக்குவ திலன்பு கன்றிடின். (௨)

இனையவன் றலங்கள்சஞ் சரித்தற் கெண்ணியே
புனைநலம் பெற்றகா விரிப்பு குப்புன
றனைவலஞ் செய்துமூழ் கினன்பின் சார்ந்திடும்
வினைபொழி சாதரபுட் கரிணி மேவியே. (௩)

தோய்ந்தன னரங்கநற் றனைப்ப தாம்புய
மேய்ந்திடும் படிதுதித் திறைஞ்சிப் போந்தனன்
வாய்ந்தசிர் முட்டமா நகர மாதிபாப்
பாய்ந்திடு நதித்திருப் பதிநூற் றெட்டுமே. (௪)

ஆங்குள தீர்த்தநீ ராடி வண்டுழாய்
பாங்குறத் தரித்திடு முகுந்த னைப்பணிந்

தோங்கிய காதன்மீ தூரப் போற்றியே
நீக்குமென் மகேந்திரப் பொருப்பி னின்றனன். (ரு)

வேங்கையின் றேல்விரித் திருந்து வேங்கட
வோங்கிய கிரிச்குநே ரொன்று மில்லையென்
றுங்கவ னினைந்துத யத்திற் செய்யவிற்
பாங்குறு புணரிநீர்ப் படிந்து மூழ்கினுன். (சு)

மத்தியா னந்தனில் வளரும் வேங்கடத்
துத்தம சுவாமிபுட் கரிணி யொண்புனற்
சித்தநன் மகிழ்பெறத் தோய்ந்து செவ்விசேர்
பத்தியால் வேங்கட நாதன் பாதமேல். (எ)

மருக்கமழ் பைந்துழா யணிந்து வந்துபின்
விருப்புறு மகேந்திர கிரியை மேவியே
திருப்பொலி செயன்முறை விசுவ தேவமு
மருத்திமே லறுசுவை யடிசி லுண்டனன். (அ)

தரணிமேற் றிசைபுகுஞ் சாயங் காலையி
லரண்மலி மதுரநா யகனை யன்பினுற்
பரவின னீங்கிதிற் பழுது வந்திடின்
விரவுதீ யினிலுயிர் விடுவ னென்றனன். (கூ)

இம்முறை யாயிரம் வருட மெய்துஞான்
றம்மறை யிருடிசே துவினி லாய்புனற்
செம்மையா யாடிமேற் சித்த பாதுகை
யிம்முறை யேறியுத் தரத்தின் மேயினுன். (க0)

செல்லுழி யுப்பகா விரியின் றீரமேன்
மல்கும்வெள் ளெருக்குநல் வனத்தின் பாங்கரி
னெல்லையி னடந்தன னெழுந்தி ராக்கதன்
கொல்லவந் தவனெனக் கொதித்து நின்றனன். (கக)

காதனே யெனகர சிங்க மந்திர
மோதியொண் புனலெடுத் திறைப்ப வுக்கிரஞ்
சாதக மாகியவ் விருடி தாண்மிசைக்
காதக விராக்கதன் கனிந்தி றைஞ்சினன். (கஉ)

இறைகட லுலகிலிவ் வுருவம் வந்தது
புரையறப் பகரெனப் பூரு வந்தனி
லுரைபெறு துந்திவ னெனவு ரைப்பரென்
வரையறை பெறும்பெயர் வாய்மை யென்றனன். (கங)

மல்கிகார்ச் சுனமகா தேவன் முன்னரி
னெல்லைகா ணருஞ்சிவ நிசியி னோர்பெறு
செல்வமா மறையவன் சிவபு ராணநூல்
சொல்லுமா யிடைப்பல தூட ணஞ்செய்தேன். (கச)

கந்தரு வக்குலத் துதித்துக் கானநூல்
வந்ததாற் பாடினேன் மறைவ லோரெலாஞ்
சிந்தைகூர்ந் ததிசயித் தனர்சி வந்தவ
னுந்துவெஞ் சாபமோர் நொடியிற் கூறினன். (கரு)

அகந்தைசெய் யரக்கனு மைந்து சன்மநீ
சுகந்தனி லெடுத்திடத் தக்க தென்றன
னிகழ்ந்துசேர்ப் புராணநூ லினைப்ப ழித்தலாற்
புகன்றது பலித்தது புனித வென்றனன். (கசு)

வேறு.

சென்றபின் ஞான்கு சென்மஞ் சிவசிசி யதனி னுதன்
றன்றரி சனத்தா லோர்தாஞ் சனனமீ வயித்திய நாதன்
வென்றிசேர் தலத்த ரக்க னுருவினை யெடுத்து வேதம்
நன்றறிந் திலகு கால வனைப்பிடித் திடக டப்பாய். (கஎ)

அன்னவன் மனுவொன் ருேதி யரும்புன றெளிப்பான் பின்ன
ரின்னவல் லுருவ நீங்கி யிடுமெனப் புராண வாய்மை
நன்னெறி யறிந்து கூறும் வேதிய னவின்று னன்னோன்
சொன்னவப் படிச னித்துத் தொடர்ந்தன னென்று னம்மா. (கஅ)

அருட்கிட ஞன வுன்கை யநம்புனற் பட்ட போதே
யிருட்பொலி பாவ நீங்கிற் றிலகுகந் தருவலோகம்
பொருட்சென‌ச் செல்வனென்று புகன்றுபொற் புறம்வி மானந்
திருத்தக வேறித் தெய்வக் குழாம்புடை சூழச் சென்றுன். (கக)

வேறு.

மங்மளவேங் கடநாதன் றரிசனத்தில் விசாரம்வந் ததனுல் வெய்ய, வங்கியின்மூழ் குவனென்று கொடர்தமை யழன்மூட்டு மென்று னன்னோ, னெங்கள்குலக் குருவேநின் றனைநீங்கி யாங்களெவ்வா றிருப்போ மென்றே, செங்கைவிரித் தெமைபிரட்சிப் பதுசேவை யன்றோவென் றுரைத்தல் செய்தார். (உ0)

அரிசனப்பன் பூசாவிச் சதிவர்தா லன்பருக்சென் றருளான் முன்னந், தெரியவுணர்த் தினையதனைச் சிர்தையில்கூவத் தியபினமென் றிரங்கித தேம்பும், பரிவுடையோர் தமைப்பார்த்துக் காலவனீ ரீதயுத்தப் படியா மென்றே, யுரிமையுறப் புகன்றிம்ந றவிர்த்தங்கி மூட்டுமென வுரைத்தான் மாதோ. (உக)

என்செய்வா ரதன்பினெரி யழன்மூட்டி வைத்தனர்கா லவனெ மூழ்ந்து, தன்செய்கை யுறுதிமுறை மனுவோதி யங்கியின்மூழ் கினன் மூ ழாமன், மின்செய்சிற் றிடையுபய நாச்சியா ரிமையோர்கள் விரைந்து செல்லப், பொன்செய்பாம் பணைநீங்கி யவனெதிர்கார்த் திகைப்பருவம் போந்தான் மாயன். (உஉ)

மன்னும்வயித் தியநாதன் றனக்கிலகும் வாயுதிசை யதனின் வந்து, நன்மைமிகு காலவனுக் கெதிர்நின்று நளினமலர்க் கரம்பி டித்துத், அன்னும்வனர் கனனீக்கி யெடுத்துவரங் கேளென்றுன் று யரந் தீர்ந்து, பன்முறைகா லவனன்றேன் றனைப்பணிந்து பரிந்து துதிசெய்தான் பரக்கால் (உரு)

இணையதலந் தனிலேய நீயிருத்தல் வேண்டும்பே ரின்பு வீடு, தனையளிக்கு மாதலினுந் தலைவாசம் யான்செய்வரந் தருதல் வேண் டும், புனையுகரும் டசுந்துளப வேங்கடநா யகவென்று புகன்று னன்றே, னைனயபடி வேண்டும்வர மனைத்துமளித் தனனடங்கா மகிழ்ச்சி கூர்ந்தான். (உச)

வரங்கொடுத்த வாய்மையினுல் வரதவேங் கடநாத னெனவா னேரு, பிரந்தகருங் கடலுழக்க பூவுலகந் தனிலுள்ளோ ரேனை யோருங், காகுவித்துத் துதிசெய்தா காலவனுக் கருண்முருகுந்தன் கமலபாதம், பரிந்துபணிந் தவரிட்ட காமியம்யா வையும்பெறுவார் பலநாள் வாழ்வார். (உரு)

வேறு.

கருத்த மைந்நிறு காலவ னாரணன்
திருப்ப தாயபுயம பூசைநி தஞ்செய்து
மருத்த மாயணி வள்ளல்லை நந்தமவாழ்ந்
திருக்கு நறசதி யின்பமேற் பெறறனன். (உசு)

தெளிவு பெற்றிடு சீடர்கள் யாவரு
நளின மங்கைத னாயகன் பாதமேற்
றளிர்ப சுந்துழாய் சாத்திய கங்குளிர்ந்
தெளிதின் வைகுந்த மெய்தியின் புற்றனர். (உஎ)

வேறு.

மத்தநற் றுழாயணி வள்ள லைத்தொழும்
பத்திகூர் காலவன் பண்பு கூறினே
னுத்தம மானநல் லுறுதி வாய்ந்திடு
சித்திர கேதுவின் செய்கை சொல்வன்மேல். (உஅ)

காலவச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-க0சஉ.

---

## சித்திரகேதுச்சருக்கம்.

இனிதின்மூ வாறு புராணநன் குணர்ந்தே யெடுத்திதம் பெறப்பகர் [சூத
முனிவரன் சவுன காதிமா முனிவர் முகமலர்ந் தகமகிழ் கூரப்
புனிதன்வாழ் தெய்வ நாயகன் வயித்திய நாதனற் பொற்புறு சரிதந்
தனியொரு காதைய யற்புத மாகத் தகும்படி யுரைத்தன்மே யினனால்.

வேறு.

தயங்குசவ் வீர தேசந் தனைப்புரந் தளிப்போன் மேலாஞ்
செயம்பெறு சித்திர கேது திகழவன் மனைவி கற்பு
வியந்தறி வரிய மேன்மை விளங்குமே மாங்கி யன்னோ
னயந்தரும் புதல்வ னின்றி நாடொறும் விசார முற்றான். (உ)

எண்ணினன் சிவனை மாலை யிந்திரன் முதல்வா னோரை
நண்ணும்வே தியரை முன்னம் பூசனை நயந்து செய்யேன்
றிண்ணிய கொடுங்கோ லோச்சித் திரிந்ததாற் சேர்ந்த தென்னைப்
புண்ணியப் புதல்வற் பேறு கிடைத்திடாப் புன்மையென்றே. (௩)

இம்முறை யிரங்கு போதிற் காற்கிய முனிவ னென்போன்
செம்மைசேர் சித்திர கேது திருத்தகு மனையிற் போந்தான்
சொம்மென வெழுந்து வேந்த னருக்கியங் கொடுத்துப் போற்றி
விம்மிவெய் துயிர்த்தி ருந்தான் வினவிமேன் முனிவன் மாதோ. (சு)

மனத்துறு கிலேசந் தன்னை வகுத்துரை யென்று வேந்தன்
றனக்கிதம் பெறநயந்து கூறின னதன்பின் றக்கோ
ரினத்தினன் மகிமை பெற்றோ யென்குறை புதல்வ னில்லை
நினக்குவே றுரைப்ப தென்னென் றிம்மொழி நிகழ்த்தல் செய்தான்

வேறு.

அரசனுங் குரைப்ப வுணர்ந்திடு முனிவ னகங்குளிர்ந் தெடுத்துரை செய்தான், புரவல புதல்வற் பேறுனக் கில்லாக் காரணம் புகலுவன் முன்னம், விரவுநல் வளஞ்சேர் கலிங்கதே சத்தின் வேந்தனீ யாகவீற் றிருந்தாய், திரமுற வேத முணர்ந்தவே தியன்றன் சிவசிசிப் பூசையை யிகழ்ந்தாய். (கூ)

அன்றவன் பூசைத் திரவிய மதனி லளித்திடு பழத்தினை யெடுத்துத், தின்றனை யப்பால் வேறிடந் தன்னிற் சிவசிசிப் பூசையை முடித்தான், மன்றவிப் புவியிற் சிறிதுநா ளிருந்தே மரித்தனை யியற்றிய பாவ, மொன்றியே புதல்வற் பேறுனக் கில்லா துளந்துயர் கூர்ந்திருந் தனையே. (எ)

உனக்குநல் லுறுதி யுபயகா விரியி னுப்பணி லொருதல முளது, மனத்துயர் தீர்க்கு மாயிடை வரத வேங்கட நாதனை வணங்கித், தனக்கிணை யில்லாத் தையலை வயித்திய நாதனைப் பணியின்மேன் மூன்று, தினத்தினிற் புதல்வற் பேறுதான் கிடைக்கும் வகைவட மலையவன் செய்வான். (அ)

வன்றிற லுறுதி வேள்வியா னியற்ற வளர்திர வியமளித் திடுநீ, யின்றுதா மாமற் செல்லுதி யெனவே நிறையுமா தவனுரைத் தனன்பின், வென்றிசே ரரசன் முனிவரன் மனத்தின் விழைந்தன யாவையு மீந்து, தன்றுணை வியைமுன் போந்திடச் செய்து தான்படையுடனெழுந் தனனே. (கூ)

நல்லஞான் றுற்றுத் தையலே வயித்திய நாதனை விதிமுறை பணிந்தே, செல்வமா முனிவ னுரைத்தவப் படியே செய்தனன் வேங்கட நாதன், சொல்லரும் புகழ்சேர் புதல்வனைப் பெறுவை சூழ்ந்திடுஞ் சிவநிசி விரத, மொல்லையிற் றுழா தியற்றுதி வயித்திய நாதனை வணங்கியென் றுரைத்தான். (கO)

திகழ்ந்திடுந் தலத்தை மூவலஞ் செய்து தெய்வநா யகனருள் பெற்றுப், புகழ்ந்திட மகிமை பெற்றதன் றேசம் போந்துமா தந்தொறும் பொருந்தி, நிகழ்ந்தபே ரன்பாற் சிவநிசி விரத நியமமா யியற்றின னதன்பி, னுகந்தொறு முள்ளோர் துதிசெயப் புதல்வ னுதித்தன னுத்தம தினத்தில். (கக)

சிறிதுநாட் சென்ற பின்புதல் வனுக்குத் திகழ்தரு மணிமுடி சூட்டி, நெறிமுறை செங்கோல் செலுத்திடச் செய்து நேசமாம் வேங்கட நாதன், பிறிவில்லை குந்தங் கயிலைமால் வரையும் பெற்றனனிக்கதை கேட்போ, ரறிவுள புதல்வற் பேறுபெற் றிடுவா ரளப்பருநிதிபடைத் திடுவார். (கஉ)

வேறு.

பத்திமீ தூரவெம் பிரான்ப தந்தொழூஞ்
சித்திர கேதுவின் சருக்கஞ் செப்பினே

னுத்தமன் வீரசே னன்ற னுண்மைசேர்
சுத்தமாஞ் சருக்கமே லெடுத்துச் சொல்லுவேன். (கஙு)

சித்திரகேதுச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கoடுங.

## வீரசேனச்சருக்கம்.

சார்தரு நல்வளந் தழைத்து நாடொறுஞ்
சீர்திகழ் வாலிய தேச மன்னவன்
கார்நிகர் வண்மைசேர் கரத்தி னுன்புக
ழார்சொலற் பாலரெண் ணரிய தாகுமே. (க)

விளங்கிடு மவன்பெயர் வீர சேனன்வா
ழிளங்கும ரனைவிழைந் திகப ரம்பெற
வளர்ந்திடும் விரதநன் கியற்றி மான்மிய
மளந்தறி தருஞ்சிவ புராணங் கேட்டனன். (உ)

உரைத்திடு புராணிக ருளம கிழ்ந்திட
விரத்தின மிழைத்தவா பரணம் யாவையும்
வரைப்புய மன்னவ னளித்து வண்மைசேர்
தரைக்கண்வீற் றிருக்கவா சனமுந் தந்தனன். (ங)

தாழ்ந்திடு புவிதனிற் றூனி ருந்தன
ஞழ்ந்திடு புராணநற் கதைய னைத்தையும்
வாழ்ந்திட வுணருநாண் மவுன் நீங்கியே
சூழ்ந்தபே ருடன்பல சொல்வ ழங்கினன். (௪)

இனையமன் னவன்றனக் கிதம ளித்திடுந்
தனயன்வந் துதித்தனன் றகுதி பெற்றநற்
றினமதிற் சித்திர சேன னென்றுபே
ரனைவரு முரைத்திட விட்ட ழைத்தனன். (௫)

அப்புதல் வன்றனக் கீரெட் டாண்டினிற்
செப்பரும் புகழ்சவு ராட்ட தேசம்வாழ்ந்
தப்புவிக் கிதஞ்செய்மன் னவன ளித்திடு
மைப்புயற் கூந்தலா டனைம ணஞ்செய்தான். (௬)

இருபதாண் டினிற்கய ரோக மெய்திமேற்
பெருகியை யைந்திலென் பெழுந்தி யாக்கையைக்
கருகிடச் செய்துமேற் கனத்த தாதலா
லருமையாம் வயித்திய மனைத்துஞ் செய்தனன். (௭)

நலிவுசெய் ததுதனை நாடி மன்னவன்
மெலியுநுண் ணிடையுடன் விதன மீதுறப்
பொலிவிழந் தெண்ணிடும் பொழுத ருந்தவ
மலிகவு தமமுனி வரன்வந் துற்றனன். (௮)

அருக்கிய முதலிய வளித்து மன்னவன்
விருப்புறு முகமனும் விளம்பிப் புத்திர
னிருக்குமந் நிலைமையு மெடுத்துக் கூறினன்
றிருக்கிளர் முனிவரன் றியானஞ் செய்துமேல். (௯)

மன்னகேள் சிவகதை மகிழ்ந்து கேட்பவர்
பின்னொரு வர்களுடன் பேசி டாரதை
யுன்முக மாகவே யுணர்வர் நீமுன
மன்னிய ருடன்பல பேசிக் கேட்டதால். (௧௦)

இத்தகு நோய்தொடர்ந் தெய்திற் றீறிலா
வத்தன்மான் மியந்தனைக் கேட்கு மாயிடைச்
சித்தம்வே றுகவே சிலசொற் சொல்பவன்
புத்திரன் கயவியா தியைப்பொ ருந்துவான். (௧௧)

ஈதலா துயர்ந்தவா சனத்தி ருந்துமே
ஞதனற் புராணநூல் கேட்கு நன்மையில்
பாதக மிரவுரவம் பதிய மூழ்கினுஞ்
சாதகம் பெறநெடுங் காலந் தான்செலும். (௧உ)

புகன்றிடு புராணநிந் தனைசெய் புல்லறி
வகந்தையர் புத்திர கீன ராகுவா
ரிகழ்ந்திடக் கயவியா தியும்வந் தெய்திடு
நிகழ்ந்துநீ ரிழிவெனு நோய்நி ரம்புமே. (௧௩)

விடையுகந் தவன்றல புராண மேன்மைநன்
னடைபெறக் கேட்பவர் நடுவெ ழுந்திடி
னடைகுவர் குன்மநோ யன்றிக் குட்டமுந்
தடைபடா தெய்திடுந் தளர்ந்து வாடுவார். (௧௪)

திகைப்பொழித் திடுஞ்சிவ புராணங் கேட்டுமே
னகைப்பவ ரிரவ்ரவ நரகஞ் சேர்குவார்
வகைத்திறம் விளங்கவா சித்த் பேர்க்குநற்
றுகைப்பொரு ளளித்திடார் நரகிற் றேய்குவார். (௧௫)

வண்மைசேர் புராணமான் மியம்வ குத்தெடுத்
துண்மையாய்ப் புகன்றவர்க் குபர்பெ ரும்பொரு
ளுண்ணிழை யாடைநல் கிடார்க ளைந்துதன்
கண்ணிழந் தருநர கழுந்தி யேங்குவார். (௧௬)

பொருந்திட வுரைத்திடு புராணி கர்க்குமேற்
திருந்துமா பரணமுஞ் செம்பொன் ஞடையும்
பரிந்தளித் திடாதவர் பாரின் மீதினின்
வருந்துவர் சுவானமாய்ப் பிறந்து மன்னகேள். (கஎ)

முன்னவன் புராணமேன் முழுதுங் கேட்குநன்
நன்மைசேர் நாட்புரா ணிகர்க்கு நன்னிதி
பொன்னிஞற் செய்தவா பரணம் போதுசாந்
தின்னபற் பலவளித் திடவி திக்குநூல். (கஅ)

என்றுமா முனிவர னெடுத்து ரைத்திவன்
பொன்றுவன் மாதமோர் மூன்றிற் போகுமுன்
னன்றிசேர் வயித்திய நாத நற்றலஞ்
சென்றுசித் தாமுத தீர்த்தந் தோய்ந்துபின். (கக)

புதல்வனல் விருச்சிக மாதம் புண்ணிய
மதிகமா மபரபக் கத்தி னட்டமித்
திதியினில் வயித்திய நாதன் சீரடி
விதிவழா தருச்சனை செய்து மேன்மைசூழ். (உ0)

சடாயுகுண் டந்தனிற் றயங்கு நீற்றினை
விடாதமெய் யன்பிஞ லெடுத்து மேனிமேற்
படாதபா டில்லையென் றுரைக்கப் பண்ணுநோ
யடாதொழிந் திடுந்தரித் திடுமப் போதினின். (உக)

செல்லுதி யெனத்தெரிந் தெடுத்துக் கூறிஞ
னல்லறீர்ந் திடப்புவி யளிக்கு மன்னவ
னல்மா முனிவர னவிலும் யாவையு
மொல்லையிற் செய்தன ஞெழிந்த தன்னநோய். (உஉ

இட்டகா மியந்தரு மெழிற்புள் ளூரினிற்
றிட்டமாஞ் சடாயுகுண் டத்தி னுக்குநற்
பிட்டதி ரசம்வடை பிறங்கு மோதக
மட்டிலா நிவேதன மகிழ்ந்து செய்தனன். (உங)

வேறு.

மிக்கபுகழ் படைத்தோங்கு சடாயு குண்ட வேதிகைநற் பசும் பொன்வைத் திழைத்து மேன்மை, தக்கநவ மணிகுயிற்றி யதன் வெண் ணீறு தனையணிந்து பின்னர்த்தன் புதல்வன் பாரி, தொக்க பரி சனஞ்சூழ நின்று வேந்தன் றொல்புகழ்சேர் தேசமதிற் பாதி தூய, செக்கர்நிற மொளிர்வயித்திய நாதற் கீந்து திருவருள்பெற் றெழிற்கொடிஞ்சித் தேர்மேற் போந்தான். (உச)

பெருமைபெறு பிரதோட காலந் தன்னிற் பிறங்குசெவ்வாய்க் கிழமையினிற் பிதிர்க்கள் ஞான்றி, னருமைமிகு சடாயுகுண்டத் திலகும் வெண்ணீ றணிந்தால்வெண் குட்டமுத லனைத்துந் தீர்வார், பொருந்திடும் பகைவர்தமை வெல்வர் விட்டுப் போகேனென் றுரைத்திடும்பேய் பூத மோடுங், கருதியிடு மிட்டகா மியங்க ணல் குங்கைகண்ட பலனுகுங் கடல்சூழ் பார்மேல். (உரு)

வேறு.

கிளர்ந்திடு முலக மீதிற் கெழுமுசெங் கோல்செ லுத்தி
யளந்துகண் டெடுத்துக் கூற வரியவண் புகழ்ப டைத்து
வளம்பெறு வீர சேன மான்மியச் சருக்க வாய்மை
விளம்பின னிப்பாற் சில விருத்தநற் சருக்கஞ் சொல்வேன். (உசு)

வீரசேனச்சருக்கமுற்றிற்று.

ஆகு திருவிருத்தம்-கoஅக.

## சீலவிருத்தச்சருக்கம்.

குற்றநீத் திலகிய குணமி குந்திடு
நற்றவ மியற்றுநன் முனிவ னூரதன்
பெற்றிசேர் கதைபிறி துரைத்த தன்றியே
மற்றுமோர் கதைவகுத் துரைத்தன் மேயினான். (க)

வெயில்விரி பசும்பொன்வாய்ந் திலகி விண்டொடு
மெயிலுடுத் தெண்ணரும் புகழ்த ழைத்திசை
பயில்பயி டனிசி தேசம் பார்ப்பனர்
மயிலிய லாரொடும் வாழ்வ தன்னதில். (உ)

குலவிய கண்ணுவ கோத்தி ரந்தழைந்
திலகிடப் பிறந்தவன் கபில னென்றுபே
ருலகுளோர் கூறுதற் குரியன் பாரிபேர்
நலமிகு சுகுணையென் றுரைப்பர் நாட்டினின். (ங)

ஏலவார் குழலெழிற் சீல விர்த்தனை
யாலமுண் டவனரு ளால ளித்தனள்
காலகா லங்களிற் கருதிச் செய்சடங்
கோலநீர்க் கடலுல குவப்பச் செய்துபின். (ச)

வேதவே தாங்கமு மோது வித்திடுங்
காதல்கூர் பருவம தறிந்து கற்றுணர்
போதகா சாரியன் புத்தி ரன்றனக்
கேதநீங் கிடவளிப் பதுமி யற்றினான். (ரு)

இளையவ னூழ்வசத் தியற்கை யென்கொலோ
நினைகிலன் பாவமீ தென்று நிந்தனை
தனைநிதஞ் செய்தனன் றரணி மீதினி
லனைவரும் பழித்திட மதுவ ருந்தினன். (சு)

தண்ணளி புரிந்திடுந் தாயைத் தந்தையை
யெண்ணருந் தூடணஞ் செய்தி கழ்ந்துகள்
ளுண்ணும்வே சியர்நக ரெச்சி லுண்டனன்
பண்ணிடுங் கொடுமையார் பகுத்துக் கூறுவார். (எ)

அன்னவள் சேடம்யான் கொடேன கன்றுநில்
லென்னுமப் பொழுதினும் வலிந்தெ டுத்ததைத்
தின்னுத றவிர்ந்திலன் றிருந்து மெல்லினும்
புன்னகை செய்துபுல் லுதலொ ழிந்திலன். (அ)

பிறங்குவேல் விழியொரு பெண்ணை யீன்றுவைத்
திறந்தன ளவளுநல் லிரதி யாமென
நிறங்கிளர் பருவமெய் தினணி னைப்பிறு
மறஞ்சுடு மெனல்விடுத் தவளைப் புல்லினன். (கூ)

எண்ணியென் சொல்வன்யா னவள்பின் னீன்றிடும்
பெண்ணையும் புணர்ந்தனன் பெரிய பாவிதான்
மண்ணினி லாதிமத் தியார்ச்சு னேசுர
வண்ணல்வீற் றிருந்திடுந் தலம டுத்தனன். (க0)

அனையநற் றலந்தனி லவன்கொ டுந்தொழி
றனையுரைப் பரிதுநா டொறுந்தன் னெஞ்சினி
னினைகுவ னிவர்மனை சிதியெ டுக்குமா
றினையதென் றிரவினிற் றிருடி யேகுவான். (கக)

விடையுகந் தேறுமவ் விமலன் றன்னரு
ளுடையவன் மறைக்குலத் துதித்து மாமறை
தடைபடா துணர்ந்தவன் சடாயு குண்டனீ
றிடைவிடா தணிந்திட முடிந்து றங்கினன். (கஉ)

அணங்கனு டனைவிடுத் தவன்முன் போலொளித்
திணங்குறல் விரவினிற் றிருடற் கெய்தினுன்
குணந்தரு சடாயுகுண் டத்தி னீற்றினைப்
பணந்தொகு முடிப்பென வெடுத்துப் பார்த்தனன். (கங)

உண்ணுதற் கமையவோர் காசு மின்மையாற்
றுண்ணென வூதியே தூற்றி விட்டுமேல்
வண்மைசே ராடையைக் கவர்ந்து மாதினை
நண்ணுமுன் னமன்கணம் வரவி றந்தனன். (கச)

சிவகண மியமதூ தரைச்செ யிர்த்தடர்ந்
திவர்முன நீவிர்வந் திடுவ தென்கொலென்
றவர்தமை விலக்கிமுன் னூது நீறது
தவறியன் னவனுட றன்னின் வீழ்ந்தது. (கரு)

கண்டிவீர் போலுமென் றுரைத்துக் கண்ணின்முன்
விண்டொடும் விமானமே லேற்றி மேவினு
ரெண்டிசை புகழ்ந்திடு சடாயு வின்னெழிற்
குண்டநீ றணிபலன் கூறற் பாலதோ. (கசு)

வேறு.

திகழுஞ் சீல விருத்தன் றிருத்தமாம்
புகழ்கொள் வாய்மைச் சருக்கம் புகன்றன
னிகழ்சு வாசினி மான்மிய நீணில
மகிழும் வண்ண மெடுத்து வகுப்பன்மேல். (கஎ)

சீலவிருத்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-க௦கஅ.

## சுவாசினிச்சருக்கம்.

ஆழ்ந்திடு கங்கா தீரமீ திலகு மருமறை யவன்மனை யவள்சிர், குழ்ந்தெழில் கொழிக்குஞ் சுவாசினி யென்னுந் தூயவ ளாயிடை யுயர்ந்து, தாழ்ந்திடு பனைக டழைந்திடு பராரை விருக்கமுந் தண் மலர் நெகிழ்ந்து, வீழ்ந்திடு பசுந்தே னுடன்முறுக் கவிழ்ந்து விரை கமழ் நலனையும் புகழ்ந்தாள். (க)

துணைபிரி யாம லிருந்திடு மினிய தோழிய ருடன்பொழி லகத்தி, லிணைமலர் கொய்யப் போந்தனள் வந்தோ ரியாவருந் தனித்தனி பிரி ந்தார், மணமலி புன்னை நீழலிற் றனித்து நின்றன ளம்மரப் பொ ந்தி, னனைகொடும் பேய்தான் கண்டுமோ கித்தே யடுத்தது பிடித் திட வம்மா. (உ)

குணதிசை யதனிற் றளிர்விரித் திலகு கோழரைக் கடம்பினீள் பொந்தி, னணையும்வே தாளம் வெளியினிற் புறப்பட் டனையமுன் னின்றதங் கதன்பின், வணமிகு போதி யெனுமரப் பொந்தின் வசி த்திடு பிரமரட் சசுவொன், றிணையிலா வணங்கன் னவளெதிர் நின்ற திவையெலாங் கண்டுவெய் துயிர்த்தாள். (ங)

ஈங்கிவ டன்னை யான்முனங் கண்டேன் பின்புநீ கண்டனை யின்று, பாங்கரி னின்று முறைமையா யிவளை யனுபவித் திடும்படி யன்றி, யோங்கிய வலிமை பேசிடிற் கொல்வே னுனையொரு கண ப்பொழு ததனி, னீங்கிநீ போவென் றுரைத்திடு மொன்று நெ ருப்பெழக் கூறி நின்றதுவே. (ச)

இனையபற் பலவுஞ் செவிப்புகும் பொழுதி னென்செய்வாள் வெருவினள் மூர்ச்சை, தனையடைந் தீன்ற தந்தையின் கிருகஞ் சார்

ந்தன ளுண்டி நித் திரையோர், தினையள வேறு மின்றியே பித்தர் செய்கையை யெய்தின ளப்பாற், புனையிழை தன்னை யிருடியாச் சிரமம் புகச்செய்து போந்தனர் தாமும். (ரு)

மெல்லிய றன்னை மணம்புரிந் தவனும் விருப்புறு மன்னையும் பிதாவு, நல்லமா முனிவ ரிடத்திலோர் மாத நான்குமா தம்மொரு வருடஞ், செல்லுநா ளளவும் விதிமுறை வாசஞ் செய்தனர் வேறு வே ருக, வொல்லையி லிவர்க ணினைவறிந் தொருபாழ்ங் கிணற் றினிற் றள்ளினின் ருளித்தே. (சு)

அலகைக ளிருந்த வதன்பின்மூ வருங்கா ணுதுபோய்த் தேடி யே பார்த்து, * நிலவரங் கண்டு வெய்துயிர்த் தெடுத்து நின்றனர் மூப்பது வருடஞ், செலவரி திதன்முன் செய்தபுண் ணியத்தாற் சேர்ந்தனர் வெள்ளெருக் கிலகி, நலமிக வளிக்கும் வனத்திலப் பொழுதி னடுங்கியே நின்றன புறம்பின். (எ)

கண்ணுவ முனிவ னுச்சிர மத்தின் கடைப்படு வடதிசை யதனி, னெண்ணமுங் குலேந்தே யவையெலா மேங்கி நின்றபின் கணக்குழைப் பதியை, வண்மைசே ரொழுக்க முறைமையாற் றெரு ழுது வணங்கின ளதிசயித் தம்மா, பெண்ணணங் கவளை யீன்றவ ரிருந்த பெரியவே தியர்பதம் பணிந்து. (அ)

கேட்டனர் தலத்தின் மகிமையை மறையோர் கெழுமுசித்தா மூத தீர்த்தம், வாட்டடங் கண்ணுண் முழுகிடச் செய்ம்மின் வலி மைசேர் பசாசணு காது, நாட்டமூன் றுடைய வயித்திய நாத னற் பதம் பணியுமப் பொழுதி, னீட்டுநல் வினையா லிகபரம் வேண்டும் யாவையு மளித்திடு மென்றார். (௯)

---

* நிலவரம் - கிணறு.

திலகநான் மறையோ ருரைத்தவப் படியே தீர்த்தநீ ராடிடச் செய்து, நலமிகும் வில்வக் கிளையினால் வயித்திய நாதனை யருச்சனை புரிய, விலகுதாய் தந்தை செய்தன ரணங்கு மியற்றியே வலம் வரும் பொழுதிற், சொலமகி ழளிக்குஞ் சடாயுகுண் டத்தின் றூயநீ ரள்ளியே யணிந்தாள். (௧௦)

ஆரமு தனைய வணங்கிவட் கடுத்த வலகைநோ யன்றியே யச்சோ, கோரமாம் வினைக ளியாவையு நீங்கிக் குலவுபே ரின்ப மெய் தினர்தஞ், சீரணி விளக்கந் தோன்றிட நின்று டிகழ்ந்திடு மனையகுண் டத்தின், காரண முணர்ந்து மூவரு மெண்ணிக் கரைபெரு மகிழ்ச்சியைப் பெற்றார். (௪௧)

கரங்குவித் திலக மூவலஞ் செய்து காசினி யதனின்மே லான, வரந்தரும் வயித்திய நாதனை வணங்கி வாழ்வூ ரெய்தின ரதனாற், புரந்தரன் முதலாங் கடவுளர் போற்றும் பொற்புறு சடாயுகுண் டத்தின், திரம்பெறு மகிமை யரிதரி தென்றே செப்பினனாரத முனிவன். (௧௨)

வேறு.

தூய வாய்மைச் சுவாசினி வண்மையை
யேயு மாறு வகுத்தெடுத் தோதினே
னுயும் வண்புக ழான்றதுச் சீலனண்
பாயி லங்கு சருக்கம் பகர்வன்மேல். (௧௩)

சுவாசினிச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௧௧௧.

---

## துச்சீலச்சருக்கம்.

திருந்துகாம் பிலிய மென்னுந் தேசம்வாழ் மறையோன் வேதம்
வருந்துதுச் சில னென்போன் மத்தாண் மலர்சேர் பித்த

னரும்பலன் கொடுப்ப தென்னென் றனேகமா நிந்தை பேசி
யிருந்தனன் சோரன் வீட்டிற் பொருள்கவர்ந் தெழிற்றீ யிட்டான்.

ஆரிய ரன்றிச் சுற்றத் தார்களு மவனைத் தள்ளிப்
பூரியா போவென் றூரின் புறத்தினில் விடுத்தா ரன்னோன்
பாரிபுத் திரர்பின் போதப் பற்பல வூர்க டோறு
மோரியை யொத்துக் கூப்பிட் டோடியே திரிந்தி ரந்தான். (உ)

வழிதனி லிடிவி ழுந்து மாய்ந்தனள் பாரி யன்னோ
ளழியுமுன் மைந்தன் கூட விழுந்திறந் தனனொ ழிந்து
செழியகா னகத்திற் சின்னா டிரிந்தன னதன்பின் செவ்வி
பொழிதரும் வயித்திய நாதம் போந்துபூங் கோயில் சேர்ந்தான்.()

சிலபகல் சென்ற பின்பு திருந்துமஞ் சனமெ டுக்கு
மிலகிய பணிதான் செய்தே யிருந்தன னவனைத் தூய
நலமிகு மெதிவ யிற்றி னோய்நலி துன்ப முள்ளான்
குலவுபுண் ணியவி பூதி குண்டநீ றிடுக வென்றான். (ச)

செவியினிற் கேளான் போன்றே யிருந்துபின் றேடிப் பார்த்துப்
புவியினின் மருந்து வாங்கித் தின்றிடிற் போமெ டுத்துக்
குவியுமிச் சாம்ப லுன்றன் கொடியநோய் தீர்ப்ப தில்லை
விவிதமாம் பணம்ப றிக்க வேண்டியே வைத்தா ரென்றான். (ரு)

ஆங்கிகழ்ந் தெடுத்து ரைக்கு மம்மொழி யுணர்ந்து நின்று
தாங்கருங் கோபந் தன்னாற் சபித்தனன் கஞ்சி வந்து
வேங்கையாய்ப் பிறப்பா யென்றே வெளியிலவ் வெதிபோ முன்ன
நீங்கின னரவர் தீண்டி நெடியவப் பாவி யம்மா. (சு)

துனைவினி னரகந் தன்னிற் றேய்ந்திடத் தள்ளி விட்டா
ரனையவ னரகின் வீழா தருஞ்சிவ பணிமுன் செய்த
வினைவச மதனுன் மேன்மை விளங்கருச் சுனமா மூதூர்
தனையணைந் தடல்செ றித்த தழல்விழி யுழுவை யானுன். (எ)

தேடரு மகிமை பெற்றுத் திகழுமத் தலத்தில் வெய்ய
வேடனவ் விபூதி குண்ட நீறுமே னியின ணிந்து
காடதிற் புகுந்தான் கண்டு பிடித்ததக் கனற்கண் வேங்கை
யோடினன் குத்தித் தள்ள வொழிந்ததவ் வுருவ மன்னே. (அ)

நிறம்பொலி விபூதி குண்ட நீறுபட் டிறந்த வாற்றுற்
சிறந்திடும் விமான மேறிச் சிவகணஞ் சூழ வெள்ளிப்
பிறங்கல்வீற் றிருந்தான் மிக்க பெருமைசேர் குண்ட மேன்மை
சறங்குநீள் கடல்சூழ் பாரிற் கணிப்பரி தன்றே வென்றான். (கூ)

இலகிய வெதிவி பூதி குண்டநீ றணிந்தி ருந்து
* கலதைசெய் வியாதி நீங்கிக் கருணைசெய் வயித்திய நாத
னலமிகு பொற்றுள் போற்றி நவிலரு மகிழ்ச்சி கூர்ந்து
சிலபகல் வாசஞ் செய்து திருந்துமாச் சிரமஞ் சேர்ந்தான். (க0)

வேறு.

துலங்கும் வன்புக ழோங்குதுச் சீலனன்
னலங்கொள் வாய்மைச் சருக்க நவின்றன
னுலங்கொ டோளுதங் கன்றுயர் மான்மியப்
பலன்பு கன்ற சருக்கம் பகர்வன்மேல். (கக)

துச்சீலச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ககஉஉ.

---

* கலதை - கலக்கம்.

## உதங்கச்சருக்கம்.

பின்னரும் விபூதி குண்டப் பெருமையைச் சூத னென்னு
நன்முனி வரன்பு கன்று ஞன்மறை யுணர்ந்து நித்ய
கன்மநன் கியற்றிக் காமக் குரோதநீத் தண்ணல் பாதம்
பன்முறை பணிவோன் சீடர் பரிவுகூர் தரவி ருந்தான். (க)

சற்குண மறையோன் சீட னொருவன்றுழ் கயநோ யுற்றுப்
பற்பல துயரு ழந்து வருந்தியே குருவைப் பார்த்துச்
சொற்பெறு கால மூன்றுந் தெரிந்திடுந் தூயோ யிந்நோ
யற்பக லொழியா தென்னை யடுத்ததை யருள்செய் யென்றுன். (உ)

வேறு.

முன்புவை சியனி மூர்க்க நடைமிகு துரோகி பூசை
யன்புடன் செய்வோர் தம்மை யகந்தையா லிகழ்ச்சி செய்தாய்
தென்புவி யாளுங் கால தூதுவர் சினத்து வந்து
பின்பிடித் திழுத்து வெய்ய பெருநர கத்தில் வீழ்த்தார். (ங)

ஆங்கது நீங்கி நாயாய்ப் பிறந்தனை யதன்பின் வந்து
பாங்குள மறைக்கு லத்தி லுற்பவித் தனையப் பாவத்
தோங்கின கயநோய் தீரு முபாயமொன் றுரைப்பன் கொன்றைத்
தேங்கமழ் வயித்திய நாதன் செவ்விசேர் தலத்தைச் சேர்ந்து. (௪)

நிறைந்திடும் விபூதி குண்ட நீற்றினை யணிந்த போதிற்
குறைந்துநீங் கிடுமற் றென்றுற் கொடியநோய் தீரா தென்றே
யறைந்தன னனைய மேன்மைத் தலந்தனை யடுத்து வெண்ணீ
றிறைந்திடப் பத்தி நீங்கி யெடுத்தவ னுடலி விட்டான். (ரு)

அடுத்திடும் வியாதி தீரக் கண்டில னுசான் றன்னைக் வெ
கடுத்துடல் வெளுத்த தன்றிக் காரிய மில்லை யென்று
தொடுத்தன னனேகம் வார்த்தை தூகளுறு சாம்ப லென்ன
கொடுத்திடு மென்றி கழ்ந்து கொடுமொழி பின்னுஞ் சொன்னுன்.

உரத்துரத் துதங்கன் கூறும் வெய்யசொற் பொருமு ளுள்ளத்
திரக்கமில் பாவி காக மாகுவை யென்று சாப
மரைக்கணப் பொழுதுந் தாழா திட்டன னவன்வ லாரி
புரத்தினிற் பிறந்து கோயிற் புறத்திலோர் மரத்தி ருந்தான். (எ)

உத்தம மறையோன் சித்தா முதப்புன லுதய காலம்
பத்திமீ தார மூழ்கிப் பனிமதி யணிந்த வேணி
வித்தியன் றனைப்ப ணிந்து விறைந்திடும் விபூதி குண்டச்
சுத்தநீ றணிந்து மீதி கொண்டுதொன் னகர்க்குச் சென்றான். (அ)

எய்தும்வே தியன்ம கிழ்ந்தே யிந்திரன் பூசை செய்த
துய்யநா தனைவ ணங்கிச் சூரிய தீர்த்தப் பாங்கர்ப்
பையவக் குண்ட நீற்றுப் பரியபொக் கணத்தை வைத்துப்
பொய்கையிற் றீர்த்த பானம் பண்ணுதற் கெழுந்து போந்தான். ()

அத்தகு பொழுதிற் காக மனையபொக் கணத்தை மூக்காற்
கொத்திடக் குண்ட நீறு பட்டதாற் கொடியாந் தேகஞ்
சுத்தமாய் நீங்கித் தேவர் சூழ்ந்திட விமான மேறி
நித்தன்வாழ் கயிலை சார்ந்து நிலைமைபெற் றிருந்தா னம்மா. (க0)

இப்படி யனேகம் வாய்மை யெய்திய விபூதி குண்ட
மெய்ப்பெரு மேன்மை தன்னை விதிவழா தறுதி யாகச்
செப்பினன் புராண மூவா றுணர்ந்துளந் தெளிந்த தூயோ
னொப்பருந் தவத்தோ ரெல்லா முயர்பெரு மகிழ்ச்சி பூத்தார். (கக)

உதங்கச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ககஙுஙு.

---

## புள்ளிருக்குவேளூர்ப்புராணம்
## முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

# பிரசித்தபத்திரம்.

இப்புராணம், பல்லவராயப்பட்டு ம-ா-ா-ஸ்ரீ, அழகப்பிள்ளையவர்கள் தந்த ஏட்டுப்பிரதியின் உதவியால் அச்சிடப்பட்டது; இந்நன்றி யாவராலும் இனிது பாராட்டற்பாலது: இப்புத்தகம் வேண்டியவர்கள் சிதம்பரம் செங்கழுநீர்ப்பிள்ளையார்கோயிற்றெரு 110-ம் நெம்பர்வீட்டில் நம்மிடத்திலும், சிதம்பர சைவப்பிரகாச வித்தியாசாலை மானேஜர் ம-ா-ா-ஸ்ரீ, பொன்னுசாமிப்பிள்ளையவர்களிடத்திலும், சென்னையில் கலாரத்நாகர அச்சுக்கூடத்தலைவர் ம-ா-ா-ஸ்ரீ, வ. புஷ்பரதசெட்டியாரவர்களிடத்திலும், வயித்திசுரன்கோயிலில் மளிகைவியாபாரம் ம-ா-ா-ஸ்ரீ, முருகப்பமுதலியாரவர்களிடத்திலும் பெற்றுக்கொள்ளலாம்.

விலை அணா-அ, தபாற்கூலி அணா-க.

இங்ஙனம்,
☞ சு. சொக்கலிங்கமுதலியார்.

